

கம்பரின் பாத்திரங்கள்

# சிறியன சிந்தியாதான்

எஸ். ராமகிருஷ்ணன்

மீனாட்சி புத்தக நிலையம்

# சிறியன சிந்தியாதான்

1050

எஸ். ராமகிருஷ்ணன்






மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக்கோபுரத் தெரு; மதுரை-1

# பதிப்புரை

தமிழ்மொழிச் செல்வத்தின் வற்ருத ஊற்ருய் வளம் பயந்துகொண்டிருப்பது கம்பனது மாகாவியம். அம் மாகாவியத்தின் பாத்திரங்கள் அத்தனையும் தனித்தனிச் சிறப்புடையவை. அவற்றில் ஒன்ருக வரும் வாலியின் சோகச் சித்திரம் அற்புதமான ஒன்று.

சிறியன சிந்தியாதானுன வாலி 'நாடகத்தை'க் கம்பனது கண்கொண்டு ரசிப்பதும், விமர்சிப்பதும் மிகவும் சுவையானதொரு காட்சியாகும். அந்நாடகத்தைப் பல அங்கங்களாக்கி, இனிய காட்சி சோடனைகளுடன் காட்டுகிருர் பேராசிரியர் ராமகிருஷ்ணன். மிக வளமான தமிழ் நடையுடன் செல்லும் இந்நூல் சுவைப்பதற்கும், சிந்திப்பதற்கும் கருவூலமாக அமையும்.

இதனைத் தமிழ்மக்கள் பெரிதும் வரவேற்பார்களென்று நம்புகிருேம்.

எங்கள் வெளியீடாக இந்நூலை வெளியிடும் வாய்ப்பினை நல்கிய ஆசிரியருக்கு எங்கள் நன்றி.

மீனுட்சி புத்தக நிலையத்தார்

# பொருளடக்கம்

# சிறியன சிந்தியாதான்

## முன்னுரை

கம்பனது வாலி மகோன்னதமான பாத்திரம். அவன் வரம்பு இல்லாத ஆற்றலுக்கு உரியவன்; பஞ்சபூதங்களை யும் விஞ்சிய வலியினன்; எட்டுத்திக்கு யானைகளின் எதிர்ப்பை முறியடித்த இராவணனையும் எளிதாகப் பிடித்து வாலில் கட்டி வலி அடக்கிய வீரன்; கூற்றுவனும் அவன் பெயரைக் கேட்டால் குலைநடுங்குவான். சாவா மருந்தாகிய அமுதத்தை அடைவதற்காக வானவரும் தானவரும் மந்தரமலையை மத்தாகக் கொண்டு, வாசுகி என்ற பாம்பைக் கடைகயிருக ஆண்டு, பாற்கடலைக் கடைந்து களைத்துக் கலங்கியபொழுது, தனியனுக நின்று அக்கடலைக் கடைந்து அமுதத்தைத் திரட்டியவன் வாலி. அவன் கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன்மட்டு மல்ல; ஒப்பாரும் மிக்காரும் இல்லாத கொடைவள்ளல்; பாற்கடலில் கடைந்தெடுத்த அமுதத்தைத் தனக்கென்று கொஞ்சமும் கொள்ளாமல், தேவர்களுக்கு வழங்கிய இசைச்செல்வன். தனக்கென வாழாப் பிறர்க்குரியாள னுக வாழ்ந்து சான்ருண்மைக்கு எடுத்துக்காட்டாக விளங் கிய மாவீரன் என்பதைக் கருத்தில் கொண்டே கம்பன் வாலியைச் "சிறியன சிந்தியாதான்" என்று கணிக்கிருன்.

இலங்கை மன்னன் செருக்கை அடக்கிய இந்திர குமாரனுகிய வாலி தீயோனுக இருந்திருந்தால் இராவ

ணேயும் விஞ்சும் வகையில் கொடுமை புரிந்திருக்க முடியும். இராவண தர்பார், சகலரையும் அச்சுறுத்தி அடக்கியது. அவனது ஏகச்சக்கிராதிபத்தியத்தில், மணிமுடி வேந்தர்களும் "இன்னபோது இவ்வழி நோக்கும்'' என்பதை அறியமுடியாதவர்களாகக், "கரதலம் சுமந்த உச்சியராக," அச்சமும் அடிமைச் சிறுமதியும் உச்சத்தில் கொண்டவராகச் சிறுமைப்பட்டுக் கிடந்தனர். சீதையின் சிறைவைப்பு, மக்கட் பண்புக்கு அரக்கன் ஆட்சியில் ஏற்பட்ட ஆபத்தைக் கோடிட்டுக் காட்டியது. ஆனல் வாலி, அரக்கர் கோமானைப்போல வழியலா வழிமேல் சென்றோன் அல்லன். பழிதேடும் இழிசெயலை நஞ்சென வெறுத்த பெருந்தகை வாலி. எனவேதான், அவன் கிஷ்கிந்தை மண்டலத்தின் ஆட்சிப் பொறுப்புடன் அமைந்திருந்தான்.

இராமனது வாளிக்கு இரையான வாலி உடலிலிருந்து பெருக்கெடுத்தோடும் உதிர வெள்ளத்தில் கிடப்பதைக் கண்டு திகைத்துத் துடித்த அங்கதனைக் குறிப்பிடுங்கால், ''இடருடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்'' என்று கூறுகிறான் கம்பன். வாலியின் செங்கோன்மையால் சிறந்து விளங்கிய கிஷ்கிந்தையில் எவரும் எப்பொழுதும் எக்காரணத்தாலும் துன்பம் உற்றதில்லை என்பது கவியின் குறிப்பு. பிறந்த நாள் தொட்டு, இடர்ப்பட்டவரைக் கண்ணால் காணாத காரணத்தால், துன்பத்தை மனத்தாலும் கற்பனை செய்யாதவனாக அங்கதன் இருந்தான் என்பதைக் கவி மறைபொருளாகப் பெய்துவிட்டுச் செல்கிறான்.

நல்லாட்சியின் ஏற்றத்தையே எங்கும் கண்டிருந்த காரணத்தால், தந்தையின் சவக் கோலத்தைக் கண்ட அங்கதன்,

எந்தையே! எந்தையே! இவ்
  வெழுதிரை வளாகத்து யார்க்கும்
சிந்தையால் செய்கையால்ஓர்
  தீவினை செய்திலாதாய்

---

திரை-அலைகடல். வளாகம்-சூழப்பட்ட இடம்.

என்று கதறுகிறான்; பெற்றவன் பெற்றியை உற்றவன் உரைப்பதைக் கவிஞனும் ஆமோதிக்கிறான். மனத்தாலும் பிறருக்குத் தீமை கருதாத தூயோன் என்பதைக் கருத்தில் கொண்டே, கம்பன் வாலிக்குச் "சிறியன சிந்தியாதான்" என்ற ஏற்றத்தை அளிக்கிறான்.

இத்தகைய பெரியோன் இராகவனால் கொல்லப்படுகிறான். சடாயுவைத் தந்தையாக வரித்த இராமன், குகனையும், சுக்கிரீவனையும், இல்லாளைக் கவர்ந்துசென்ற இராவணனது தம்பியையும், சொந்தச் சோதரராக அந்தரங்க சுத்தியுடன் வரித்த இராகவன், கள்ளங்கபடம் அறியாத உத்தமனும் வாலிக்குக் காலனாகிறான்! மனிதப் பண்பு உள்ள அனைவரது உள்ளத்தையும் பிழிந்து எடுக்கும் சோக நிகழ்ச்சியாக இது அமைந்திருக்கிறது.

வாலி வதை நிகழ்வது எவ்வாறு? அதுவே இராமனது சீலத்துக்குச் சான்று என்ற வாதம் ஏற்கத் தக்கதா? அல்லது, மனிதனாய்ப் பிறந்த எவனும் மறுவில்லாப் புனிதனாய் இருக்க இயலாது என்றபடி வாலி வதை இராமனது வாழ்வில் ஏற்பட்ட ஒரு களங்கம் என்ற கருத்து கொள்ளத் தக்கதா? அல்லது, அண்ணன்-தம்பி சண்டையில் தலையிட்டுத் தம்பியின் ஆதரவைப் பெறும் கபட நோக்குடன் இராமன் காரியம் செய்துவிட்டானென்று குற்றம்சாட்டுவது பொருந்துமா?

செஞ்சுடரோன் மைந்தனான சுக்கிரீவன், கரவு கபடம் அறியாத கோமகனா அல்லது அரசு கட்டில் ஏறுவதற்காக அண்ணனுக்கே கூற்றுவனைத் தேடிக் கொணர்ந்த அக்கிரமக்காரனா?

குற்றமில்லாத வாலி, வஞ்சகரின் கொடுமையால் வீழ்ந்தான் என்று கருதிப் பரிவுகொள்வதா? அல்லது சந்தர்ப்பக் கோளாறினால், அந்தச் சான்றோன், காரணமில்லாத கொல்வினைக்கு இரையானானென்று எண்ணி மறுகுவதா? அல்லது தம்பியின் மனைவியைக் கவர்ந்து தாழ்வுற்ற வாலிக்குத் தருமம் அளித்த தண்டனை அது என்று இராமனது செய்கைக்கு அமைதி கண்டு வாலியை வெறுப்பதா?

உடன்பிறப்புப் பாசத்தை முற்றும் ஒழித்து, இராவணனைப்போல் பிறன்மனை நாடிய காமுகனாகத் தாழ்ந்தவனால், வாலியைச் 'சிறியன சிந்தியாதான்' என்று கவிஞன் கணிப்பது எங்ஙனம் பொருந்தும்?

இன்னோரன்ன வினாக்கள் எழுந்து, நம் மனத்தை அலைக்கழிக்கின்றன. இந்த வினாக்களுக்குக் கம்பன் தரும் விடை என்ன? "அறம் வளர்க்கும் கண்ணாளன்" என்று கம்பனால் புகழப்படும் இராமன் "சிறியன சிந்தியாதான்" என்று கவிஞனால் சிறப்பிக்கப்படும் வாலியைக் கொல்வதின் விளக்கத்தைக் காப்பியத்தின் கட்டுக்கோப்புக்குள் நின்று, தேர்ந்து தெளிவது அவசியமாகின்றது.

வாலி என்ற பெருமகனின் ஓங்கி உயர் குணச் சித்திரத்தை உருவாக்கி உணரும்பொழுதே, வாலி வதை என்ற புதிருக்கு விளக்கம் தேடியவர் ஆவோம்.

# தூயோரின் துணைவலி தேடு

இராவண வதமே இராம காதையின் பொருள். சிதை சிறைப்பட்டுள்ள இடத்தைத் தேடி அறியவும் இராவணாதியரை அழிக்கவும் இராமனுக்குத் துணைவலி தேவை. அந்த வகையில்தான், சுக்கிரீவனது நட்பு அமைகிறது; அதன் விளைவாக வாலிவதம் நிகழ்கிறது. ஆனால் இராமனோ இலக்குவனோ துணைபலத்தின் தேவையையும் சுக்கிரீவ சினேகிதத்தின் மேன்மையையும் தாமாக உணர்ந்து செயல்பட்டார்களென்று கூறமுடியாது.

அரக்கர் வஞ்சனையால் இல்லாளை இழந்து நின்ற இராமன் கதிகலங்கி மதிமயங்கி மறுகினான். "யாது செய்வது?" என்பதைப்பற்றி அவனால் சிந்திக்க முடியவில்லை. இலக்குவன்தான் சுற்றுமுற்றும் பார்த்து,

தேரின் ஆழியும் தெரிந்தனம், திண்டுதல் அஞ்சிப்
பாரினோடுகொண்டு அகழ்ந்ததும் பார்த்தனம்

என்று உரைத்துத் தூரம் போவதற்குள் சோரனைப் பிடிப்போம் என்று யோசனை கூறினான். இருவரும் தேரின் தடம் வழியே விரைந்தனர்; இறுதியில், அவர்கள் சடாயுவைக் கண்டு, சிதையைக் கவர்ந்து சென்ற இராவணனிடம் அவன் நடத்திய அருஞ்சமரைப்பற்றி அறிந்த பின்பும், துயர மிகுதியால் சிந்தை கலங்கி நின்றதாகவே கவிஞன் கூறுகிறான். அயோமுகியிடம் ஏற்பட்ட அனுபவத்துக்குப் பிறகும், அவர்கள் அடுத்துச் செய்வதைப் பற்றிச் சிந்திக்க இயலாதவராக இருந்தனர். கவந்தன் உருவில் எதிர்ப்பட்ட கந்தருவன்தான், சாபம் நீங்கப் பெற்றபின், இராம இலக்குவருக்குக் காரியம் முடிக்கும் சாதனம் தேட வழிதுறை கூறினான்.

தனு என்ற பெயரை உடைய கந்தருவனே, முனிவர் சாபத்தால், கவந்தன் எனப்பட்ட அசுரனானான். இந்திர

னுடன் போர் செய்தபொழுது அவனது வச்சிராயுதத்தால் தாக்குண்டதால், அந்த அசுரனது தலை மார்பில் புதைந்தது. எனவே கவந்தன் என்ற பெயர் பெற்றான். உலகத்தில் உள்ள பாவங்களெல்லாம் உருண்டு திரண்டதைப் போலக் கரிய பெரிய மலையின் வடிவத்தை மருவியிருந்த கவந்தன், இராம இலக்குவரை இரையாகக் கொள்ள எழுந்தபொழுது, அவர்கள் அவனது நெடிய கரங்களை வெட்டித்தள்ளினார்கள். இராமனின் செங்கை தீண்டியதால், பாவத்திலிருந்து விடுபட்ட கந்தருவன், கூட்டிலிருந்து கிளம்பிச் செல்லும் பறவையைப் போலத் தீய ராட்சஸ சரீரத்தை விடுத்துத் தூய கந்தருவ சரீரத்துடன் மேலே சென்றான். இராமனது அருளை எண்ணி அவனைத் தொழுதுவிட்டு, நன்றி மறவாத தனு, திக்குத் தெரியாத காட்டில் சீதையைத் தேடி அலையும் இராம இலக்குவர்க்கு அரிய யோசனை கூறி, உரிய உதவியைச் செய்தான். இணையில்லாச் சீதையைத் தேடுவதற்குத் துணையில்லாமல் முடியாது என்று அவன் அறிவுறுத்தினான். கடலைக் கடப்பதற்குப் புணை அவசியம்; அதைப் போலச் சீதையைத் தேடத் துணை வேண்டும் என்று அவன் போதித்தான். துணை வேண்டாதவராக, இராம இலக்குவர் தம்மைக் கருதலாமென்று அஞ்சி, ஊழிக் காலத்தில் உலகங்களை அழிக்கும் தன்னேரில்லா உருத்திர மூர்த்தியே பூதகணங்களின் துணைபலம் பெற்றிருப்பதைச் சுட்டிக்காட்டினான்.

துணை நாடுவதென்றால், நல்லோர், தீயோர் என்று பாகுபடுத்திப் பார்க்கவேண்டாமா? நல்லோரைக்கொண்டு தீயோரைத் தள்ளுவதுதானே விவேகம்?

நல்லினத்தின் ஊங்கும் துணையில்லை; தீஇனத்தின்
அல்லல் படுப்பதூஉம் இல்

என்பது தமிழ்மறை அல்லவா?

நல்லோர் நட்பை நாடுவதே அறத்துறை நெறி என்று கந்தருவனும் கருதினான். எனவே,

"தீயவர் சேர்க்கிலாது செவ்வியோர்ச் சேர்த்து"— எடுத்த காரியத்தை முடிக்கும்படி அவன் கூறினன். இவ்வாறு பொதுப்படையாகக் கூறுவதுடன் அமையாமல், ருசியமுக பர்வதத்தில் "கதிரவன் சிறுவன்" இருப்பதாகவும் அவனை "எதிர் எதிர் தழுவி, நட்பின் இனிது அமர்ந்து" அவன் துணையுடன் சிதையைத் தேடுவதே விழுமிய செயலென்றும் கந்தருவன் கருத்துரை பகர்ந்தான். கதிரவன் குமாரனை சுக்கிரீவனை அடைவதற்குச் சவரி என்ற தவமுதியாள் வழிகாட்டுவாளென்றும் அவன் இயம்பினன்.

உற்ற காரியத்துக்கு உரிய துணை தேவை என்பதை எடுத்துரைத்த கந்தருவன், கிஷ்கிந்தைக்கு வேந்தனுக விளங்கும் மாவீரன் வாலியிடம் செல்லும்படி யோசனை கூறவில்லை. அண்ணனுக்கு அஞ்சி அனுதையாக வாழும் சுக்கிரீவனிடம் செல்லும்படியே கூறுகிருன். வாலியை அவன் அறிந்திருக்கமாட்டானென்று வாதிக்க முடியாது. ருசியமுக பர்வதத்தில் ஒளிந்து வாழும் சுக்கிரீவனைப் புரிந்தவன், வரம்பில்லா ஆற்றலுக்குரியனுகக் கிஷ்கிந்தையில் கோலோச்சும் வாலியைத் தெரிந்திருக்க மாட்டான் என்று சொல்ல முடியாது. பத்துத் தலை இராவணனின் செருக்கை அடக்கிச் சிதையின் மீட்சியை எளிதில் சாதிக்கும் வல்லமை உடைய வாலியை விட்டுவிட்டுச் சுக்கிரீவனது நட்பை நாடும்படி கந்தருவன் இராமனுக்கு யோசனை கூறியதின் மர்மம் என்ன? இது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

மதங்காசிரமத்தில் உள்ள தவசிகளுக்குத் தொண்டு செய்து வந்த வேடமாது சவரி. அவள் இராமன் வருதலை முன்னதாகவே அறிந்து, அவனுக்குத் தீங்கனிகளைச் சேமித்து வைத்திருந்தாள். இராமனைக் கண்டவுடன் அந்தச் சந்நியாசினி ஆனந்தக் கண்ணீர் பெருக்கி அவனை வணங்கினுள்; தீங்கனிகளை அளித்து விருந்துண்ணச் செய்தாள்.

*மாண்டதுஎன் மாயப் பாசம்; வந்தது வரம்பில் காலம்*
*பூண்டமா தவத்தின் செல்வம்; போயது பிறவி*

என்று பரவசமடைந்து மொழிந்த சவரியாவது, வாலியிடம் செல்லும்படி கூறினளா? வீரத்துக்கும் வள்ளண்மைக்கும் விளக்காகத் திகழ்ந்த வாலியின் உதவிகொண்டு விரைவில் காரியத்தை முடிக்கும்படி அவள் ஏன் கூறவில்லை? அந்த வேடமாது இராமனிடம் எல்லையில்லாத ஈடுபாடு உடையவள். அவனால்தான் அவள் வீடுபேற்றினை அடையவிருக்கிருள். சீதை மீட்சியிலும் இராவண வதத்திலும் அவளுக்கு எத்துணை அக்கறை இருக்கவேண்டும்! எனினும் அவளும் வாலியைக் குறிப்பிடாமல், பரித்தேரோன் (சூரியன்) மைந்தனை சுக்கிரீவன் இருந்த குன்றத்துக்கே வழிகூறினள். கந்தருவனைப் போலவே, சவரியும் வாலியின் நட்பைக் கூடாநட்பாக ஒதுக்கிவிட்டாள் போல் தோன்றுகிறது! இதன் காரணத்தை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். ஆனல் இராமனுக்குத் துணைவலியின் தேவையைத் தெளிவுபடுத்திச் சுக்கிரீவனிடம் செல்லும்படி கூறியது கந்தருவனே என்பதையும், சவரி என்ற தவமுதியாள் சாற்றக் கேட்டே, இராமன் ருசியமுக பர்வதத்தை நோக்கிச் சென்றான் என்பதையும் நாம் தேர்ந்து தெளியமுடியும்.

## உணர்ச்சி வேகமும் ஒருதலைத் தீர்ப்பும்

சுக்கிரீவனைத் தேடிச்சென்ற இராமனது மனநிலையை மீண்டும் புலப்படுத்துவதற்காகக் கம்பன், அநுமப் படலத்துக்கு முன் பம்பைப் படலத்தை அமைக்கிறான். பம்பைப் படலம், சோலைகளால் சூழப்பெற்ற பம்பைப் பொய்கையை வர்ணிப்பதுடன், அந்த வாவியிலிருந்த அன்னம் முதலானவற்றைக் கண்ட இராமன் சிதையை எண்ணி நெஞ்சுருகிப் புலம்பியதையும் சித்திரிக்கிறது. பொய்கையில் மலர்ந்திருந்த தாமரையும், குவளையும் ஜானகியின் முகமும் கண்களும் போன்று இருந்ததைக் கண்ட இராமன் "கண்ணும் முகமும் காட்டுவாய், வடிவும் ஒருகால் காட்டாயோ?" என்று தடாகத்தைப் பார்த்துக் கேட்கிறான். ஓடி விளையாடும் களிமயிலைக் கண்டு சிதையின் சாயலை நினைவு கொண்ட தலைவன், "ஓடா நின்ற களிமயிலே, சாயற்கு ஒதுங்கி உள் அழிந்து கூடாதாரின் திரிகின்ற நீயும் ஆகம் குளிர்ந்தாயோ?"* என்று வினவுகிறான். பெண்யானைக்கு ஆண்யானை தன் துதிக்கையால் நீர் மொண்டு கொடுப்பதைக் கண்ட இராமன், தான் தன் தேவிக்கு வாவியிலிருந்து நீர் எடுத்துக் கொடுக்கும் பேற்றினைப் பெறவில்லையே என்று வருந்துகிறான். இரவு வந்தது; உயிர்ப்பன அனைத்தும் உறங்கின.

> பூஒடுங்கின; விரவு புள்ஒடுங்கின; பொழில்கண்
> மாஒடுங்கின; மரனும் இலைஒடுங்கின; கிளிகள்
> நாஒடுங்கின; மயில்கள் நடம்ஒடுங்கின; குயில்கள்
> கூஒடுங்கின; பிளிறு குரல்ஒடுங்கின களிறு.

அவை மட்டுமல்ல; "கழுதும் விழி துயின்றன" (கழுது - பேய்). நள்ளிரவிலும் விழி துயிலாது திரியும் பேயும்

---

*உள்-மனம். ஆகம்-மனம். கூடாதார்-பகைவர்.

புள்-பறவை. மா-மிருகம். மரன்-மரம் என்பதன் போலி. பிளிறு குரல்-பிளிறல்; ஒலித்தல். களிறு-ஆண் யானை. இங்கு யானைப் பொது.

உறங்கியபோதிலும், இராமன் உறங்காது இருந்தான். வெங்கதிர்க் கடவுள் நீர்க்கடலிலிருந்து எழுந்தபொழுதே, உறங்காது கிடந்த இராமன் துயரக் கடலிலிருந்து எழுந்தான். இரவியின் உதயத்துடன் இரவின் இருள் நீங்கிய பொழுதே இராமனது விரகவேதனையும் அகன்றது. சுக்கிரீவனைக் காணவேண்டுமென்ற காரிய நோக்கில்தான், காலையில் கவலைகள் அடங்கின.

வில்லும் கையுமாக வேகமாக நடந்துவரும் இராம இலக்குவரை, ருசிய முகத்திலிருந்த சுக்கிரீவன் காண்கிறான். வாலியுடன் பிறந்த சுக்கிரீவன் சிறந்த வீரன்; நிறைந்த பலமுடையவன். எனவே அவனை "நோன்மை சால் கவியரசு" (நோன்மை - வலிமை; கவி - குரங்கு) என்று கம்பன் குறிப்பிடுகிறான். ஆனால் அந்தச் சூரன், வீரர் இருவரைக் கண்டதும் என்ன செய்கிறான்? "இவர்கள் தெவ்வர் ஆம்" (தெவ்வர் - பகைவர்); "கறவுடைய வாலி ஏவலின் வரவினர்கள்" என்று அனுமனிடம் கூறிக்கொண்டே ஓடி ஒளிகிறான். வாலியிடம் அவனுக்குள்ள அச்சமும் வாலி-சுக்கிரீவப் பகையின் தடிப்பும் வெள்ளிடை மலை.

அச்சம் அறிவுக்குப் பகை. பயத்தால் மதி கலங்கிய சுக்கிரீவன், வரிசிலை வீரர்களைக் கூர்ந்து நோக்காமலேயே, வாலியின் ஏவலாட்கள் என்று கருதி மறுகுகிறான். ஆனால் அறிவிற் சிறந்த அனுமன் அம்மாதிரி மயங்கவில்லை. இராம லட்சுமணர் மனங்கலங்கி உயிர் தளர்ந்த நிலையில் வருவதைக் கண்ட அனுமன், இவர்கள் வாலியின் கட்டளையால் வருவோரா யிருக்கமுடியாது என்று துணிகிறான். வானரர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டுப் பிராமணன் வடிவத்தில் இராம லட்சுமணரிடம் செல்கிறான். அவர்கள் அறியாமல் மறைந்து நின்று, அந்த வீரர் சாந்தமூர்த்திகள் "கருணையின் கடலனையர்," "தருமமும் தகவும் இவர் தனமெனும் தகையர்" என்பதையும் "மறலி அஞ்சுறு விறலியர்" (மறலி - யமன்) என்பதையும் உன்னி ஓர்கின்றான். அதன்பின் அவர்கள் எதிரே சென்று தன்னை அறிமுகம் செய்துகொள்கிறான். "சுக்கிரீவனை நாடியே நாங்களும் வருகிறோம்" என்று இராமன் கூறியவுடன்,

கதிரவன் மைந்தனது பாக்கியத்தை எண்ணிப் பூரிக்கின்ருன் அனுமன். உடனடியாக,

**இரவிதன் புதல்வன்தன்னை இந்திரன் புதல்வன் என்னும்**
**பரிவிலன் சீறப் போந்து, பருவரற்கு ஒருவ ஞகி**
**அருவிஅம் குன்றில் எம்மோடு இருந்தனன்...**

என்று அனுமன் இராமனிடம் விளம்புகிருன். இராமலட்சுமணருக்குச் சீதையைப்பற்றிக் கவலை. அனும-சுக்ரீவருக்கு வாலியால் விளைந்த துன்ப துயரத்தைப்பற்றிக் கவலை. மனங் கலங்கி ஆவி சோர்ந்து நிற்கும் அரசகுமாரரின் வேதனையைப்பற்றி விசாரிப்பதற்குக்கூட அனுமன் மனம் செல்லவில்லை. கணநேரம்கூடக் காத்திருக்காமல் சுக்கிரீவனது கஷ்டத்தை எடுத்துரைத்து ஆதரவு நாடுகிருன். இரக்கமில்லாத வாலி சீற்றம் கொண்டதால், உலகத்துள்ள எல்லாத் துன்பத்துக்கும் தான் ஒருவனே உறைவிடம் எனச் சுக்கிரீவன் இன்னற்படுவதாகக் கூறி,

**கொடுங்குலப் பகைஞன் ஆகிக் கொல்லிய வந்த கூற்றை**
**நடுங்கினர்க்கு அபயம்நல்கும் அதனினும் நல்லதுண்டோ**

என்று கேட்கிருன். குலத்துக்கே கொடும் பகைவனாக நின்று, கொலைத்தொழில் புரியத் துணிந்துள்ள யமன் போன்ற பகைவனைக் கண்டு பதறுவார்க்குப் புகல் அளிப்பதே சாலச் சிறந்த தர்மம் என்பது அனுமனது வாதம். "சொல்லின் செல்வன்" அல்லவா? கேட்போர் உள்ளத்தைப் பிணிக்கும் வகையில் வாதித்துச் சுக்கிரீவனது நலம் தேடுகிருன்.

அனுமன் "மெய்ம்மையின் வேலி போல்வான்" என்றும், "தன் பெருங்குணத்தால் தன்னைத்தான் அலது ஒப்பிலாதான்" என்றும் கவிஞரால் பாராட்டப்பெற்றவன். அவன் வாலியைப் பரிவில்லாதவனென்று பேசுகிருன்.

---

இரவி-சூரியன். இந்திரன் புதல்வன்-வாலி. பருவரல்-துன்பம். அருவி அம் குன்று-நீர் அருவிகளை உடைய அழகிய குன்று.

குலத் தலைவனான வாலி, குலத்துக்கே சத்துருவாகிவிட்டான் என்ற கருத்து அவனது பேச்சில் இலைமறை காயாக அமைந்திருக்கிறது.

அனுமன், இராம இலக்குவர் வரலாற்றினை இளையவன் செப்பக் கேட்டறிகிறான்; தன் மெய் உருவத்தில் அவர்களுக்குக் காட்சி தருகிறான். அதன்பின் சுக்ரீவனை அழைத்துவரப் போகிறான். அவ்வமயம் அனுமனின் அறிவாற்றலைக் கண்டு வியந்த இராமன் "நல்லன நிமித்தம் பெற்றேம், நம்பியைப் பெற்றேம்" என்று உவகையுடன் உடன்பிறந்தவனிடம் கூறுகிறான். "துன்பம் தொலைந்தது, இன்பம் வந்தது" என்றே இறும்பூதெய்துகிறான். சீதையின் மீட்சியைச் சாதிக்கமுடியுமென்ற நம்பிக்கை தளிர்ப்பதே இந்தப் பரவசப் பேச்சுக்குக் காரணம்.

இராமன் மனநிலை அது. அனுமனுடையது எப்படி? "யானும் என் குலமும் இவ்வுலகும் உய்ந்தனம்" என்றெண்ணியவனாகச் செல்லும் அவன் சுக்கிரீவனைக் கண்டவுடனே கூறுவது என்ன?

வாலி என்ற அளவுஇலா வலியினான் உயிர்தெறக்
காலன் வந்தனன் இடர்க்கடல் கடந்தனம்

(தெற-அழிக்க; இடர்-துன்பம்) என்று கூறி ஆனந்தக் கூத்தாடுகிறான். "ஊழியால் எளிதினில் நிற்கு அரசு தந்து உதவுவார்" என்று சொல்கிறான்.

வாலியைக் கொல்வதாக இராமன் வாக்களித்தானா? இல்லை. வாலி நிகழ்த்திய கொடுமை என்னவென்பதையாவது இராமன் உசாவினானா? அதுவும் இல்லை. அரக்கர் வஞ்சனையால் ஏற்பட்ட அவலநிலையை எண்ணி எண்ணி நெஞ்சுருகி நின்றவன், வாலியைப்பற்றிய பேச்சைக் கேள்விப் புலனில் பதிவு செய்துகொண்டதாகக்கூடத் தோன்றவில்லை. ஆயினும் சத்தியமூர்த்தியாகிய வாயுகுமாரன் "வாலிக்குக் காலன் வந்தான்" என்றே செங்கதிர்ச் செல்வனின் மைந்தனிடம் திட்டவட்டமாகச் செப்பிவிடுகிறான்.

வரம்பில்லாத ஆற்றலுக்கு உரிய வாலியை வெல்லும் வல்லமை இராமனுக்கு இருப்பதாக அனுமன் அனுமானித் திருக்கலாம். ஆனால் வல்லமை இருந்தாலும் போதுமா? விருப்பம் வேண்டாமா? வீரர் இருவரின் வரலாற்றை விவரித்துரைத்தபிறகு, “சீதையைத் தேடுதற்கு உனது உதவியை நாடி, உன்னுடன் நட்புக்கொள்ள வந்திருக்கின் றனர்” என்று கூறிவிட்டு, மீண்டும் “இந்திரன் சிறுவ னுக்கு இறுதி இன்று இசைதரும்” (இசைதரும்-நேரிடும்) என்று அனுமன் கூறுகிறான். இங்கு வாலியின் முடிவுக்கு நேரமே குறித்துவிடுகிறான். இராம இலக்குவர் அருளுக் குச் சுக்கிரீவன் பாத்திரமாகிவிட்டதால் வாலி வதம் இயல் பாகவும் உறுதியாகவும் உடனடியாகவும் ஈடேறிவிடு மென்பது அனுமன் கருத்து. இராமனது மனநிலையைத் தேர்ந்து தெளிந்த அனுமன், அவனைக் கொண்டு வாலி வதத்தைச் சாதித்துவிட முடியுமென்பதைத் துணிகிறான். அதனால்தான், இந்த இடத்தில், கம்பன் அனுமனைக் குறிப்பிடும்பொழுது,

மந்திரம் கெழுமுநூல் மரபுஉணர்ந்து உதவுவான்

என்று சுட்டியிருக்கிறான். (கெழுமு - பொருத்தமான.) அமைச்சு நிலைக்கு உரிய நீதிநூல்கள் அனைத்தும் கற்றுத் தெளிந்த அனுமன், மதியூகமான மந்திராலோசனை அமையப்பெற்றிருப்பதால், உரிய நேரத்தில் அரிய வழி காட்டுகிறான். “உன்னை அமைச்சனாகப் பெற்ற எனக்கு ஆகக்கூடாத செயலும் உண்டா?” என்று சுக்கிரீவன் போற்றுவதில் வியப்பொன்றுமில்லை.

அடுத்த காட்சி: இராம - சுக்கிரீவர் சந்திப்பு. முன்பு வீரர் இருவர் தொலைவில் தோன்றியதும் ஓடி ஒளிந்த இரவி குமாரன், இப்பொழுது எட்ட வரும்போதே அவர் களை நன்கு பார்க்கிறான். பார்த்துப் பரவசமடைந்து, நின்றநிலை பெயராமல் குத்திட்டு நிற்கிறான். கண்களால் கண்டு களித்தபின், காட்சியைக் கருதி உணர்கிறான்.

ஆறுகொள் சடிலத்தானும்
அயனும்என்று இவர்கள் ஆதி

1050

வேறுள குழுவைஎல்லாம்
மானுடம் வென்றதம்மா!

என்று தேர்ந்து தெளிகிறான்.

சுக்கிரீவன் இராமனை அணுகியவுடன் தலைவன் அவனுக்கு இருக்கை காட்டி உபசரிக்கிறான். "விதியின் பயனாய், தெய்வக் கொடையாய், உன்னை அடையப் பெற்றேன்" என்று கூறுகிறான் சுக்கிரீவன். உடனே இராமன், தான் அவனைத் தேடிவந்த நிலையை நயமாகக் கூறுகிறான்: "நீ இங்கு இருக்கிறாய் என்று தவமுதியாள் சவரி சாற்றத் தெரிந்து, உன்னால் எங்கள் பெருந்துயர் நீங்குமென்று கருதி வந்தோம்" என்று இராமன் கூறுகிறான். ஆனால் உதவி கோரும் இராமனிடமே அபயம் வேண்டுகிறான் சுக்கிரீவன். வலிமிக்க வாலி தன்னைக் கொல்லக் கருதியதையும், உலகெங்கும் ஓடியும் விடாது தொடர்ந்ததையும், வாலி வராமல் தடுக்கும் சாபக் காப்பு உடைய இந்த மலையில் இறவாது வாழ்வதையும் சுருக்கமாகக் கூறி,

சரண்உனைப் புகுந்தேன் என்னைத் தாங்குதல் தருமம்

என்றான்.

என்றஅக் குரங்கு வேந்தை இராமனும் இரங்கி நோக்கி
உன்தனக் குரிய இன்ப துன்பங்கள் உள்ள முன்னாள்
சென்றன போக;மேல்வந்து உருவன தீர்ப்பல்;அன்ன
நின்றன எனக்கும் நிற்கும் எனமொழியும் நேரா.

துன்புற்றாரைக் கண்டு இரங்கும் தூய உள்ளம் படைத்த இராமன், "இதற்குமுன் நீ அனுபவித்த இன்பதுன்பங்கள் கிடக்க, இனி உனக்கு வரும் துன்பங்களை நான் துடைப்பேன். என்னால் நீக்கமுடியாத உன் துன்பங்களைப் பாதி பாதியாகப் பகிர்ந்து அனுபவிப்பேன்" என்று கூறுகிறான். நண்பன் நலம் நாடி அனைத்தையும் அர்ப்பணிப்ப

---

ஆறுகொள் சடிலத்தான் - கங்கா நதியைச் சடையில் கொண்ட சிவன். குழு - (தெய்வ) கணங்கள்.

தும் துணைவனுக்குத் துன்பம் நேரிடும்பொழுது அதை உடன் இருந்து அனுபவிப்பதும் சிநேகித தர்மத்தின் சிறப் பாகும். எனவே சுக்கிரீவனைச் சிநேகிதனாகக் கொள்ளும் இராமன் இவ்வாறு உறுதிமொழி புகன்றதில் பிழை யில்லை; பெருமையுண்டு, ஆனால் அவன் இத்துடன் அமைகின்றானா? இல்லை. மேலும் கூறுகிறான்:

மற்று இனி உரைப்ப தென்னே?
  வானிடை மண்ணில் உன்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்.
  தீயரே எனினும் உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்.
  உன்கிளை எனதுஎன் காதல்
சுற்றம்உன் சுற்றம் நீஎன்
  இன்னுயிர்த் துணைவன் என்றான்.

"உன் உறவினர் என் உறவினர்; என் பந்துக்கள் உன் பந்துக்கள். நீ என் பிராணசினேகிதன்" என்று இராமன் கூறுவது அவனது பெருமைசால் மன விரிவுக் குத் தலையாய சான்றாகும். சாதியாலும் குலத்தாலும் உயர்வுதாழ்வு கருதும் ஒற்றைச்சாண் நினைப்பால் மாசு அடையா மக்கட் பண்புக்கு இலக்கியமாகத் திகழும் இராமன், கடைநிலையிலுள்ள குரங்கினத் தலைவன் என்று சுக்கிரீவனை இகழ்ச்சியாக நோக்குவானா? மாட்டான். நாவாய் வேட்டுவனான குகனிடம் உறவு கொண்டதைப் போலவே, சுக்கிரீவனிடமும் நேசம் கொள்கிறான். "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற மனிதப் பண்பு இங்கு சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் கண்டு, நாம் பூரிக் கிறோம்; பரிசுத்தமடைகிறோம்.

ஆனால் இந்த வாக்குறுதியில் இராமன் அவசரப் பட்டுக் காரியம் செய்யும் குறையையும் காண்கிறோம். "விண்ணிலாயினும் மண்ணிலாயினும் வேறு எங்காயி னும் உன்னை வருத்தியவர் என்னை வருத்தியவராவார்" என்று கூறுவதில் பிழை இல்லையென்றாலும், குறிப்பிட்ட சூழ்நிலையில் வாலியால் அல்லற்பட்டு ஆற்றாது அபயம்

கோரும் சுக்கிரீவனிடம் இவ்வாறு கூறுவது, அர்த்தபுஷ்டி யுள்ளதாக அமைந்துவிடுகிறது. வாலியை எதிர்ப்பதற்கு உடன்பட்டுவிட்டான் என்றே வானர வீரர்களுக்குத் தோன்றுகிறது. எனவே அவர்கள் ஆனந்த ஆரவாரம் செய்கின்றனர். காதலியை இழந்து கடுந்துயர் உற்றுக் கானகத்தில் திண்டாடும் இராமன், சீதையை மீட்கும் எண்ணமே சிந்தையில் நிறைந்திருப்பதால், நுணுகி எண்ணுமல், அண்ணன்-தம்பி பகை வரலாற்றை விசாரித்து அறியாமல், அவசரப்பட்டு உணர்ச்சி வேகத்தில் பேசுகிறுன். அதனுல்தான் "தீயரே எனினும் உன்னேடு உற்றவர் எனக்கும் உற்ருர்'' என்றுகூடக் கூறிவிடுகிறுன்! சிற்றினத்தை நஞ்செனவெறுக்கும் நல்லியல்புக்கு உரிய தலைவன், நல்லவை செய்தல் தன் கடன் என்று கருதிச் செயல்படும் சான்ருண்மையின் மணிமுடியைத் தொடும் தன்னேரில்லாத் தலைவன், நல்லவர் தீயவர் வேற்றுமை பாராமல், சுக்கிரீவனது நண்பர் அனைவரையும் தன் நண்பராகக் கொள்வதாகக் கூறுகிறுன் என்ருல், அது அவன் உணர்ச்சி வேகத்தைத்தானே காட்டுகிறது?

முன்பு சீதையுடன் இருந்தபொழுது, இராமன் குகனை நண்பனுகக் கொண்டான். அப்பொழுது குகனிடம் இம் மாதிரி கூறவில்லை. குகனிடம் கூறினுன்:

என் இன்னுயிர் அனையாய் நீ
  இளவல் உன் இளையான் இந்
நன்னுதல் அவள் நின் கேள்
  நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடையது நான் உன்
  தொழில் உரிமையின் உள்ளேன்.

குகனுக்கு இலக்குவனைத் தம்பியாக்கினுன்; சீதையைக் கொழுந்தியாக்கினுன். அசோகவனத்தில் 'தவம் செய்த தவமாம் தையல்'' எனத் திகழ்ந்த சீதை இதை நினைவில் கொண்டு, அந்த அழியா நட்பைப் போற்றுகிறுள்:

ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, எம்பி நின் தம்பி, நீ

**தோழன், மங்கை கொழுந்தி, எனச்சொன்ன**
**வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.**

அந்தக் குகனிடமும் "தீயரே என்னினும் உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார்" என்று இராமன் கூறவில்லை. ஆனால் இப்பொழுது அப்படிப் பேசுகிறான் என்றால், அது சுக்கிரீவனுடன் பேசும்பொழுது இருந்த மனநிலையைத் தான் காட்டுகிறது

அடுத்த காட்சி, சுக்கிரீவனது இல்லத்தில் நிகழ்கிறது. "போகபூமியையும் ஏசும் புதுமலர்ச்சோலை"யில் அமைந்திருந்த அந்த விடுதியில், இராமன் கனி கிழங்கு முதலியவற்றைப் புசிக்கிறான். விருந்தாளிக்கு உபசரணை செய்வதற்கு வீட்டுத் தலைவி வராதது கண்டு திகைக்கிறான். அவன் மனத்தில் பல சிந்தனைகள் தோன்றுகின்றன. ஆழ்ந்த யோசனைக்குப் பின்,

**பொருந்தும் நன்மனைக்கு உரிய பூவையைப்**
**பிரிந்துளாய் கொலோ நீயும்?**

என்று வினவுகிறான் சுக்கிரீவனை.

மனைவியைப் பிரிந்த துன்பத்தால் மறுகும் இராமன் பரிவுடன் வினவுகிறான். அப்போது சூரியகுமாரனே விடை தருவது உசிதமல்ல என்று எண்ணிய அமைச்சன் அனுமன் பதில்கூற எழுந்திருக்கிறான். வினவியதற்கு நேரே விடை சொல்லாமல் எங்கிருந்தோ தொடங்கி வாலி - சுக்கிரீவன் பகை வரலாற்றை விரித்துரைத்து விடுகிறான் அவன்.

அனுமன், வாலியின் வரம்பில்லாத ஆற்றலைப் பல வாறாக எடுத்துரைக்கிறான். ஆதிசேடன் கிடந்து தாங்கும் பூமியை நடந்து தாங்கும் ஆற்றலை உடையவன் வாலி என்றும், கடல் ஒலிப்பதும், காற்று இயங்குவதும், கதிர் மதிகள் உலவி வருவதும் அவன் சினத்துக்கு அஞ்சித் தான் என்றும் அனுமன் கூறுகிறான். வாலி தனியொருவனாக நின்று பாற்கடலைக் கடைந்த பேராண்மையையும் எடுத்து இயம்புகிறான். வாலியை வெல்ல விரும்பி

இராவணன் வலிந்து வந்தபொழுது, வாலி அவனை வாலில் கட்டிக்கொண்டு தாவியபடியால், இராவணனது உதிரம் சிந்தாத உலகம் இல்லையென்றும் அனுமன் விளம்புகிறான். வாலியின் "வால் செலாத வாய் அலது இராவணன் கோல் செலாது" என்றும் அனுமன் கூறுகிறான். "வாலியின் வால் செல்லாத இடததில்தான் இராவணனின் கோல் செல்லும்' என்று இதற்குப் பொருள் கொள்வர். ஆனால் வாலி தினந்தோறும் எட்டுத் திசைகளும் சென்று கண்ணுதற் கடவுளைப் பூசித்து வருவதாக அனுமனே கூறுவதால், வாலி செல்லாத இடமில்லை என்றாகிறது. திக்கெட்டும் இராவணன் ஏகச்சக்கிராதிபத்தியம் செலுத்துவதை வாலியின் தினசரி விஜயம் தடுக்கவில்லை. அதனால்தான், வாலியின் "வால் செலாத வாய் அலது இராவணன் கோல் செலாது" என்பதற்கு வேறு பொருள் இருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது. "வாலியின் வால்வலியை ஒழித்தால் அல்லாமல் இராவணனது கோல்வலியை ஒழிக்க இயலாது" என்பது அனுமன் கருதிய பொருளென்று அனுமானிக்க இடம் உண்டு. வாலியின் வாலில் கட்டுண்டு மெலிந்துபட்டதும், இராவணன், தன்னைத் தோழனாக ஏற்கும்படி வாலியிடம் மன்றாடினான். வாலியும் உவகைகொண்டு ஒப்புதல் தெரிவித்தான். இருவரும் அக்கினி சாட்சியாக உயிர் நட்பினராக உறுதி செய்துகொண்டனர். இராவணனும் ஒரு மாதம் கிஷ்கிந்தையில் தங்கிப் புதிய தோழனுடன் அளவளாவிய பிறகே இலங்கை சென்றான். ஆபத்துக் காலத்தில், இராவணனுக்கு உதவ வாலி கடமைப்பட்டிருந்ததால், வாலியின் பலத்தை அழிக்காமல் இராவண வதம் சாத்தியமில்லை என்பதை இங்கு அனுமன் எடுத்துக் கூறுகிறானென்று துணியலாம். இராவண வதத்தில் கண்ணும் கருத்துமாயுள்ள இராமனுக்கு வாலி வதத்தில் அக்கறை உண்டாக்குவதற்கு இந்த உண்மையை எடுத்துக்காட்டுதல் நலம் என்று அமைச்சுக் கலையில் வல்லவனான அனுமன் கருதியிருக்கலாம்.

வாலியின் ஆற்றலை எடுத்துரைக்கும்பொழுது, எதிரியின் பலத்தில் சரிபாதி தன்பால் வரும்படி வரபலம்

கொண்டவனாகவும் வாலி விளங்குவதை வாயு குமாரன் விளக்குகிறான்.

அதன்பின், அண்ணன்-தம்பி பகை மூண்ட சோகக் கதையை அவன் இயம்புகிறான். வாலி அரசனாகவும் சுக்கிரீவன் இளவரசனாகவும் அமர்ந்து சோதர வாஞ்சை யுடன் இணைந்துநின்று நல்லாட்சி நடத்திவந்தனர். அவ் வமயம், மாயாவி என்ற அசுரன் வாலியுடன் அமர் செய்ய வந்தான். மல்லமரில் தோற்றோடிய மாயாவி, ஒரு பிலத் துவாரத்தின் வழியாகப் பாதலம் புகுந்தான். சீற்றம் கொண்ட வாலி, மாயாவியைத் தொடர்ந்துசென்று அவ னைப் பிடித்துவருவேனென்று கூறித் தம்பியைப் பிலத் துவாரத்தில் காவலிருக்குமாறு கட்டளையிட்டுவிட்டுச் சென்றான். இருபத்தியெட்டு மாதங்களாகியும் வாலி திரும்பவில்லை. அவ்வமயம் காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்வோமென்று கருதிச் சுக்கிரீவன் அரசுகட்டிலை ஆக்கிரமிக்க முயற்சித்தானா? இல்லை. அவன் "சோகம் எய்தினான்." அனுமன் கூறுகிறான்:

அழுது அழுங்குறும் இவனை அன்பினால்
தொழுது இரந்து'நின் தொழில்இது; ஆதலால்
எழுது வென்றியாய்! அரசு கொள்க'எனப்
'பழுதுஇது' என்றனன் பரிவு நெஞ்சினான்.

அண்ணனை எண்ணிப் புலம்பினான் சுக்கிரீவன். அமைச்ச ரும் அல்லாதவரும் அவனை அன்பொடு இறைஞ்சினர். 'அரசுப் பொறுப்பை ஏற்றுக்கொள்' என்று கெஞ்சினர். ஆனால், அது தவறான செயல் என்று கூறிவிட்டான் இரக்கமிகு சுக்கிரீவன். முடியை மறுத்தான்; வெம்பிக் கொதித்தான்: "நானும் பிலம் புகுந்து அண்ணனைத் தேடுவேன்: அவன் கொல்லப்பட்டிருந்தால், அந்த மாயாவி யைக் கொல்வேன்; அல்லது அங்கேயே மாண்டு மடி வேன்" என்று மூண்டு நின்றான். பெரியோர்தாம் அவனைத் தடுத்துநிறுத்தி ஆறுதல் கூறினர். "காவலன் காக்காவிட் டால் எங்களைப் பரிபாலிப்பவர் யார்?" என்று கேட்டு வாதித்து, அவர்கள் அவனை அமைதிப்படுத்தினர்.

மாயாவி வருவதைத் தடுக்கப் பிலத்துவாரத்தில் மலைகளை அடுக்கிவிட்டுச் சுக்கிரீவனை இட்டுச்சென்று இறைமைப் பொறுப்பை அளித்தனர்.

மாயாவியை மடித்து மீண்ட வாலி, பிலத்தின் வழி அடைபட்டிருப்பதைக் கண்டான். தம்பியை விளித்தான். மறுமொழி பெருனய் "இளவலார் இருந்து அளித்த ஆறு நன்று!" என்று எண்ணி அடுக்கிய மலைகளை உதைத் தெறிந்தான்.

ஏறினுன் அவன்; எவரும் அஞ்சுறச்
சீறினுன்; நெடுஞ் சிகரம் எய்தினுன்.

தம்பி தனக்குத் துரோகம் செய்துவிட்டதாகக் கருதிய வாலி வெஞ்சினம் கொண்டான். பிலத்துவாரம் அடைபட்டிருந்ததும், அரியாசனத்தில் தம்பி அமர்ந்திருந்ததும், அவனது வெஞ்சினத் தியைக் கொழுந்துவிட்டெரியச் செய்தன. சுக்கிரீவன், வாலியை எதிர்கொண்டு சென்று அடிபணிந்து, அண்ணன் வராத காரணத்தால் துயருற்றுக் கிடந்த அவனை எவ்வாறு கட்டாயப்படுத்திச் சிம்மாசனத்தில் ஏற்றிவைத்தனர் என்பதை விளக்கினுன்.

ஆணை அஞ்சிஇவ் வரசை எய்திவாழ்
நாணில் லாதஎன் நவையை நல்குவாய்

என்று கெஞ்சிக் கேட்டான். ஆனல் வாலி அதற்குச் செவி சாய்க்கவில்லை. பாசமில்லாத தம்பி மோசம் செய்வதாக எண்ணி, அவன் "கோணினுன், நெடுங் கொடுமை கூறினுன்." கடல் கடைந்த கரதலங்களால் தம்பியின் உடல் கடைந்தான்; வானர வீரர்கள் குடல் கலங்கிட ஓடி ஒளிந்தனர். சக்கரவாள பர்வதத்துக்கும் அப்பால் விரைந்தோடிய சுக்கிரீவனைத் தொடர்ந்து ஓடிப் பிடித்த வாலி,

பற்றி அஞ்சலன் பழியின், வெஞ்சினம்
முற்றி நின்றதன் முரண் வலிக்கையால்

---

நவை-குற்றம். நல்குவாய்-பொறுத்தருள்வாய்.

தம்பியைக் கொல்லப் போனான். உடன்பிறந்தவனைக் கொன்றால் பழியுண்டாகும் என்பதைக்கூட, வெஞ்சினம் முற்றிநின்ற வாலி உணரவில்லை. நல்லவேளையாக, அவன் சற்றுச் சோர்ந்திருந்த சமயத்தில், சுக்கிரீவன் அவன் பிடியிலிருந்து தப்பி வந்து, வாலி வரமுடியாத இந்த மலையில், சாகாமல் காலம் தள்ளுவதாக அனுமன் கூறுகிறான்.

தூய அன்பு தீய பகையாக மாறிவிட்டது! உயிருக்கு உயிராக வாழ்ந்த தமையனும் தம்பியும் கொடும் பகைவராகிவிட்டனர். ஐயமும் அவசரப் புத்தியும் அண்ணன் நெஞ்சைக் கல்லாக்கிவிட்டன. அவன் தம்பிக்கு யமனாக முற்படுகிறான். இதைக் கண்ட தம்பியும் அண்ணனுக்குக் கூற்றுவனைத் தேடிக்கொண்டிருக்கிறான்.

கிஷ்கிந்தைச் சமுதாயம் வளர்ச்சி அடையாத சமுதாயம். வினைத் தெரியாத - விவரம் புரியாத - சமுதாயம். அங்கு, கள்ளம்கபடம் இல்லை; சூதுவாது இல்லை. அண்டிக் கெடுப்பதும் அடுத்தவனை அடிமைப்படுத்துவதும் இல்லை. ஆனால் அதே சமயத்தில் அது குழந்தைப் பருவத்திலிருந்த சமுதாயமானதால், நல்லறிவு வளர்ச்சியும் இல்லை. நுண்ணறிவு அமைவதற்கு அனுபவம் தேவை. வாழையடி வாழையாக மனிதகுலம் பெறும் அனுபவமும், அதைப் பகுத்துத் தொகுத்துப் பொதுமைப்படுத்தி மனிதகுலம் திரட்டிக்கொள்ளும் அறிவுமே பண்பாடு எனப்படுகிறது. இத்தகைய பண்பாடு பெறாத சமுதாயம், வாழ்வின் மேடுபள்ளங்களை, ஏற்றத்தாழ்வுகளை, நெளிவுசுளிவுகளை, சுழல் சிக்கல்களை முழுமையாகக் கற்றறிந்து, உண்மையை உணரமுடிவதில்லை. "கண்டதே காட்சி, கொண்டதே கோலம்" என்ற முறையில் இயங்குகிறது. காட்சியளவையில் கருத்தை இழக்கும் சமுதாயம் அது. எனவே தான், வாலி தீர விசாரித்தறியாமல் கண்ணால் கண்டதே மெய்யென்று எண்ணிச் சுக்கிரீவனைத் துரோகியாகக் கருதுகிறான். அண்ணன் அநீதி இழைப்பதைக் கண்ட தம்பியும் அவனைக் கொல்வதற்குத் துணை வேண்டும் என்று 'தவம்' செய்கிறான்!

இலங்கையில் இராவணனுக்கும் விடணனுக்கும் பகை ஏற்படுகிறது. ஏன்? இராவணன் அதர்ம வழியில்

செல்வதே காரணம். அரக்கர் அல்லாதவரை அவன் துச்சமாக மதித்தான். அமரரை வருத்தினுன். கொச்சை மானுடரை நசுக்குவேன் என்ருன். சீதையை விடுதலே செய்ய மறுத்தான். சோதர வாஞ்சையை நீதியால் வந்த நெடுந்தருமத்துக்கு உட்படுத்திய வீடணன், அண்ணனை எதிர்த்து இராமனுடன் சேர்கிருன்.

கிஷ்கிந்தையில் வாலி சுக்கிரீவன் பகை அதர்ம-தர்ம முரண்பாட்டில் முளைக்கவில்லே. அறம் வெல்வதற்காகப் பாவம் தோற்பதற்காக, வாலி-சுக்கிரீவன் பகை மூண்ட தாகக் கூறமுடியாது. இருவரும் மனம் மாறுபடக் காரணமே இல்லே. இளையவன் மூத்தவன் கிரீடத்லதைக் கவரத் துணியவில்லே. இங்கு ஏற்பட்ட பகைக்கு அந்தச் சமுதாயத்தின் பிற்பட்ட நிலேமைதான் காரணம்.

ஆனல் இவ்வாறெல்லாம் நிதானமாக யோசித்துப் பார்க்கும் மனநிலேயில் இராமன் இல்லே. தமையன் தம்பிக்கு அநீதி இழைக்கிருன் என்பதே அவன் உள்ளத்தில் தைக்கிறது. அதுவும் அனுமன் கடைசியில் கூறிய விஷயம்தான் அவனை ஒரு குலுக்குக் குலுக்கிவிடுகிறது. அனுமன் இறுதியில் கூறியது என்ன?

உருமை என்றுஇவர்க்கு உரிய தாரமாம்
அரு மருந்தையும் அவன் விரும்பினுன்
இருமை யுந்துறந்து இவண் இருந்தனன்
கருமம் இங்குஇதுஎம் கடவுள்! என்றனன்

"எம் இறைவனே! இவனுடைய மனைவியான உருமையையும் வாலி கவர்ந்துகொண்டான். செல்வம், மனைவி என்ற இரண்டையும் (இருமையும்) இழந்தவனுகச் சுக்கிரீவன் இங்கு இருக்கிருன். இதுதான் நடந்த சேதி" என்று அனுமன் தான் கூறிவந்த வரலாற்றை முடித்தான்.

இதைக் கேட்டவுடன் இராமன் வாலியின்மீது சினங் கொண்டான். அவனது செந்தாமரைக் கண்கள் முற்றிலும் சிவந்து செவ்வாம்பல் மலர்களைப்போலக் காட்சியளித்தன. இராமனது சினத்துக்குக் கவி காரணம் கூறுகிருன்:

ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்ன
ஆரம் வீங்குதோள் தம்பிக்குத் தன்னரசுரிமைப்
பாரம் ஈந்தவன்; பரிவிலன் ஒருவன்தன் இளையோன்
தாரம் வெளவினன் என்றசொல் தரிக்குமாறு உளதோ.

உடன்பிறந்த பரதனுக்காக, உரிமையாகக் கிடைத்த சாம்ராஜ்யத்தைத் தியாகம் செய்த சான்றோன் இராமன். அண்ணனொருவன் தம்பியின் மனைவியை அபகரித்தான் என்ற சொல்லைப் பொறுக்கமுடியுமா? சீதையைக் கரம் பிடித்த நாளிலேயே, "இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்" என்று 'செவ்வரம்' தந்த செம்மல், பிறன்மனைவியை, அதுவும் கூடப்பிறந்த தம்பியின் மனைவியை வெளவினான் வாலி என்ற சொல்லைக் கேட்டு, வாளாவிருப்பானோ? எனவே அவன் சினம் கொண்டு சீறுகிறான்.

சினங்கொண்டதால்தான் விவேகம் துணை புரிய முடியாது போயிற்று. அமைதியாக ஆலோசித்திருந்தால், இராமன் தன் சமுதாய அறத்தை அளவுகோலாகக் கொண்டு, வாலியின் நடத்தையைக் கணித்திருக்கமாட்டான். கிஷ்கிந்தைச் சமுதாயம், இயற்கைத் தொடர்பிலிருந்து முறியாத இளம்பருவச் சமுதாயம். இயற்கையோடு இசைந்து வாழ்வதால், அதைக் குரங்குச் சமுதாயம் என்றார் போலும்! அபேதப் புணர்ச்சி அந்தச் சமுதாயத்தின் அறம. அதனால்தான் வாலி வதைக்குப் பின் முடிசூட்டப்பெற்ற சுக்கிரீவனும் "தாழ்குழல் இளமுலைச்சியர்" பலரோடு இன்புறுவதாகக் கவி கூறுவான்:

தித்தி யாநின்ற செம்கிடை வாய்ச்சியர்
முத்தம் வாள்நகை முள்எயிறு ஊறுதேன்

---

ஈரம்-அன்பு. சிற்றவை-சிற்றன்னை. ஆரம்-ரத்தினமாலை. வெளவினான்-கவர்ந்தான். தரிக்குமாறு-பொறுக்குமாறு.

தித்தியா நின்ற-தித்திக்கின்ற. செம்கிடை வாய்ச்சியர்-செங்கிடை போன்ற சிவந்த அதரத்தை உடையவர். முத்தம்-முத்து. வாள்-வெண்மையான. முள் எயிறு-கூரிய பற்கள். ஊறு தேன்-ஊறுகின்ற தேன் போன்ற ரசம்.

பித்தும் மாலும் மதமும் பெருக்கலான்
மத்த வாரணம் என்ன மயங்கினான்

என்று சுக்கிரீவன் இருந்த நிலையைக் கவிஞன் வர்ணிப்பான். சுக்கிரீவன், பெண்களின் அதர பானத்தைச் சுவைத்துக் களித்து, மதங்கொண்ட யானையைப்போலக் கிடந்தான் என்பது கருத்து. அவன் தன் மனைவியான உருமையுடன் களிவெறிகொண்டு கிடந்தான் என்று கூறாமல் பல மகளிருடன் இன்புற்று மயங்கிக் கிடந்ததாகக் கவி கூறுவதைக் கருத்தில் கொள்ளவேண்டும். எனவே, அபேதப் புணர்ச்சி, கிஷ்கிந்தைக் காட்டுச் சமுதாயத்தின் முறை. காட்டுச் சமூகம் நாட்டுச் சட்டத்தைக் கடைப்பிடிக்குமென்று எதிர்பார்க்க முடியாது.

ஆனால் இவ்வாறெல்லாம் யோசிக்கும் பான்மையில் இராமன் இல்லை. தம்பியின் மனைவியைக் கவர்ந்த தமையனை எண்ணி ஆவேசம் கொண்டான்.

உலகம் ஏழினோடு ஏழும்வந்து அவன்உயிர்க்கு உதவி
விலகும் என்னினும் வில்லிடை வாளியின் வீட்டித்
தலைமை யோடுநின் தாரமும் உனக்குஇன்று தருவேன்
புலமை யோய்!அவன் உறைவிடம் காட்டுஎன்று
புகன்றான்.

"பதினான்கு உலகங்களும் அவனுக்குத் துணையாக வந்து நின்றாலும், அவற்றையும் அவனோடு அழிப்பேன். உனக்குத் தலைமையும் தாரமும் உடனே தருவேன்; அவனது உறைவிடத்தைக் காட்டு" என்று கூறுகிறான் இராமன்.

ஒருதலை ஆராய்ச்சியால் உரைக்கும் தீர்ப்பு நீதியாகாது; சுக்கிரீவனும் அவனது அமைச்சனான அனுமனும் கூறுவதைக் கொண்டு வாலி குற்றவாளியென்று துணிந்துவிட முடியாது; வாலி தன்திறத்தில் சொல்வதற்கு

---

பித்தும்-பைத்தியத்தையும். மால் உம்-மயக்கத்தையும். மத்த வாரணம்-மதங்கொண்ட யானை.

விலகும்-விலக்கும். வீட்டி-அழித்து.

இருப்பதையும் கேட்டுத்தான் முடிவுகூறவேண்டும். ஆனால் அரச நீதியின் அடிப்படை நெறியான இந்தக் கொள்கையையும் இராமன் புறக்கணித்துவிடுகிறான்.

இராமன் அறிந்து போற்றும் நெடுந்தரும நெறிப்படி உருமை சுக்கிரீவனுக்கு உரியவள். ஆனால் கிஷ்கிந்தையின் அரசுரிமை எப்படி அவனுக்குச் சொந்தமாகும்? "தலைமையோடு தாரத்தை" மீட்டுத் தருவதாக இராமன் எவ்வாறு கூறலாம்?

இராமன்தான் உணர்ச்சி வேகத்தில் கூறினான். சுக்கிரீவனாவது, "தலைமை எனக்கு உரியதன்று; தாரமே நான் வேண்டுகிறேன்" என்று சொல்கிறானா? இல்லை. தமையன் வெகுளியால் நேர்ந்த துன்பத்தில் மனம் நொந்து நிற்கும் மலை சூழ்வான் மைந்தன், தலைமையையும் பெறுவதற்குத் தயங்கவில்லை. இராமனது உறுதிமொழியைக் கேட்டு அவன் உவகை அடைகிறான். துன்பத்துக்கு அக்கரை கண்டதாகப் பூரிக்கிறான். "விழுந்ததே வாலி தன் வலி" என்று எண்ணி இன்பம் அடைகிறான்.

வாலி குற்றவாளி என்று பிரதிவாதியின் வாக்குமூலம் கேளாமலே தீர்ப்பு அளித்தாலும், அவனிடமிருந்து முடியைப் பறிக்கும் தண்டனை அவசியமா? அதுவும் அவசியமென்று கொண்டாலும், வாலி வதையும் இன்றியமையாத நீதியின்பாற்பட்டதொரு நடவடிக்கையா? கொடிய இராவணனிடம்கூட இராமன் இவ்வாறு பரிவின்றி நடந்துகொள்ளமாட்டான். முதற்போர் இறுதியில் இராமன் இராவணனை நோக்கி இயம்புவான்:

சிறையில் வைத்தவள் தன்னைவிட்டு உலகினில் தேவர்
முறையில் வைத்து,நின் தம்பியை இராக்கதர் முதற்பேர்
இறையில் வைத்து,அவற்கு ஏவல்செய்து இருத்தியேல்
இன்னும்
தரையில் வைக்கிலன் நின்தலை வாளியில் தடிந்து

"சிறை வைத்துள்ள சீதையை விடுதலைசெய்து, தேவர்களை அவரவர்க்குரிய முறையில் (பதவியில்) வைத்து,

வீடணனை அரக்கர் குல வேந்தனாக வைத்து, அவனுக்கு ஏவல் செய்து இருக்க இசைந்தால், உன் சிரத்தை என் வாளியால் அறுத்துத் தரையில் வைக்கமாட்டேன்'' என்று இராவணனிடம் கூறுவான்.

தன் குற்றம் உணர்ந்து திருந்துவதற்கு இராவண னுக்குச் சந்தர்ப்பம் அளிக்கவிருக்கும் இராமன், வாலிக்கு அளிக்காமலிருக்கலாமா? இராவணன் இழைத்த கொடுமைகள் பல. சீதையைக் கவர்ந்தது அவற்றில் ஒன்று. ஆனால் வாலி அம்மாதிரி கொடுமையையே அற மாகக்கொண்டவன் என்று அனுமனோ சுக்கிரீவனோகூடக் கூறவில்லை. அவர்கள் கூறியதெல்லாம் பொங்கி எழுந்த சீற்றத்தில் தம்பியைத் தவருகப் புரிந்துகொண்டு தொல்லை தருகிறான் என்பதே.

இராவணனுடன் போர் தொடங்குவதற்கு முன்னால் அங்கதனைத் தூது அனுப்புவான் இராமன். வழியலா வழிமேல் செல்லும் இராவணன், தேவர்க்கும், அந்தணர்க் கும் துன்பம் இழைத்தனன் என்பதையும், சீதாதேவி யைக் கவர்ந்தான் என்பதையும், சடாயுவைக் கொன்றான் என்பதையும் நினைவூட்டி, அங்கதனின் சமாதானத் தூதை எதிர்த்து இலக்குவன் பேசினாலும், அரச நீதியை அனுசரித்து நடப்பதே உசிதம் எனக் கூறி, இராமன் அங்கதனை அனுப்புவான். ஆனால் இங்கு, வாலி குற்ற வாளி என்று வாதத்துக்குக் கொண்டாலும், அவன் தலைமையோடு தாரத்தைச் சுக்கிரீவனுக்கு அளித்தாக வேண்டுமென்பது தீர்ப்பு ஆனாலும், வாலியிடம் ஒரு தூதனை அனுப்பி விஷயத்தை விளக்கிக் கூறியிருக்கலா மல்லவா? அப்போது, வாலி அக்கோரிக்கைகளுக்கு இணங்கானாயின், இராமன் தன் வில்லாற்றலை அதன்பின் காட்டியிருக்கலாமல்லவா? இராவணனைப் போல வாலி யும் வேந்தனல்லவா? அவனிடம் தூது அனுப்புவது அவசியமல்லவா?

ஆராய்ச்சியின்றி அவசரப்பட்டு இராமன் வாக் களித்துவிட்டான். வாலியிடம் அவன் தம்பியைக் கூட்டிச் சென்று, பகைத் தீயை அவித்துச் சோதர வாஞ்சை புத்

துயிர் பெறச் செய்வதற்கு அரும்பாடு படவேண்டியவன், தகவிலாத வாசகம் பேசிவிட்டான்.

வாலியை வதைப்பேன், தலைமையும் தாரமும் தருவேன் என்று கூறியதுடன் நில்லாமல் தலைமையோடு நின் தாரமும் உனக்கு இன்று தருவேன் என்றே வாக் குறுதி தந்திருப்பதைக் கவனித்தல் வேண்டும். எல்லை யில்லாத ஆற்றலுக்கு உரியவனும், சமருக்கு எதிர் வரு வோனின் உரத்திலும் வரத்திலும் பாதியைப் பெறும் அனுகூலத்தைப் பெற்றவனுமாகிய வாலியை இன்றே கொல்வேன் என்று வாக்களித்ததே அவனது உணர்ச்சி வேகத்தைத்தான் எடுத்துக் காட்டுகிறது.

வாலிக்குக் காலனாவதற்கு இராமன் இணங்கியதால் இறும்பூதெய்திய இரவி குமாரன்கூட, ஒருநாள் போரில் வரபலமிக்க வாலியை வதம் செய்யும் வல்லமை இவ னுக்கு உண்டா என்று ஐயம்கொள்கின்றான். அனுமன் கூறிய உறுதிவாசகம் அவனுக்கு மனநிறைவு அளிக்க வில்லை. எனவே, தன் அம்பால் ஒரு மராமரத்தைத் துளைக்கும்படி இராமனைக் கேட்டுக்கொண்டு அவனது வில்லாற்றலைச் சோதிக்கலாமென்று அனுமன் யோசனை கூறுகிறான். அவ்வாறே சுக்கிரீவன் வேண்டுகிறான். இராகவனோ, ஒற்றை வாளியால் ஊழி பெயரினும் தாம் பெயரா எழு மராமரங்களைத் துளைத்துவிடுகிறான். இதைக் கண்டு சுக்கிரீவன் பெருமகிழ்ச்சியடைகிறான். வானர வீரர் ஆடிப்பாடி நறவை உண்டு நர்த்தனம் செய் கின்றனர். "அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியன் யான்" என்று சுக்கிரீவன் இராமனிடம் கூறி வணங்கு கிறான்.

இவ்வாறாக வாலி வதத்துக்கு முன்னேற்பாடு முற்றுப்பெறுகிறது.

# தூய நட்பும் துணிந்த செயலும்

வாலி வதைப் படலத்துக்கு முன் அமைந்திருக்கும் கலன்காண் படலம், கதை ஓட்டத்துக்குப் பெரிதும் உதவவில்லை என்பது உண்மை. ஆனால் இராம சுக்கிரீவரின் இயல்பைப் புரிந்துகொள்ள இது துணை செய்கிறது.

அடுத்த படலத்தில்தான் வாலியை நாம் நேரில் சந்திக்கவிருக்கிறோம். அந்தச் சிறியன சிந்தியாதானின் சீர்த்தி நேர்த்திகளில் நெஞ்சைப் பறிகொடுக்கப்போகிறோம். அறத்தின் நாயகனாக அவனால் போற்றப்படும் இராமனே அவனைக் கரந்திருந்து கொல்வதைக் கண்டு கண்ணீர் பெருக்கப்போகிறோம். தன்னிரக்கம் கொள்ளாத தகைமைக்கு உரிய அந்தத் தீரனைப் போற்றுங்கால் காவியத் தலைவனையும் அவனுக்கு உற்ற துணைவனாகியிருக்கும் கதிரவன் செல்வனையும் வெறுக்கும் வழியில் சென்று பிழைபடுவோமென்று அஞ்சியே, கம்பன் கலன் காண் படலத்தில் சுக்கிரீவனது நட்புத் தூய்மையையும் இராகவனது நல்லியல்பையும் துலங்கவைக்க முயன்றிருக்கிறான் என்னலாம்.

சுக்கிரீவன் கொண்டுவந்து காட்டிய அணிகலன்களை இனம் தெரிந்துகொள்கிறான் இராமன். இராவணனால் கடத்தப்பட்ட சீதையின் ஆபரணங்களே என்பதைத் துணிந்தவுடன், அவன் அடைந்த துயரைக் கவிஞன் வர்ணிக்கிறான்:

> தெரிவுற நோக்கினன் தெரிவை மெய்யணி
> எரிகனல் எய்திய மெழுகின் யாக்கைபோய்
> உருகினன் என்கிலம். உயிருக்கு ஊற்றமாய்ப்
> பருகினன் என்கிலம். பகர்வது என்கொலாம்?

---

தெரிவை-சிதை. ஊற்றம்-வலிமை. அணி-ஆபரணம். யாக்கை-சரீரம்.

**விட்டபேர் உணர்வினை விளித்த என்கெனே?**
**அட்டன உயிரைஅவ் வணிகள் என்கெனே?**
**கொட்டின சாந்துஎனக் குளிர்ந்த என்கெனே?**
**சுட்டன என்கெனே? யாது சொல்லுகேன்!**

ஆபரணங்களைக் கண்ட இராமனது மெய்ப்பாடு களைத் தெளிவாகச் சொல்ல இயலாது, கவி வேதனை யுற்று "என்கெனே? என்கெனே?" என்று பரிவு தோன்றக் கதறுகிறான்.

அணிகளைக் கண்ட இராமன், பிரிவாற்றாமையால், அனலை அடைந்த மெழுகுபோல் உருகுகின்றான்; அதே பொழுதில், அணியைக் கண்டமாதிரி அணி தரித்தவளை யும் அடையலாமென்ற ஆசை தோன்றி, வலிமை பெறு கிறான். எனவே, உயிருக்கு ஊற்றமாய், ஆபரணங்களைப் பருகுவான்போல் பார்த்ததாகக் கவி கூறுகிறான். சீதை யைப் பிரிந்த இராமன் தன் அறிவையும் இழந்திருக் கிறான். அவளது அணிகலன்களைக் கண்டதும் அந்த அறிவு மீண்டு வருகிறதா? அல்லது அவை அவனது பிரிவுத்துயரை மிகுவித்து, அவனது உயிரை அழிக்கின் றனவா? அந்த அணிகள் அவனது தாபத்தைத் தணிவிக் கின்றனவா அல்லது மிகுவிக்கின்றனவா? என்று சொல்ல இயலவில்லை கவிக்கு.

உருகிப் பருகி மறுகிப் பதைத்தவன், கண்ணீரை வெள்ளமாகப் பெருக்குகிறான். "ஈர்த்தன செங்கண் நீர் வெள்ளம்" என்கிறான் கவிஞன். அணிகளைப் பார்த் துச் சோகம் மிகுந்ததால், கண்ணீரைப் பெருக்கிய இராமன் யாரோடும் யாதொன்றும் பேசாமலிருக்கிறான். நெடுநேரம் கல்லாய்ச் சமைந்திருந்தவன், துயரம் தாங்கா மல் சோர்ந்து சாய்கின்றான்.

தூயோனான இரவி குமாரன் இராமனைத் தழுவித் தாங்கித் துயரம் தாங்காது விம்முகிறான். தலைவனுக்குத்

---

விட்ட பேருணர்வு-நீங்கியிருந்த பேரறிவு. விளித் தன-அழைத்தன. அடுதல்-கொல்லுதல்; எனவே அட்டன- கொன்றன. கொட்டுதல்-பூசுதல்.

தைரியம் கூறுகிறுன். இராவண வதம், இராமனுக்கு ஒரு பொருட்டான காரியமா என்று கேட்கிறுன். அனுமன் அவனுக்குத் தொண்டனுய் இருப்பதை நினைவூட்டுகிறுன். இலக்குவனது பேராற்றலைக் குறிப்பிடுகிறுன். "நானே சென்று தேவி எந்த உலகிலிருந்தாலும் தேடிக் காண் பேன். தேவியைச் சிறைவைத்த தீயவன் தலைகளைத் திருகி எறிவேன். அவளை மீட்பேன். கடையேன் கைப் பணியைக் காண்பாயாக!'' என்று கூறுகிறுன். "எனது சிறு குறை தீர்த்தல் பிற்பாடு ஆகுக. உடனே மின் னிடைச் சானகியைத் தேடிச் செல்வோம்! விடை தருக!'' என்றே உரைக்கிறுன். இங்குத்தான் சுக்கிரீவனது நட்புத் தூய்மையைக் காண்கிறேம். வாலி வதத்துக்கு இராமன் துணை நாடிய இரவி மைந்தன், இராவண வதத்தை முதலில் சாதிக்க முனைந்துவிடுகிறுன். தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன் என்பதை இதன்மூலம் காட்டிக்கொண்டு விடுகிறுன்.

அயர்ந்த கண்களைத் திறந்த இராமன் மீண்டும் சோக மொழிகளைத்தான் வேகமாகப் பேசுகிறுன்:

**கரும்புஅழி சொல்லியைப் பகைஞன் கைக்கொளப்**
**பெரும்பழி சூடினேன்; பிழைத்தது ஏன்?**

என்று கதறிப் பதறுகிறுன். முடிசூடாமல் காட்டுக்கு வந்து பழிசூடினேனே என்று பதைக்கிறுன். ஆயினும், அவன் சுக்கிரீவனது யோசனையை ஆமோதித்துச் சீதை யைத் தேடுவதற்கு விடைதருகிறுனு? இல்லை. மீண்டும் துயரமிகுதியால் சோர்கிறுன். மீண்டும் சுக்கிரீவனது ஆறுதல்மொழியால் தேற்றப்பட்டவுடன்,

**வையகத்து இப்பழி தீர மாய்வது**
**செய்வன்;நின் குறைமுடித் தன்றிச் செய்கலேன்**

என்று கூறுகிறுன்.

---

கரும்பு அழி சொல்லி-கருப்பஞ் சாற்றையும்விட இனிமையான மதுரமொழி பேசும் சீதை.

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றதால் நேர்ந்த பழியைத் துடைக்க, உயிர் விடாது ஒழியேன் என்று கூறிவிட்டு, ' உன் குறையை முடித்தபின்பே, என் உயிர் நீக்குவேன்'' என்று உறுதி கூறுகிறான்.

வாலியை வதம் செய்து வாக்குறுதியைக் காப்பாற்றிவிட்டு மாய்வேன் என்று இராமனும், இராவண வதத்தை முதலில் முடிக்க விடைதருவீர் என்று சுக்கிரீவனும் கூறுவதைச் சுட்டி, இருவரது பெருந்தன்மையையும் புலப்படுத்துகிறான் கவி.

எது முதலில்? வாலி வதமா அல்லது இராவண வதமா? இவ்வாறு பிரச்னை உருப்பெற்று நிற்கிறது. மனமொத்த நண்பர்கள் மாறுபட்ட கருத்துப் பேசுகின்றனர். இந்நிலையில் அனுமன் தலையிடுகிறான். சீதையைத் தேடும் பணியின் சிரமத்தை உணர்த்துகிறான். எழுபது வெள்ளம் வானரப் படையின் உதவி இதற்குத் தேவையென்று அறிவுறுத்துகிறான். கிஷ்கிந்தை ராணுவத்தைப் பயன்படுத்த வேண்டுமானால், வாலியை வதம்செய்து சுக்கிரீவனை அரசனாக்கும் காரியம் முதலில் நிகழவேண்டுமென்று விளக்குகிறான். இவ்வாறாகச் சுக்கிரீவனது யோசனை, நல்லுணர்ச்சியால் உந்தப்பட்டதென்றாலும், நடைமுறைக்கு ஒவ்வாது என்பதைக் காட்டுகிறான். அனுமனது அமைச்சுத் திறன் மீண்டும் விளக்கம் பெறுகிறது. அனுமனது கருத்தை எதிர்த்து வாதிக்கமுடியாத காரணத்தால், சுக்கிரீவன் மௌனம் சாதிக்கிறான். இராமன் அனுமன் வாதத்தை அங்கீகரித்து, வாலிவாழ் இடத்துக்குச் செல்வோமென்கிறான். அனைவரும் கிஷ்கிந்தைக்குக் கிளம்பிச் செல்கின்றனர்.

“அறங்கள் நாறும் மேனியார்'' ஆன இராம லட்சுமணர்கள், வானரக் கூட்டத்துடன் மலைச்சாரலில் ஏறியும், இறங்கியும் விரைந்து சென்றதைக் கண்டு, விண்ணும் மண்ணும் கலங்குகின்றன. மேகமும், நாகமும், யூகமும் (யூகம்-கருங்குரங்கு), யானையும், ஆளியும், வேங்கையும் பிறவும் அஞ்சி ஓடுகின்றன. இறுதியாக, அவர்கள்

"பொன்னின் நாடு இழிந்தது அன்ன வாலி வாழ் பொருப்பிடம்"* அடைகின்றனர்.

அடைந்தவுடன், "செய்வது என்னே?" என்று விவாதம் செய்கிறார்கள். அனுமனது அமைச்சுத் திறனை நாம் கண்டு களித்தோம்.

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன் நிற்பவை

என்று வள்ளுவப் பேராசான் வினவுகின்றார். நூலாராய்ச்சியுடன் கூடிய மதியூகிகளுக்குத் தீர்வுகாணமுடியாத நுட்பம் ஒன்றுமில்லை என்பது வள்ளுவத்தின் கருத்து. ஆனால் நூலறிவும் நுண்ணறிவும் பெற்ற அனுமனே இங்குத் திகைத்து நிற்கிறான்போல் தோன்றுகிறது. வரம்பு இல்லா ஆற்றலும் வரபலமும் பெற்ற வாலியின் வலியை அழிப்பது எப்படி? அதுவும், அன்றே அழிப்பது எப்படி? புரியமுடியாத புதிர்தான். இறுதியில் இராமன்தான் மார்க்கமொன்று சொல்கிறான்:

அவ்விடத்து இராமன்நீ
அழைத்துவாலி யானதோர்
வெவ்விடத்தின் வந்துபோர்
விளைக்கும்ஏல்வை, வேறுநின்று
எவ்விடத் துணிந்துஅமைந்தது
என்கருத்துஇது என்றனன்
தெவ்வடக்கும் வென்றியானும்
நன்றுஇதுஎன்று சிந்தியா.

---

*பொன்னின் நாடு-விண்ணிலுள்ள பொன் உலகம். இழிந்தது அன்ன-மண்ணில் இறங்கியது எனச் சொல்லத் தக்க. பொருப்பு இடம்-மலை அரணுடன் கூடிய இடம்.

வெவ்விடம்-கொடிய விஷம். போர் விளைக்கும் ஏல்வை-போர்புரியும்போது. வேறு நின்று-தனியாக நின்று. எவ்விட-அம்பைச் செலுத்த. தெவ்வடக்கும் வென்றியான் - (எவ்வகையிலும்) பகையை அடக்கி வெற்றிபெறக் கருதும் சுக்கிரீவன்.

"நீ வாலியுடன் போர் செய்யும்பொழுது நான் 'வேறு நின்று' வாளியைச் செலுத்துவேன்" என்று கூறுகிருன் இராமன். 'வேறு நின்று' என்றதால் தனி இடத்தில் மறைந்து நின்று அம்பைச் செலுத்தத் தீர்மானித்துள்ளான் என்பது பெறப்படும். முன்போல் அவசரப்பட்டு ஆவேசப் பேச்சுப் பேசவில்லை என்பதைச் சுட்டிக் காட்ட எண்ணினுன் போலத் "துணிந்து அமைந்த கருத்து இது" என்று இராமன் கூறுகிருன். சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்தபின் செய்த முடிவு என்று கூறுகிருனே அல்லாமல், இக்கருத்துக் கொண்டதற்குக் காரணம் யாதென்று தெரிவிக்கவில்லை.

இதை இலக்குவன் ஆமோதிக்கிருனு? இல்லை யென்றுதான் சொல்லவேண்டும். உண்மையில் சுக்கிரீவனைக் கண்டதிலிருந்தே அவன் வாய்மூடி மௌனமாயிருக்கிருன். இராம இலக்குவரின் காரிய சித்தியை (சீதை மீட்சியை) உறுதிசெய்வதற்கான பெருநிகழ்ச்சி இராம-சுக்கிரீவ நட்பு. ஆனுல் இது நிகழும்பொழுது இலக்குவன் ஊமையாக அமைந்திருக்கிருன். சத்துருக்கனனைப்போல, அவன் வாய் திறந்து பேசாதவனு? அல்ல. எந்தச் சம்பவத்தைப்பற்றியும் மனத்தில் ஏற்படும் சலனத்தையும் சிந்தனையையும் விளக்கமாக எடுத்துரைக்கும் பெற்றிக்கு உரியவன் அவன். அண்ணனிடம் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் அடக்கி வைத்துக்கொள்ளும் பண்பு அவனுக்கு இல்லை. அதை எடுத்துரைத்து விட்டு, இறுதியில் அண்ணனுக்குக் கட்டுப்பட்டு நடப்பது தான் அவனுக்கு இயல்பு. எனினும், அவன் இதுகாறும் மௌனம் சாதிப்பது ஒரு மர்மமாக இருக்கிறது. தொடக்கத்திலிருந்தே சுக்கிரீவனிடம் அவனுக்கு நம்பிக்கை இல்லையென்பதையும் தமையனுக்குக் காலனைத் தேடிப் பிடித்து வருந்தியழைக்கும் தம்பியை நம்பக்கூடாதென்பதையும், இராமனிடம் அவன் பிறகு சொல்வான். அனுமனும் சுக்கிரீவனும் அருகில் இருக்கும்பொழுது அண்ணனிடம் எதிர்வாதம் செய்வது பழுது என்று எண்ணியே அவன் தன் குமுறலையெல்லாம் அடக்கிக் கொண்டிருக்கிருன். நாடகவியல் கண்கொண்டு இதைக்

கற்பனை செய்து பார்த்தல் வேண்டுமென்று கருதியே, கம்பன் இதை இங்கு வெளிப்படையாக விவரிக்காமல் விட்டுவிடுகிருன்.

அனுமன், இராமன் கருத்துக்கு இணக்கம் தெரிவிக்கவில்லை; என்ருலும் வேறு வழியில்லை என்பதை அறிந்த அவன், மௌனமாயிருந்து தன் சம்மதத்தைத் தெரிவிக்கிருன் என்றே கருதல் வேண்டும்.

சுக்கிரீவனே எவ்வகையிலும் வாலிமீது வெற்றி கொள்வதில் துடியாக நிற்கிருன். மேலும் அவன் இதயத் துடிப்புகளை மெய்ப்பாடுகளில் வியக்தமாக வெளிப்படுத்தும் வெகுளியும்கூட. எனவே "இது நன்று" என்று எண்ணி, ஆரவாரம் செய்து செல்கிருன். தோள்தட்டிக் கால்கொட்டிப் "போருக்கு வா" என்று வாலியை அழைக்கிருன். அதைக் கேட்ட வாலியை—வீரத்தின் உறைவிடத்தை—சிறியன சிந்தியாதானை—இராமனை நேசித்து வாழும் பெருமகனை—இனித் தரிசிப்போம்.

# அஞ்சி நின்ற தாரை; அஞ்சாது சென்ற வாலி

காவிய அரங்கில் வாலி பிரவேசிக்கும் பொழுதே, அவனது தோற்றப் பொலிவையும் ஆற்றல் மிகுதியையும் நாம் கண்டுணர்ந்து களிக்கிறோம்.

மாற்பெறும் கடகரி முழக்கம் வாளரி
ஏற்பது செவித்தலத்து என்ன, ஓங்கிய
ஆர்ப்பொலி கேட்டனன், அமளி மேல்ஒரு
பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான்

மலைக் குகையில் சயனித்திருக்கும் சிங்கம், மத யானையின் முழக்கத்தைக் கேட்டு எழுவதைப் போல, வாலி எழுகின்றானென்று கூறி, அவ்வீரனது வலிமைமிகுதியைச் சுட்டிக்காட்டுகிறான் கவி. அரண்மனையில் அமளி மீது கிடந்த வாலியைப் பாற்கடலுக்கு ஒப்பிட்டு அவனது வெண்மை நிறத்தையும் கம்பீரத் தோற்றத்தையும் கருத்தில் பதியச் செய்கிறான் கம்பன். வீரமுழக்கம் செய்து போருக்கு அழைப்பது சுக்கிரீவன் என்பதை உணர்ந்தவுடன், வாலி சிரிக்கிறான். அந்தச் சிரிப்போசையைக் கேட்டுப் பதினான்கு லோகங்களும் அஞ்சி ஓடுகின்றனவாம்! ஒளித்துப் பிழைத்தவன், வலிந்து வந்து போருக்கு அழைப்பதை எண்ணியவுடன், ஊழித்தீ என அவன் உள்ளம் கொதிக்கிறது. அவனது விழிகள் தீப்பொறி கக்குகின்றன. "வந்தனென் வந்தனென்" என்று அவன் கூறும் சொற்கள் திக்கெட்டும் எதிரொலிக்கின்றன. அப்பொழுது அவன்,

முடிவின் காலத்தீ ஒத்தனன்
கடலின் ஆலம் ஒத்தனன்

---

மாற்பெரும் கடகரி-மயக்கம் கொண்ட பெரிய மத யானை. வாள் அரி-கொடிய சிங்கம். அமளி-படுக்கை.

என்று கவிஞன் கூறுகிறான். சர்வ சங்காரகாலத் தீ போல வும் பாற்கடலில் மண்டி எழுந்த ஆலகால விடம்போலவும் வெகுண்டு வருகிறான் வாலி. அவ்வமயம் அவன் மனைவி எதிரே தோன்றி அவனைத் தடுத்து நிறுத்துகிறாள். கம்பன் கூறுகிறான்:

ஆயிடைத் தாரை என்று அமிழ்தில் தோன்றிய
வேயிடைத் தோளினாள் இடை விலக்கினாள்
வாயிடைப் புகைவர வாலிகண் வரும்
தீயிடைத் தன்நெடுங் கூந்தல் தீகின்றாள்.

ஆலம் ஒத்தவன் வாலி. அவனைத் தடுக்க வரும் தாரை அமுதம் ஒத்தவள். "தாரையென்று அமிழ்தில் தோன் றிய வேயிடைத் தோளினாள்" என்று கூறி அவளைக் களத்தில் கொண்டு வரும் பாங்கே, அவளிடம் கம்பனுக் குள்ள தனிமதிப்பைத் துலங்கச் செய்கிறது.

கணவனது கோபத்தீயால் தன் நெடுங்கூந்தல் கருகு வதையும் கவனியாமல் அவள் அவனுக்கு இதம் கூற வரு கிறாள்.

"விலக்கலை விடு விடு" என்று அவன் அவளிடம் துடிப்புடன் கூறுகிறான். "விளித்துளான் உரம் கலக்கி," "இன்னுயிர் குடித்து மீள்வன்" என்றும் கூறுகிறான். ஆயினும் அந்த மலைக்குல மயில் பின்வாங்காமல் தன் செவ்விய கருத்தை உறுதியாக எடுத்துரைக்கிறாள்.

"உன் தோள்வலிக்கு ஆற்றாது தோற்றோடிய சுக்ரீ வன் புது வலுப் பெற்றானா? அல்லது மறுபிறப்பு எடுத் தானா? இல்லை. எனினும் வலிந்து போர் தொடுக்க மீண்டும் வந்திருக்கிறான் என்றால், அவன் நெடுந்துணை பெற்றிருப்பதே அதற்குக் காரணம்" என்று தாரை கூறு கிறாள். உடனே வாலி இல்லவள் உணரத் தன் வல் லமையை விவரிக்கிறான். பாற்கடல் கடைந்த பேராற்றலை நினைவூட்டுகிறான். "என்னை எதிர்ப்பவன் எவனாயினும் தோற்று அழிவது திண்ணம்" என்று உறுதிகூறுகிறான்.

எதிரியின் பலத்தில் பாதி தன்னை வந்தடையும் வரபலமும் பெற்றிருப்பதைச் சுட்டும் வகையில்,

**ஊதிய வரங்களும் உரமும் உள்ளதில்**
**பாதியும் என்னதால் பகைப்பது எங்ஙனம்?**

என்று கேட்கிறான்.

**கூற்று(உ)டன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்**
**ஆற்ற லதுவே படை**

என்பது குறள்.

கூற்றுவனே கொதித்து எழுந்து வந்தாலும், அஞ்சாமல் எதிர்த்துநின்று அரும்சமர் செய்வோனே படைவீரன் என்பது இதன் கருத்து.

இங்கு வாலியோ,

**கூற்றும் என்பெயர் சொலக் குலையும்**

என்றே கூறிவிடுகிறான்.

ஒரு வீரன் தன் ஆண்மையைப் பகைவனிடம் பாராட்டிப் பேசுவது போர்முறைக்கு உகந்த செயலாகும். ஆனால் அயலாரிடத்தில் தன்னைத்தானே போற்றிப் பேசுவது வீரமன்று; தகவில்லாத தற்புகழ்ச்சி யாகும். வாலி இத்தகைய தற்புகழ்ச்சியில் அல்லவா ஈடுபடுகிறான் என்று சிலர் வினவலாம். இதன்மூலம், அவன்பால் நமக்கு ஏற்படும் நன்மதிப்புக் குறைகிறதென்றும் வாதிக்கலாம். அவ்வாறு குறையவேண்டும் என்றே கம்பன் வான்மீகத்தை அடியொற்றி இந்தக் கட்டத்தை அமைத்திருப்பதாகவும் கூறலாம். ஆனால் வாலி தன் மனையாளிடமே பேசுகிறான் என்பதைக் கவனித்தல் வேண்டும். இல்லாளுக்கு என்றுமில்லாத வகையில் அச்சம் ஏற்பட்டதைக் கண்டு, அதைத் துடைத்து, நம்பிக்கை ஊட்டுவதற்காக அவன் கூறிய வீரவாசகத்தில் வீண் பெருமிதம் காண முயல்வது தவறாகும்.

நாடகச் சக்கரவர்த்தி என்ற அழியாப் புகழுக்கு உரிய ஆங்கிலேயக் கலைஞன் ஷேக்ஸ்பியர் ஆக்கிய நாடகமாகும் ஜூலியஸ் ஸீஸர். அதிலும் இதைப்போன்றதொரு கட்டம் வருகிறது. உரோமாபுரி சாம்ராஜ்யத்தின் தலைவனாகச் சிறந்தவன் ஸீஸர். அவன் அஜாத சத்துரு. அவனது பெருமை கண்டு பொறாமை கொண்ட சிலர், நண்பராக உறவாடி, அவனைக் கொல்வதற்குச் சதி செய்தனர். ஒருநாள், ஸீஸர் சட்டமன்றத்தில் தலைமை வகித்து வினைபுரியும்பொழுது, மறைத்து வைத்த கூரிய கத்திகளை அவனது மார்பில் செலுத்தி அவனை வீழ்த்தத் திட்டமிட்டிருந்தனர். அதற்கு முன்னைய இரவு, விண்ணும் மண்ணும் உற்பாதங்கள் பல காட்டின. தீ உமிழும் சூறாவளியைக் கண்டனர் சிலர்; வீதியில் மனிதர் தீ மிதித்து நடப்பதைக் கண்டனர் சிலர்; பகலில் சந்தையில் ஆந்தை அலறியதைப் பார்த்தவர் உண்டு; சிங்கம் நகரத்தின் நடுவீதியில் நடமாடியதை நோக்கியவரும் உண்டு. ஸீஸரின் மனைவி கல்பர்னியாவும் தீயகனவு கண்டாள். "உதவி! உதவி! ஸீஸரைக் கொலை செய்கிறார்கள்!" என்று மும்முறை உறக்கத்தில் கூக்குரலிட்டாள். எனவே, பொழுது விடிந்தவுடன், ஸீஸர் சட்டமன்றம் செல்லக் கூடாதென்று அவள் தடுத்தாள். ஆனால் அவன் கூறினான்: "ஸீஸர் போகத்தான் போவான். என்னை அச்சுறுத்தியவை எவையும் என் முன்னே தோன்றியதில்லை. ஸீஸரின் முகத்தைக் கண்டவுடன் அவை மறைகின்றன."

மீண்டும் ஸீஸர் கூறினான்: "அச்சத்தை உச்சத்தில் கொண்டு, ஸீஸர் மனையில் தங்கினால், அவன் இதயமற்ற விலங்காயிருக்கவேண்டும். இல்லை; ஸீஸர் இல்லத்தில் தங்கமாட்டான். 'ஆபத்து' என்பவன் அறிவான், அவனை விட ஸீஸர் அபாயகரமானவனென்று. ஒரேநாளில் பிறந்த இரு சிங்கங்கள் நாங்கள். மூத்தவனும் அதிபயங்கரமானவனுமானவன் நான். ஸீஸர் வெளிச் செல்வான்."

இவ்வாறு ஸீஸர் தன்னையே படர்க்கைநிலையில் குறிப்பிட்டுப் பாராட்டிப் பேசினான். ஆனால் அதற்காக அவனை வெறுத்து இகழ்வோமா? அச்சத்தை உள்ளத்தில் கொண்டு, ஆண்மைவேடம் தாங்கும் போலிகளல்லர்

ஸீஸரும், வாலியும். செயலால் அன்றிச் சொல்லால் புகழ்தேட விரும்பும் பேச்சுப்புலிகள் அல்லர் அவர்கள். இடம், பொருள், ஏவல் பாராமல் வீரவாசகம் பேசித் தற்புகழ்ச்சி செய்வோரும் அல்லர். அச்சத்தைக் கொச்சையாகக் கருதும் வீரபுருஷர்கள் அவர்கள். எதிர் பாராத வகையில் தடைசெய்யும் மனைவியரிடம் உண்மை நிலையை உணர்த்தித் தைரியம் கூறும் வகையில் அமைந் திருக்கும் வீரவாசகம், அவர்களுக்குப் பழுதாகாது.

'வந்தனென்' என்றவனைத் தடுத்த தாரையிடம் தன் மேம்பாட்டைப் பெருக்கி உரைத்து, "நீ துயர் ஒழிக" எனச் சமாதானம் கூறுகிறான் வாலி. "துயர் ஒழிக" என்றதால், தாரை மறுகி நின்ற நிலை உணர முடிகிறது. புருஷன் உயிருக்கே ஆபத்து என்று அவள் உள்ளம் கலங்கியிருக்க வேண்டும்.

வாலியின் அமைதி கேட்ட தாரை மனநிறைவு பெற்றாளில்லை. சுக்கிரீவன் நெடுந்துணையுடன் வந்திருக்க வேண்டுமென்று ஊகமாய்ச் சொன்னது உண்மையே என்று உணர்த்த விபரம் கூறுகிறாள்:

அன்னது கேட்டுஅவள், அரச, ஆயவற்கு
இன்னுயிர் நட்புஅமைந்து இராமன் என்பவன்
உன்னுயிர் கோடலுக்கு உடன்வந் தான்எனத்
துன்னிய அன்பினர் சொல்லினர் என்றாள்

தாரை இதைத் தயங்கித் தயங்கிக் கூறியிருத்தல் வேண்டும். இதைக் கேட்ட வாலி அதிர்ச்சி யடைகிறான். அவளது கூற்றின் உண்மையை ஆராயப் புகும் பான்மை யில் அவன் இல்லை. அந்தச் சொற்களைக் கேட்டமாத் திரத்தில் அவன் பதறுகிறான்; துடிக்கிறான்; தன் காதலி என்றும் கருதாமல், கனன்று பேசுகிறான்:

---

கோடலுக்கு-கவர்வதற்கு. துன்னிய அன்பினர்-உண்மையான அன்புடையவர்.

**உழைத்தவல் இருவினைக்கு ஊறு காண்கலாது**
**அழைத்துஅயர் உலகினுக்கு அறத்தின் ஆறுஎலாம்**
**இழைத்தவற்கு இயல்பல இயம்பி என்செய்தாய்?**
**பிழைத்தனை, பாவி!உன் பெண்மையால் என்றான்.**

மனித குலத்துக்குப் புது வாழ்வு அளிக்கவந்த புனித னாகவே வாலி இராமனைக் கருதுகிறான். "இருவினையின் கட்டுக்களில் சிக்கித் தத்தளித்துத் தவிக்கும் உலகினுக்கு அறவழியைச் செயலால் காட்டிவரும் இராமனைப்பற்றித் தகுதியில்லாத வார்த்தை பேசினாயே!" என்று அவன் கோபிக்கிறான்.

"நுண்ணறிவுடையோர் நூலோடு பழகினும், பெண் ணறிவு என்பது பெரும் பேதைமைத்தே" என்பது பெண் ணினத்தைப்பற்றி உலகத்தில் நிலவிவரும் அவதூறு. அதைக் கருத்தில் கொண்டு, "பெண்ணாயிருப்பதால் தானே இவ்வாறு பிழைசெய்தாய்!" என்று கூறுகிறான்; பிழைக்கு அமைதிகாட்டும் வகையில் இகழ்ந்து பேசு கிறான். "பிழைத்தனை பாவி உன் பெண்மையால்" என் றதில் இன்னொரு பொருளும் அமைந்துள்ளது. "இராமனை இழிவாகப் பேசிய நீ பெண்ணாயிருப்பதால் உயிர் தப்பி னாய். ஆடவனாயிருந்தால் இதற்குள் அழித்து ஒழித்திருப் பேன்" என்ற பொருளும் இதில் தொனிப்பதை நுனித் தறியலாம். "மனைவி என்பதற்காக உன்னை மன்னிக்க வில்லை. பெண் என்பதற்காக உனக்கு உயிர்ப்பிச்சை அளித்தேன்" என்ற தொனிப்பொருளும் இதில் அடங்கி யிருக்கிறது.

பதியில்லா வாழ்வு பாழ் என்பதைத் தேர்ந்து தெளிந்த தாரை, கணவன் உயிருக்காகக் கணவனிடமே

---

வல்இருவினை-வலிய இரு வினை (மயக்கத்தின்பாற் பட்ட நல்வினை, தீவினை). ஊறு-அழிவு. அழைத்து-'என் செய்வோம், என் செய்வோம்' எனக் கூவி அழைத்து. ஆறு-மார்க்கம். இயல்பு அல-தகுதியில்லாத (வார்த்தை களை).

வாதாடும் காதலி, அவனிடமிருந்து "பாவி" என்ற பட்டத்தைப் பெறுகிறாள்! ஆவியனைய தன் தேவியைப் பாவி என்று வாலி இகழ்கிறான் என்றால் அவனது இராம விசுவாசம் எத்தகையது!

அருமையில் நின்றுஉயிர் அளிக்கும் ஆறுஉடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ?

என்று அவன் தாரையை வினவுகிறான். "அருமையாய் நின்று உயிர்களைக் காக்கும் நெறியை உடைய தருமம் தற்கொலை செய்துகொள்ளுமா?" என்று கேட்கிறான். இராமன் சுக்கிரீவனுடன் சேர்ந்து வாலியை எதிர்ப்பது தர்மதேவதை தற்கொலை செய்துகொள்வதற் கொப்பாகும் என்பது வாலியின் கருத்து. தருமம் தன்னைத் தானே ஒழிக்காது என்பது எப்படி உண்மையோ அதைப் போல இராகவன் சுக்கிரீவனுடன் சேரமாட்டான் என்பதும் உண்மை.

மேலும் கூறுகிறான்:

ஏற்றபேர் உலகெலாம் எய்தி, ஈன்றவள்
மாற்றவள் ஏவ, மற்றவள்தன் மைந்தனுக்கு
ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப்
போற்றலை, இன்னன புகறற் பாலையோ?

"உலகம் முழுவதும் உரிமையாகப் பெற்றவன் இராமன். மாற்றாந்தாய் கட்டளைக்குப் பணிந்து அந்த ஆட்சிப்பொறுப்பை அவள் மைந்தன் பரதனுக்கு நிறைந்த உவகையுடன் கொடுத்த ஐயன் அவன். அவனைப் போற்றாமல் தூற்றலாமா" என்று கேட்கிறான் வாலி. தவிர,

---

ஏற்ற-தகுதியான. ஈன்றவள்-பெற்ற தாய். அவளது மாற்றவள்-சக்களத்தி (கைகேயி). ஆற்றரும்-அளவில்லாத. இன்னன-இத்தகைய வசைமொழிகளை. புகறற்பாலையோ-சொல்லத்தகுவாயோ.

நின்றபேர் உலகெலாம் நெருக்கி நேரினும்
வென்றிவெம் சிலையலால் பிறிது வேண்டுமோ?
தன் துணை ஒருவரும் தன்னில் வேறுஇலான்
புன்தொழில் குரங்கொடு புணரு நட்பனே?

என்று கேட்கிறான்.

"அந்தக் கோமகன் என்னைக் கொல்லக் கருதினாலும், அவனுக்கு வேறு துணை வேண்டுமா? அவன்தான் தனக் குவமை யில்லாத தீரனாயிற்றே! கோதண்டம் ஏற்றிய இராமனுக்குக் கூட்டாளியும் வேண்டுமா? கூட்டுத் தேவை யென்றாலும், குரங்கையா சேர்த்துக் கொள் வான்?" என்று கேட்கிறான் வாலி. இங்குத்தான் வாலி பிழை செய்கிறான். இராமன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத உயர்ந்த வீரன் என்பது உண்மை. ஆனால் அவன் "கூட்டொருவரையும் வேண்டாத கொற்றவன்" அல்ல. இராவண வதம் என்ற சகாப்தகரமான காரியத் தைச் சாதிக்கவிருக்கும் தலைவன் அவன். உலகத்தில் அதர்மத்தை அழித்து, அறநெறிப்பட்ட வாழ்வைத் தோற்றுவிக்கும் யுகப் புரட்சியை நடத்தவிருக்கும் தளபதி அவன். அந்தப் புரட்சியைச் சாதிக்க அவனுக் குத் துணை வேண்டும். அறத்துக்காகப் போராடுவதில் அக்கறையுள்ளவர் அனைவரும் ஒன்றுதிரண்டால்தான், மறத்தை மாய்த்து வெற்றிக்கொடி ஏற்றமுடியும்.

இராமன் அற்புதங்களைச் சாதிப்பவனாக ஆங்காங்கே கூறப்படுவது மெய். உதாரணமாக, வருணனை வழி வேண்டு படலத்தில் வருணன் காட்சி தராமல் காலம் தாழ்த்தியபொழுது, சினந்து சீறிய இராமன், பிரம்மாஸ் திரத்தைப் பூட்ட, அப்பொழுது வருணன் எதிர்வந்து

---

நின்ற-நிலைபெற்ற. நெருக்கி நேரினும்-ஒன்றுபட்டு எதிர்த்தாலும். வெம்சிலை-கொடிய வில். தன் துணை தன் னில் வேறு ஒருவரும் இலான்-தனக்கு நிகர் தன்னைத் தவிர வேறு எவரும் இல்லாதவன். புன்தொழில்-அற்பச் செய்கை. புணரு நட்பனே-சினேகம் செய்வானே?

அபயம் வேண்டினன். தஞ்சம் அளித்த இராகவன், "இக் கணைக்கு இலக்கு யாது?" என்று வினவியபொழுது, "மருகாந்தாரம் என்னும் தீவில் தீமை செய்து வாழ்ந்த நூறு கோடி அவுணர் மீது மின் உமிழ்க் கணையை விடுதி" என்றான் வருணன். இராமனும் அதற்கு இணங்கி, "கோடி நூறாய தீய அவுணரைக் குலங்களோடும் ஓடி நூறு" (ஓடி அழித்திடு) என்று செப்பிக் கணையை விடுத்தான். ஒருமுறை கண்மூடித் திறப்பதற்குள், அந்தப் பகழித் தெய்வம் "பாடி நூறாக நூறி" மீண்டது என்பான் கம்பன். ஆனால், இந்த அற்புதத் திறன் இராமன் என்ற பாத்திர சிருஷ்டியின் அடிப்படையாக அமையவில்லை. அவ்வாறு இருந்திருந்தால், அவன் தனியொருவனாக நின்று இலங்கை யரக்கரை அழித்ததாகக் காட்டியிருக்கலாம். மருகாந்தாரத்தை அழித்தவனுக்கு இலங்கை ஒரு பொருட்டா? வருணனை வரவழைக்கும் தவபலம் பெற்ற இராமன், காற்றை விளித்துச் சீதையின் சிறை அமைந்துள்ள இடத்தைக் கண்டுபிடித்து வரச் சொல்லக் கூடாதா?

மனிதனால் முடியாத அற்புதத்தைச் சாதிக்கும் வல்லமை என்பது இராமனது இயல்பாக அமையவில்லை. மனிதரில் சிறந்தோனாகவே இராமன் உருப்பெற்றுக் காட்சி தருகிறான்; செயல்படுகிறான். எனவேதான், சீதையைத் தேடுவதற்கும் இராவணாதியரை அழிப்பதற்கும் அவனுக்குத் துணை தேவையாகிறது.

சுருங்கச் சொல்வதென்றால், இராவண சமுதாய ஏற்பாட்டை அழித்து, இராமராஜ்ய சமுதாய முறையைத் தோற்றுவிக்கும் யுகப் புரட்சியின் தலைவனே இராமன். அந்தப் புரட்சியின் மகத்துவத்துக்குத் தக்கபடி அதன் தலைவனும் மகோன்னதத்தின் மலைமுடியைத் தொடுகிறான். ஆனால் அந்த ஒப்புயர்வில்லாத் தலைவன் துணை பலமின்றி எதையும் சாதிக்க முடியாது. அந்தப் புரட்சியின் தலைவனுக்குப் படையும் மக்களும்கூடத் தேவை.

இராமனுக்குச் செங்கைத் தனுவாக விளங்கி அனுமன் செய்யும் சேவையை நாம் அறிவோம். அவன்

தான் சீதை இருக்குமிடம் கண்டான். பிரிவுத் துயர் தாங்காது தற்கொலை செய்துகொள்ளத் துணிந்த ஜானகிக்கு நம்பிக்கை அளித்து, அவள் சாகாமல் காப்பாற்றினான். "கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்" என்ற நற்செய்தியை மீண்டுவந்து பகர்ந்து, செத்துப் பிழைத்துக்கொண்டிருந்த இராமனுக்கு உயிர்த் தளிர்ப்பு ஊட்டினான். பிரமாஸ்திரத்தால் இறந்துபட்ட இலக்குவனும், வானரரும் புத்துயிர் பெறச் சஞ்சீவி கொண்டுவந்தான், அந்தச் செயற்கரியன சாதிக்கும் செம்மல். அப்போது அனுமனைத் தழுவிய இராமன், "நின்னில் தோன்றினேம் நெறியில் தோன்றினாய்" என்று மேம்படக் கூறிப் புகழ்ந்தான். ஆனால் இலக்குவனும், அனுமனும், சுக்கிரீவனும் மட்டும் இருந்தால், இராம லட்சியம் கைகூடியிருக்குமா? இருக்காது என்பதே கதையின் புதைபொருள்.

கலன்காண் படலத்தில், தேவியின் நகைகளைக் கண்ட இராமன் ஆவிசோர்ந்தபொழுது, சுக்கிரீவன் பேசியதைக் குறிப்பிட்டோம். இராம இலக்குவரின் பேராற்றலை வியந்து பேசினான். எந்த உலகத்தில் சீதை சிறை வைக்கப்பட்டிருந்தாலும் தான் ஒருவனே சென்று தேடிக் காண்பேன் என்று கூறினான். இராவணன் சிரங்களைக் கொய்து, சீதையை மீட்டுவருவேன் என்று சொன்னான். ஆனால் அனுமன் அதை ஆமோதித்தானா? இல்லை. சுக்கிரீவனை அரசனாக்கி, வானரப் படையைக் கூட்டினாலன்றி இராவணன் இருப்பிடத்தைத் தேடி அடையமுடியாது என்றான் அவன். "நாம் ஊனுடை மானிடம் ஆனது உண்மை" என்பதை நினைவூட்டினான். சீதையின் உறைவிடத்தைக் கண்டறியப் பரந்த உலகத்தை ஒருமுறை சுற்றிப் பார்க்கவே பல ஆண்டு தேவை என்பதை அறிவுறுத்தினான். வானரப் படையின் சாதாரண வீரர்களுக்கும் இராம லட்சியத்தில் பாத்திரம் இருந்ததை அனுமன் இவ்வாறு புலப்படுத்தினான். ஜடாயு, ஜாம்பவான் ஆகியோருக்கும், அரக்கர் குலத் தோன்றலான வீடணனுக்

நின்னில்-உன் வயிற்றில்.

கும் இராம லட்சியத்தில் பங்கு உண்டு. அணிலுக்குக் கூடப் பங்கிருந்ததாகக் காவியம் கூறும்.

எனவே கோதண்டராமனுக்குக் கூட்டாளி தேவையில்லை யென்று வாலி கூறியது தவறென்பதைக் காண்கிறோம். வாலியின் பேச்சிலுள்ள இன்னொரு தவறையும் சுட்டிக்காட்டல் வேண்டும். இராமனுக்குத் துணை வேண்டுமானாலும், குரங்கினத்தில் பிறந்தவனைத் தோழனாகக் கொள்வானா என்று அவன் கேட்பதையே நாம் இங்கு கருதுவது. குலம் பார்த்துத் தோழரைக் கொள்ளும் போக்கு இராமனிடம் கிடையாது. சாதி, குலம் முதலியவற்றை உரைகல்லாகக் கொண்டு உயர்வு தாழ்வு பாராட்டும் ஒற்றைச் சாண் நினைப்பு இராமனிடம் இல்லை. அந்தக் குட்டை மனப்பான்மை அவனை மாசு படுத்தியிருந்தால், அவன் அறத்தின் நாயகனாக முடியாது. "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்பதுதான் இராமனது அறம். அதனால்தான் அவன் குகனை நண்பனாகக் கொண்டான்; சுக்கிரீவனைத் தோழனாக ஏற்கிறான். நாளைக்குத் தன் இல்லாளைக் கவர்ந்து சென்ற இராவணனது தம்பியான வீடணனையும் சொந்தச் சோதரனாகக் கொள்ளப்போகிறான். இராமனது பெருவாழ்வின் உயர் நிலை இது. இராம பக்தனான வாலி இதை உணரத் தவறி விடுகிறான்.

தாரையிடம் வாலி மேலும் கூறுகிறான்:

தம்பியர் அல்லது தனக்கு வேறுஉயிர்
இம்பரின் இலதுஎன எண்ணி ஏய்ந்தவன்
எம்பியும் யானும்உற்று எதிர்த்த போரிடை
அம்பிடைத் தொடுக்குமோ அருளின் ஆழியான்

---

இம்பரில்-இவ்வுலகில். எய்ந்தவன் - (தம்பியருடன்) இணங்கி வாழ்பவன். உற்று எதிர்ந்த போரிடை-எதிர்த்துச் செய்யும் போரில். அருளின் ஆழியான்-அருட் கடலான்.

வாலி இராமனைச் சகோதர வாஞ்சையின் வடிவமாகக் காண்கிறான். தன்னை மறந்து தம்பியர் நலனுக்காகவே வாழும் இராமனது தகைமையைப் போற்றுகிறான். ஆனால் அந்த இராமனை முன்மாதிரியாகக் கொண்டு வாழும் வளர்ச்சி வாலிக்கு இல்லை. இவனுக்கும் தம்பியிடம் அன்பு உண்டு. ஆனால் தம்பியிடம் ஐயம் கொண்டபின், அந்த அன்பெல்லாம் நஞ்சாகிவிட்டது. மன்னிக்கவேண்டுமென்று மன்றாடிய தம்பியைக் கொல்லக் கருதிய தமையன்தான், இராமனது சோதர வாஞ்சையைப் போற்றுகிறான். இந்த முரண்பாட்டுக்குக் காரணம் என்ன? இராமனை உதட்டளவில் போற்றும் வஞ்சகனா வாலி? இல்லை; உள்ளன்புடன்தான் போற்றுகிறான். ஆனால் தனது லட்சியத் தலைவனது நல்லியல்பைக் கடைப்பிடிக்கும் வளர்ச்சி அவனுக்கு இல்லை. எனவே அவன் நம் வெறுப்புக்கு அல்ல, பரிவுக்கே பாத்திரமாகிறான். தவறுவது இயல்புதானே?

வாலி தன் வளர்ச்சிக் குறைவை உணரவில்லை. தனது லட்சிய புருஷனான இராமனிடம் குறை இருக்குமென்பதையும் அவனால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. அதனால்தான், தமையன்-தம்பி சண்டையில் தலையிட்டு, இடையிலே அம்பு தொடுக்கும் அநீதியை இராமன் இழைக்கமாட்டான் என்று உறுதியாகக் கூறுகிறான்.

இறுதியாக,

இருத்திநீ இறைஇவண்; இமைப்புஇல் காலையில்
உருத்தவன் உயிர்குடித்து உடன் வந்தாரையும்
கருத்தழித்து எய்துவென்; கலங்கல் என்றனன்
விரைக்குழல் பின்உரை விளம்ப அஞ்சினாள்

இறை-சிறிது பொழுது. இவண்-இங்கே. இமைப்பு இல் காலையில்-கணநேரத்துக்குள்ளாக. உருத்தவன்-கோபித்து வந்த சுக்கிரீவன். கருத்து அழித்து-மனம் கலங்கச் செய்து. விரைக்குழல்-வாசனை மிகுந்த கூந்தலை உடைய தாரை. பின்-அதன் பின்பு.

அஞ்சி நின்ற தாரை: அஞ்சாது சென்ற வாலி. இருவரும் நம் பரிவுக்குப் பாத்திரமாகின்றனர்.

"இரவி குமாரனுக்கு இன்னுயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன் உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான்" என்ற உண்மையை உளவறிந்து கூறினாள். உலகியல் அறிவும், உயர்குணம் இணையவும் மிகுந்த உத்தமி தாரை.

ஆனால் வாலியோ, அறத்தின் நாயகன், தருமத்தை நடத்திக்காட்டும் கர்மவீரன், தம்பிக்காகத் தரணியை வழங்கிய தியாகி, தன்னேரில்லாத் தலைவன், அண்ணன்-தம்பிச் சண்டையில் தலையிட்டு அம்பு தொடுக்கும் அற்பனாக மாட்டான் என்று அடித்துக் கூறிவிட்டான். "பிழைத்தனை பாவி, நின் பெண்மையால்" என்றே பகர்ந்துவிட்டான். மேல்பேச்சுக்கு வழி இல்லை கணவனுக்குக் கூற்றுவன் வந்துவிட்டான் என்று கதிகலங்கி நிற்கும் காரிகை, பதியிடம் பேசுவதற்குப் பயந்து மறுகுகிறாள்.

ஷேக்ஸ்பியரின் ஸீஸர் நாடகத்தில், கல்பர்னியாவும் இவ்வாறுதான் துன்பமடைகிறாள். அவள் இதமாக எடுத்துக் கூறியதையெல்லாம் அந்த அஞ்சாநெஞ்சன் துச்சமாகக் கருதி நிராகரித்துவிடுகிறான். விதி பின்னிய வலைக்குள் செல்வதைப் போலக் கொலைகாரருக்குத் தலையைக் கொடுப்பதற்குச் சட்டமன்றம் செல்கிறான். இன்னுயிர் அனைய இல்லாள், அன்புடன் விடுத்த எச்சரிக்கைக்குச் செவிசாய்க்காமல் அந்தச் சூரன் செல்கிறான். அஞ்சாது செல்லும் ஸீஸரைக் கண்டு, அஞ்சி நிற்கும் கல்பர்னியா கண்ணீர் சொரிகிறாள்.

அஞ்சாது செல்லும் வாலியின் வீரத்தைப் போற்றும் நம் நெஞ்சில் பரிவு நிரம்புகிறது. அதுமட்டுமல்ல; எந்த இராமன் கரந்திருந்து கொல்வதற்குச் சித்தமாய் இருக்கிறானோ, அந்த இராமன் இது செய்வான் என்ற கருத்தே மனத்தில் இல்லாமல் அவனது தருமத்திலும், தகவிலும் தளராத நம்பிக்கையுடன் வாலி செல்கிறான் என்பதைக் கண்டு, அவன்பால் நமது பரிவுணர்ச்சி அளவிடற்கரியதாய்ப் பெருகுகிறது.

"நான் அவ்விடம் சென்று சுக்கிரீவனோடு போர் புரிந்து, அவனைக் கொல்லாமல் அவனது செருக்கை அடக்கிவிடுகிறேன். உனது விருப்பப்படி, அவனைச் சண்டையில் நெருக்காமல், கையாலும் தடியாலும் அடித்து ஓட்டிவிடுகின்றேன்" என்றுதான் வான்மீகத்தின் வாலி தாரையிடம் கூறுகிறான். ஆனால் கம்பனது வாலியோ "உருத்தவன் உயிர் குடித்து"விட்டு வருவேன் என்று சொல்கிறான். "அடித்துவிட்டு மீள்வேன்" என்று வான்மீகத்தில் இருப்பதைக் "கொன்றுவிட்டுத் திரும்புவேன்" என்று கம்பன் மாற்றிவிடுகிறான். கொல்லக் கருதாமல் வரும் வாலியை இராமன் மறைந்திருந்து மாய்த்தானென்று கதையை அமைத்தால், வாலியின்பால் பரிவு சாலப் பெருகிவிடுமென்று, காவியச் சிற்பக் கலை வல்லுனனான கம்பன் உணர்ந்தான் போலும்! எனவே காவியத் தலைவன்பால் வெறுப்பு உண்டாகாத வகையில், வாலி வதை என்ற சோக நாடகத்தை நடத்திச் செல்ல வேண்டுமென்று கருதிய கம்பன், வாலியைப் பரிவுக்குரிய பாத்திரமாகப் படைக்கும்பொழுதே, அவன் தம்பியைக் கொல்லவேண்டுமென்ற கொடிய எண்ணத்துடன் களத்துக்கு விரைவதாகக் காட்டுகிறான்.

# மற்போரும் மனப்போரும்

உருத்தவன் உயிர் குடிப்பதற்கு விரையும் வாலி உதயகிரியின் சிகரத்தில் தோன்றும் ஞாயிறு என்ன வருகிறான். மலையிலிருந்து புறப்பட்டு, மலை சூழ்வான் மகன்முன் தோன்றும் வாலி, தூணிலிருந்து கிளம்பி இரணியனை எதிர்த்த நரசிங்கனைப்போலக் கண்டோர் அஞ்சி நடுங்கக் காட்சி தருகிறான். இந்த மல்வீரனைக் கண்டு தன்னேரில்லா வில்வீரனே வியப்படைகிறான்.

அவ்வேலை இராமனும் அன்புடைத் தம்பிக்கு ஐய!
செவ்வே செலநோக்குதி தானவர் தேவர் நிற்க
எவ்வேலை எம்மேகம் எக்காலொடு எக்காலவெந்தீ
வெவ்வேறு உலகத்துஇவன் மேனியை மானும்? என்றான்

"தம்பி! உன்னிப்பாக உற்று நோக்குக. வானவர் தானவர் இவனுக்கு ஒப்பாகார் என்பது கிடக்க, எந்தக் கடல், எந்தக் காற்று, எந்த மேகம், எந்தக் காலாக்கினி இவனுக்கு நிகராகும்?" என்று இலக்குவனிடம் இராமன் வியந்து கூறுகிறான். படைக்கலப் பயிற்சி பெறாத பால பருவத்தில், தீ உமிழும் கண்களை உடைய தாடகை "மைவரை நெருப்பு எரிய வந்தது" என வந்தபொழுதுகூட வியக்காத இராமன் இவ்வாறு பேசுகிறான். மிதிலையில் பரமசிவனது சிலையைக் கிடத்தியபொழுது, அதைச் சீதைக்குச் சூட்டும் 'ஏடவிழ் மாலை என்ன எடுத்து, எடுத்தது கண்டனர் இற்றது கேட்டனர்' என்ற வகையில் முறித்த வீரன் இவ்வாறு வியக்கிறான். இராமன் சிவனது

---

செவ்வே-நன்றாக. தானவர்-அசுரர். வேலை-கடல். காலொடு - காற்றுத்தான். கால வெந்தீ - காலாக்கினி. மானும்-ஒக்கும்.

மைவரை-கரிய மலை.

சிலையை இறுத்த ஓசை செவியுற்றுச் சீறிவந்த பரசுராம னைக் கண்டு, தயரதனை உணர்வொழிந்து உயிர் உலைந்து, துயரக்கடலின் எல்லை கண்டவனைகத் தவித்தபொழுது, முறுவல் எய்தி, நன்றொளிர் முகத்தனைகி, நாரணன் வலியின் ஆண்ட வெற்றி வில்லைப் பரசுராமனிடமிருந்து பெற்றுத் தோளுற வாங்கிய பெருவீரனே இவ்வாறு வியந்து பேசுகிறுன்! இதிலிருந்து வாலியின் உருவத் தோற்றத்தையும் வீரப் பொலிவையும் ஊகித்தறியலாம்.

வாலியின் உடல் அமைவையும், அடல் ஆண்மையை யும் கண்டு வியந்துதான் இராமன் இவ்வாறு பேசுகிறுன் என்பது உண்மை இல்லாத வியப்பைப் புனைந்துகூறும் இயல்பு இராமனிடம் கிடையாது. ஆனுல் தன் வியப் பைத் தம்பியுடன் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்பதற் காகத்தான் இராமன் இவ்வாறு பேசுகிறுன் என்று எண்ணுவது மேல்நோக்காகும். இலக்குவனுடன் உரை யாடுவதற்கு இதை ஒரு சந்தர்ப்பமாக அவன் பயன்படுத் திக்கொள்கிறுன்.

சுக்கிரீவனைக் கண்டதிலிருந்து இலக்குவன் ஊமை யாக இருந்துவருவதை இராமன் கவனித்து வந்திருக் கிறுன். சீதையின் நகைகளைக் கண்டு இவன் விம்மிச் சோர்ந்தபொழுதுகூட, இலக்குவன் நெருங்கி வந்து பொருந்தப் பேசி ஆறுதல் கூறவில்லை. இதிலிருந்தே, இளையவனது மனநிலையை மூத்தவன் உணர்ந்திருக்கிறுன். தவிர, இலக்குவன்தான் அடுத்தது காட்டும் பளிங்கு போல், நெஞ்சம் கடுத்தது காட்டும் முகத்தை உடை யவன் ஆயிற்றே. அவனை நோக்கினுலேயே, அவனது மனே இயல்பைத் துல்யமாகப் புரிந்த இராமனுக்கு விஷயம் விளங்கிவிடாதா? இதுவரை, தம்பியிடம் தனியே உரையாடும் சந்தர்ப்பம் இராமனுக்குக் கிடைக்க வில்லை. இப்பொழுதுதான் சுக்கிரீவன் மற்போருக்குச் செல்ல, அனுமன் சற்று எட்டி நிற்க, இலக்குவனுடன் இரகசியமாகப் பேசுவதற்கு வாய்ப்பு உண்டாகியிருக் கிறது. எனவே, வாலியின் பொலிவைச் சுட்டி, இலக்குவ னுடன் உரையாடத் தொடங்குகிறுன்.

நீறுபூத்த நெருப்பைக் கிளறியதைப்போல, இராமன் பேச்சு இலக்குவனது கோபத்தைக் கிளறுகிறது.

வள்ளற்கு இளையான் பகர்வான்;
இவன் தம் முன்வாணுள்
கொள்ளக் கொடுங்கூற் றுவனைக்
கொணர்ந்தான்; குரங்கின்
எள்ளற் கரும்போர் அதுசெய்கலன்
என்னும் இன்னல்
உள்ளத்தின் ஊன்ற உணர்வுற்றிலன்
ஒன்றும் என்ருன்

தம்பியிடமிருந்து தமையன் எதிர்பார்த்த வசை கிடைக்கிறது. இராமன் எது சொன்னுலும் அதுவே வேதம் எனக் கருதி, நகரும் துயிலும் துறந்து தமைய னுக்குத் தொண்டு புரிந்து வரும் இலக்குவன், அந்த அண்ணனையே கொடுங் கூற்றுவன் என்று கூறிவிடு கிருன். அறத்தின் நாயகனுன அண்ணன் 'சகோதரத் துரோகி'யான சுக்கிரீவனுக்குத் துணை புரிவதை அவனுல் புரியமுடியவில்லை. வெந்த புண்ணில் வேல் கொண்டு குத்துவதுபோல், வாலியின் பொலிவைப் பார்த்துப் போற்றும்படி இராமன் கூறியவுடன், உள்ளக் கொதிப் புப் பீறிட்டுக் கிளம்புகிறது. "கூற்றுவா! உன் இரை யின் மேனியைப் போற்ற வேண்டுமா? நீயே பார்த்துப் போற்று! இந்தக் காட்சியைக் காணவே என் கண்கள் கூசுகின்றன. சித்தங் கலங்கி மனம் பதறிநிற்கும் என்னை ஒன்றும் கேட்காதே!" என்று கூறிவிடுகிருன்.

அண்ணன் செய்யத் துணிந்த கொடிய செயலைக் கண்டிப்பதற்காக அவனைக் 'கொடுங் கூற்றுவன்' என்று

---

வள்ளல் என்றது இராமனை. தம்முன்-தனது தமை யன் (வாலி). வாணுள் கொள்ள-வாழ்நாளைக் கவர்ந்து கொள்ள. எள்ளற்கு அரும் போர்-பழிப்புக்கு இடமில லாத போர். செய்கலன்-செய்வான் அல்லன். ஒன்றும் உணர்வுற்றிலன்-முழுவதும் உணர்வு அழிந்திருக்கிறேன்.

கூறுகிருன். உடன் பிறந்தவனைக் கரந்திருந்து கொல்வ தற்குக் காலனை இட்டுவந்து நிறுத்திவிட்டுச் சுத்தவீரனைப் போலக் களத்தில் புகுந்திருக்கும் சுக்கிரீவனது பழிச் செயல் உள்ளத்தில் பதிந்துவிட்டதென்று கூறித் தன் துன்பத்தின் வன்மையை உணர்த்துகிருன். மேலும்,

**ஆற்ருது பின்னும் பகர்வான் அறத்தாறு அழுங்கத்**
**தேற்ருது செய்வார்களைத் தேறுதல் செவ்விது அன்ருல்;**
**மாற்ருன் எனத்தம் முனைக்கொல்லிய வந்து நின்ருன்**
**வேற்ருர்கள் திறத்துஇவன் தஞ்சம்என்? வீர!என்ருன்**

தமையனைக் கொல்வதற்கு மறலியைக் கொண்டுவந் திருக்கும் சுக்கிரீவன், அறத்தைக் கொன்ற பாவியாக இலக்குவனுக்குக் காட்சி தருகிருன். "தமையன் உயி ருக்கு உலைவைக்கும் கதிரோன் மகனை நாம் எப்படி நம்ப முடியும்?" என்று கேட்கிருன் இலக்குவன். அன்புரிமை இல்லாத கொடியவனைத் துணையாகக் கொண்டது மதி கேடான செயல் என்று இடித்துரைக்கிருன்.

இதைக் கேட்ட இராகவனிடம் எத்தகைய மெய்ப் பாடு ஏற்படுகிறதென்பதைக் கவிஞன் விண்டுரைக்க வில்லை. சீதையை இழந்ததால் சிந்தனை கலங்கி, ஆவே சத்தில் அவசர வாக்குக் கொடுத்துவிட்டு, முறைதவறிய செயலுக்குக் கருவியாகவேண்டிய நிலைமையில் இராமன் நிற்கிருன். அவனது உளச்சான்று அவனை எவ்வாறெல் லாம் அல்லற்படுத்திக்கொண்டிருக்கவேண்டும்! இந்த நிலையில், பரிவுகாட்டித் துன்பத்தைத் தணிக்கவேண்டிய தம்பியும் குத்திக்காட்டினுல் அவன் பொறுமை இழப் பதில் வியப்பில்லை!

இரு வீரர்கள் போர்புரியும்போது இடையில் புகுந்து ஒருவனைத் தாக்குவதே தூய வீரத்துக்கிழுக்கு. இராமனே

---

ஆற்ருது-மனம் பொருமல். அறத்தாறு-தர்மநெறி. அழுங்க-கெட. தேற்ருத-நம்பத்தகாத (காரியத்தை). தேறுதல்-நம்புவது. மாற்ருன் என-பகைவன்போல. தம் முனை-தன் தமையனை. வேற்ருர்கள்-மற்றவர்கள்.

கரந்திருந்து அம்பு தொடுக்கப்போகிறான். அவனது தூய நெஞ்சம் இதற்கு இலேசில் ஒருப்பட்டிருக்குமா? தாடகையுடன் போர் புரிவதற்குக்கூடத் தயங்கினவனல்லவா? மன்னுயிர் அனைத்துக்கும் கூற்றாகித் தீது என்று உள்ளவை யாவையும் செய்த கொடியாள், சூலத்தை எறிந்து கொல்ல வந்தபொழுதும், "பெண்கொலை பாவம்" என்று தயங்கினான் அல்லவா? அந்தத் தயக்கத்தைப் போக்கித் தாடகை வதத்துக்கு இசைந்தபொழுதும், "அறன் அல்லவாய் எய்தினும்" விசுவாமித்திரன் செய்க வென்று ஏவினால் அதை வேதம் எனக் கொண்டு செய்வதே 'அறம் செய்யும் ஆறு' எனக் கூறிப் பெண்ணுடன் போர்புரிய நேர்ந்த பழியை விசுவாமித்திர முனிவர்மீது சாற்றியவன் அல்லவா? இராவணனுடன் நிகழவிருக்கும் யுத்தத்தில், முதற்போரில் இராவணன் நிராயுதபாணியாகிப் பூதலம் என்னும் மங்கையை நோக்கி, 'நிலம் விரல் கிளைத்திட' (கிளைத்திட-கிறிட) நிற்கும் பொழுது, "இன்று போய் நாளை வா" என்று சொல்லப் போகிறான் அல்லவா? இராவணனிடம் இவ்வாறு நடந்து கொள்ளவிருக்கும் பண்பாளன், வலிந்து சென்று, மறைந்துநின்று வாலியைக் கொல்லும் மறச்செய்கையை விரும்புவானா?

இராமன் தர்மசங்கடமான நிலையில் சிக்கித் தத்தளிக்கிறான். வாலியைக் கொல்வது அறத்துக்கு விரோதம் என்றால், பேசாமலிருப்பது சுக்கிரீவனுக்கு அளித்த உறுதிமொழிக்கு உலைவைப்பதாகும். சிநேக தர்மத்தைக் காப்பாற்றவேண்டுமானால், வாலியைக் கொல்ல வேண்டும். எனவேதான் இராமன் மனம் மறுகி நிற்கிறானென்று நாம் கருதல் வேண்டும்.

தன்னை வருத்தும் தர்மசங்கடத்தைத் தவிர்ப்பதற்குத் தம்பி வழிதுறை காட்டியிருந்தால், இராமன் அவனைப் போற்றி நன்றி கூறியிருப்பான். ஆனால் இலக்குவனோ அண்ணனைக் கடிந்துகொள்வதுடன் அமைந்து விடுகிறான். இராமனுக்கு வெப்பமே உண்டாகிறது. அப்பொழுது,

**அத்தா, இதுகேள்என ஆரியன் கூறுவான்இப்**
**பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?**
**எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்களெல்லாம்**
**ஒத்தாற் பரதன் பெரிது உத்தமனாதல் உண்டோ?**

"நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் கோட்படா பதமே குரக்குருக் கொண்டது" என்று முன்னர் அனுமனை வியந்து பேசிய இராமனே இப்பொழுது அனுமனையும் மற்றவரையும் பித்தாய விலங்கு என்று தாழ்த்திப் பேசுகிறான்!

"நாம் ஊனுடை மானிடம் ஆனது உண்மையால்" என்று (கலன்காண் படலத்தில்) அனுமன் வற்புறுத்திப் பேசினான். அவன இராம இலக்குவரையும், சுகிரீவனையும் தன்னையும் உள்ளடக்கியே 'நாம்' என்றான். அப்பொழுது அதை மறுத்து உரைக்காத இராமன் இப்பொழுது அனுமன், சுக்கிரீவன், வாலி முதலானோரைப் பித்தாய விலங்கு என்று குறிப்பிடுகிறான்!

"நீ என் இன்னுயிர்த் துணைவன்" என்று எந்தச் சுக்கிரீவனைப் பார்த்துச் செப்பினானோ அதே சுக்கிரீவனை இப்பொழுது 'பித்தாய விலங்கு' என்று இகழ்கிறான்.

---

அத்தா-அப்பா. பித்தாய விலங்கு-விவேகமில்லாத மிருகம். ஒத்தால்-மூத்தவரோடு மனமொத்து நடந்தால். ஆரியன்-சிறந்தவனான இராமன். [ஆரியன் என்ற சொல்லைச் சிறந்தவன் என்ற பொருளிலேயே கம்பன் ஆள்கிறான். இங்கு இராமனை ஆரியன் என்றான்.

"அற்றதால் முகத்து இனி விழித்தல், ஆரிய,
பெற்றனன் விடையெனப் பெயர்ந்து போயினான்"

என்று கும்பகர்ண வதைப் படலத்தில் வருகிறது. அங்கு 'ஆரிய' என்று கும்பகர்ணன் இராவணனைக் குறிப்பிடுகிறான். ஆ-ர்]

நாட்படாமறை-காலமுதிர்ச்சியால் கெடுதல் அடையாத வேதம். நவை-குற்றம். கோட்படா-அறியப்படாத. பதமே-பரமபதமே. குரக்குரு-குரங்கின் உருவம்.

அனுமனைப் புகழ்ந்ததும், சுக்கிரீவனைச் சோதரனாக வரித்ததும் அரசியல் சூழ்ச்சியின்பால் பட்டவையல்ல. அவை உள்ளன்புடன் உவந்து செய்த காரியங்கள். எனினும், இங்கு சுக்கிரீவனைப் பித்தாய விலங்கு என்று பொருந்தா வாதம் செய்கிறான் என்றால் அது அவனது அமைதி கண்ட அறிவிலிருந்து பிறக்கும் வாதம் அல்ல. நிலைமை நெருக்கடி புரியாமல் தர்மம் உபதேசிக்கும் தம்பியிடம் ஏற்பட்ட ஆத்திரம் இவ்வாறு வாய்வந்த விதத்தில் படபடவென்று பேசச் செய்கிறது. அந்த வேகத்தில் தான் உத்தமத் தம்பிக்கு உதாரணமாகப் பரதனைப் பொருத்திக் காட்டி, இலக்குவனை மட்டம் தட்ட முனைகிறான்.

பரதன் உத்தமத் தம்பி என்பது உண்மைதான். ஆனால் இலக்குவன் அவனுக்கு எவ்விதத்திலும் குறைந்தவன் அல்லவே? கண்எதிரில் இலக்குவன் இருக்கும் பொழுது, அவனைக் குறிக்காது பரதனையே உத்தமத் தம்பிக்கு உதாரணமாகக் காட்டுவதேன்? "என் கருத்துக்கு இசையாமல், மனம் மாறுபட்டு நிற்பதால், நான் உன்னை உத்தமத் தம்பியாகக் கொள்ளமாட்டேன்" என்று குத்திக் காட்டுவதுதான் இராமனது நோக்கம். இந்த உட்பொருளை உணர்ந்து இளையவன் எவ்வாறு மனம் புழுங்கியிருப்பான்!

உண்மையில், இலக்குவனிடம் இராமன் அளவிடற்கரிய பாசம் கொண்டிருந்தான். நீர் கொண்டுவரச் சென்ற இலக்குவன் அயோமுகியின் கையில் அகப்பட்டுத் திரும்பாமையால் பெருந்துன்பம் அடைந்தவன் இராமன். தாய் தந்தையரையும் சிதையையும் பிரிந்த பின்பும் உயிர்துறக்காமல் இருப்பதற்குக் காரணம், 'உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவா?' என்று அவ்வமயம் கதறினன்.

*அறப்பால் உளதேல் அவன்முன் னவனாய்ப்*
*பிறப்பால் உறின்வந்து பிறக்க என்று*

---

அறப்பால்-புண்ணியம். அவன்-அந்த இலக்குவன். "நான் ஏதாவது புண்ணியம் செய்திருந்தால், அவனுக்கு

எண்ணித் தன் உடைவாளை உருவி உயிரை மாய்க்க எண்ணினான். அத்தகைய இராமன் இப்பொழுது பரதனைப் பிரத்தியேகமாகப் பாராட்டுகிறான் என்றால், அது இலக்குவனிடம் அன்பு இல்லாததால் அல்ல; அவனுக்குப் பாடம் கற்பிக்க வேண்டுமென்றுதான்.

விவேகமில்லாத விலங்குகளிடம் சகோதர வாஞ்சையை எதிர்பார்க்கக் கூடாது என்றும், மனிதரில்கூடப் பரதன் போன்ற உத்தமத் தம்பிகள் சிலரே என்றும் கூறி, வாலிக்குச் சுக்கிரீவன் கூற்றுவனை இட்டுவந்திருக்கும் கொடுமைக்குச் சமாதானம் கூறுகிறான். மேலும்,

**விற்றாங்கு வெற்புஅன்ன இலங்குஎழில் தோள ,மெய்ம்மை**
**உற்றார்சில ரல்லவரே பலர்என்பது உண்மை**
**பெற்றோர்உழைப் பெற்றபயன் பெறும்பெற்றி யல்லால்**
**அற்றார் நவை யென்றலுக்கு ஆகுநர்யார் கொல்என்றான்**

"மெய்ம்மை உற்றார் சிலர், அல்லவரே பலர்" என்பது உண்மையாம்! அதனால் துணையாக் கிடைத்தவரிடத்தில் அடையக்கூடிய நன்மையைப் பெற்றுக்கொள்வதுதான் அறிவுடைமையாம்! அறம் வளர்க்கும் கண்ணாளன் இவ்வாறு பேசுகிறான். பொய்யும் பொல்லாங்கும் நிறைந்திருக்கும் உலகத்தில், குற்றம் பார்த்தால் காரியம் நடக்காது என்ற காரணத்தால், வாலியின் வதத்துக்கு உடன்பட்டதாக வக்கிரவாதம் செய்கிறான்! "அண்ணனைக் கொல்லக் கருதும் சுக்கிரீவன் நமக்கும் குழிபறிக்க மாட்டான் என்பதற்கு என்ன உத்திரவாதம் இருக்கிறது?" என்று மொழிந்த இலக்குவனிடம், "உத்திரவாதமாவது, உறுதிப்பாடாவது! உலக இயல் தெரியாமல் உளறு

---

அண்ணனாக மீண்டும் வந்து பிறப்பேனாக!" என்பது இதன் பொருள்.

விற்றாங்கு-வில்லைத் தாங்கும். வெற்பு-மலை. இலங்கு-பிரகாசிக்கிற. உழை-இடம். பெற்றி-தன்மை. நவை-குற்றம்.

கிருயே! முடிந்த அளவுக்கு அவனைப் பயன்படுத்த வேண்டியதுதான்!'' என்று தொனிக்கும் வகையில் இராமன் எதிர்மொழி இயம்புகிருன்.

குற்றம் குறை யாதுமின்றிக் குணமே உடையார் உலகத்தில் அரியர் என்று கூறுவதில் தவறு இல்லை. "அற்ருர் நவை யென்றலுக்கு ஆகுநர் யார்கொல்?'' என்று கேட்பது சரியான கேள்விதான். "நாமும் நவை யற்றவரல்ல'' என்று தொனிக்கும் வகையில் இந்தக் கேள்வி அமைந்திருப்பதும் பொருத்தமானதுதான். குணம் நாடிக் குற்றமும் நாடி, குற்றம் மிகுந்தவரைத் தள்ளிக் குணம் மிகுந்தவரைக் கொள்ளவேண்டும் என்று கூறுவது அறவழிப்பட்ட அனுபவ சாத்தியமான கருத்தாகும்.

ஆனல் "தவறுவது மனித இயல்பு'' என்று கூறுவது ஒன்று; "மெய்ம்மை உற்ருர் சிலர் அல்லவரே பலர்'' என்பது இன்னென்று. பெரும்பாலும் நற்குண சீலராய் இருப்பினும் சிறுபான்மை பிழை செய்வது மானிடத்தின் இலக்கணமென்ற கருத்தைத் திரித்துப் புரட்டிப் பெரும்பாலான மக்கள் பொய்யரே என்று முடிவுசெய்தால், பொய்யும், சூதும், சதியும் இவ்வுலகத்தின் தவிர்க்கமுடியாத நியதிகள் என்று ஏற்பட்டுவிடும்; சதி சூதுக்கும் பொய் பொல்லாங்குக்கும் நியாயம் கற்பிப்பதாகிவிடும். தர்க்கத்தில் கருத்தை இழந்த இராமன், இந்தச் சறுக்குப் பலகையில் இறங்கிவிடுகிருன்.

இராமனது கோபமும் குதர்க்கமும் இலக்குவனிடம் எத்தகைய சலனங்களைத் தோற்றுவித்தன என்பதைக் கம்பன் எடுத்துரைக்கவில்லை. இவ்வாதத்தை மேலும் நீட்டுவதை விரும்பாத கவிஞன், திரையை விழச் செய்து, வாலி-சுக்கிரீவர் மல்யுத்தக் காட்சியைத் துவக்கிவிடுகிருன்.

இராம-இலக்குவர் உரையாடல் கம்பனது சொந்தப் படைப்பு. வான்மீகத்தில், இலக்குவனது சம்மதத்தைப் பெற்றுக்கொண்டே, இராமன் வாலியை வதைக்கக் கிளம்புகிருன். ஆனல் கம்பனின் இலக்குவன், சுக்கிரீவ உறவையும், வாலி வதையையும் வெறுக்கிருன். 'சகோ

தரத் துரோகி'யான சுக்கிரீவனுக்கு உதவி செய்யப் புகுந்து இராமன் தன்னைத்தான் தாழ்த்திக்கொள்வதாகக் கருதுகிறான். இராமன் இதற்கு அளிக்கும் பதில், அவனது மனத்தின் தடுமாற்றத்தையே வெளிப்படுத்துகிறது அதனால் அவனது வெகுளியைக் கண்டோ, விதண்டா வாதத்தைக் கண்டோ, நாம் அவன்மீது வெறுப்புக் கொள்ளவில்லை. அறத்தின் நாயகனும் தடுமாறும்படியான சிக்கல் அமைந்துவிட்டதே என்று வருந்தி, அவன்பால் பரிவுகொள்கிறோம்.

இந்த அண்ணன்-தம்பி சொற்போரை நிறுத்திவிட்டு அந்த அண்ணன்-தம்பியின் மற்போரைப் படம்பிடித்துத் தருகிறான் கம்பன். ஒன்றையொன்று நெருங்கும் இரு குன்றுகளைப் போன்று வாலி-சுக்கிரீவர் நெடுநேரம் ஒருவர் கைக்கு ஒருவர் எட்டாமல், வலசாரி இடசாரியாகத் திரிகின்றனர். அதன் விசையால் குயவன் சுழற்றுகின்ற சக்கரம்போல, இந்த நிலவுலகம் சுழல்கின்றது. கோளும் கோளும் (கோள்-கிரகம்) மோதுவனபோல் கொடுஞ்சமர் புரியும் வாலி-சுக்கிரீவர், தோளொடு தோளையும், தாளொடு தாளையும் தேய்த்ததால் தீப் பிழம்புகள் தோன்றி, மின்னல் வீசுவதுபோல் பரந்த வானத்தில் விரைந்து செல்கின்றன. கோபம் என்ற ஒரு கொடிய குணம் இரு வடிவுகொண்டு பொருதல்போல, அவர்கள் போர்புரிகின்றனர். அவர்கள் விண்மேல் உள்ளனரோ, மண்மேல் உள்ளனரோ, கண்மேல் உள்ளனரோ என்று காண்போர் வேறுவேறு நோக்கி வியக்கும்படி, விரைவாகச் சுழன்று திரிந்து பொருதுகின்றனர். அவர்கள் ஒருவரையொருவர் குத்தியதால் உண்டாகும் ஓசை, கற்பாந்த காலத்து மேகங்களின் இடிமுழக்கத்தை ஒத்தது. மார்பில் மோதியும், வாலால் வரிந்தும், கரத்தால் குத்தியும், காலால் உதைத்தும், கடித்தும், இடித்தும், மரத்தால் அடித்தும், மலையைப் பறித்துத் தலைமேல் வீசியும் அவர்கள் வெஞ்சமர் செய்கின்றனர். அதைக் கண்டு, விண்ணவரே அஞ்சி நிலைகுலைகின்றாரென்றால், வேறு என்ன விளம்புவது? என்று கூறி அமைகிறான் கம்பன். இறுதியில் யானையைச் சிங்கம் அழிப்பதைப்போல,

வாலி தன் தம்பியை நிலைகுலையச் செய்து நெருங்கிய பொழுது, அவன் தப்பியோடி இராமனை அடைகின்றான். உலைந்த சிந்தையோடு உணங்கிய சுக்கிரீவன் வணங்கியவுடன், "உள்ளம் குலைந்திடேல், உமை வேற்றுமை தெரிந்திலம், கொடிப்பூ மலைந்து செல்க" என்று இராமன அவனிடம் கூறுகிறான்.

சுக்கிரீவன் வாலியுடன் வெஞ்சமர் செய்யும்பொழுது, வாளியைச் செலுத்துவதாக வாக்களித்த இராமன், அந்த வாக்குப்படி நடக்காததற்கு இவ்வாறு காரணம் கூறுகிறான். வாலியும் சுக்கிரீவனும் உடலமைவில் ஒத்திருப்பதால், "வாலி யாா? சுக்கிரீவன் யார்?" என்பது புலனாகவில்லையென்று கூறி, வாலியைக் கொல்லக் கருதிச் சுக்கிரீவனைக் கொல்லும் பேராபத்தைத் தவிர்க்கவே வாளாவிருந்ததாக இராமன் கூறுவது உண்மைதானா என்பதைச் சிந்திக்கவேண்டும்.

"உங்களது உருவத்தின் ஒற்றுமையில் மயங்கினேன். எனவே, விரோதியைக் கொல்கின்ற என்னுடைய வேகமிகு வாளியை நான் ஏவவில்லை" என்றுதான் வான்மீகத்திலும் இராமன் கூறுகிறான். ஆனால் இந்தச் சமாதானத்தைச் சத்திய வாக்காகக் கொள்ள முடியாதென்றே வான்மீகத்துக்கு விரிவுரை எழுதியுள்ள திலகரும், கோவிந்தராஜரும் கருதுகின்றனர். "வாலி யார்? சுக்கிரீவன் யார் என்பதை இராமர் நிச்சயமாக அறிந்திருப்பார். ஆனால் அந்த நேரத்தில் வேறுபாடு அறிவதில் அவர் சிந்தை செல்லவில்லை" என்று கோவிந்தராஜர் கூறுகிறார். அச்சமயம், இராமர் சிந்தையில் வேறு விஷயம் குடிகொண்டிருந்ததே காரணம் என்பது அவர் கருத்தாகும். இராமன் எதைப்பற்றி எண்ணிக் கொண்டிருந்தானோ, நாம் அறியோம்.

வாலியும் சுக்கிரீவனும் உருவத்தில் ஒத்திருந்ததால், அவர்களுடன் அதிகம் பழகியிராத இராமனுக்கு வேற்

---

உலைந்த—வருந்திய. உணங்கிய-வாட்டமுற்ற. தெரிந்திலம்-அறியாமற் போனோம். மலைந்து-சூடி.

றுமை காண்பது கடினம்தான். ஆனல் போரின் முடிவில், வாலி சுக்கிரீவனைக் குத்திக் குமைத்தபொழுது, தாக்குண்ட இளவலையும் தாக்கிய வாலியையும் இனம் கண்டு, தாக்கியவன்மீது அடுசரம் செலுத்தியிருக்கலாம் அல்லவா? ஒருவேளை, சுக்கிரீவன்தான் வாலியின் வலியை அடக்குகிருனே என்று ஐயப்பாடு தோன்றியிருந்தாலும், அருகில் இருந்த அனுமனிடம் தெளிவு கோரியிருக்கலாமல்லவா? மூத்தவன் பிடியில் சிக்கிப் பின்னவன் பதறியபொழுது, அனுமன் எவ்வாறெல்லாம் துன்பப்பட்டிருப்பான்! மராமரங்களைத் துளைத்த வாளி எங்கே எங்கே என்று எண்ணி ஏங்கித் தப்பிப் பிழைக்க முயலும் சுக்கிரீவனையும் அபயம் அளித்த இராமனையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தான் அனுமன் என்றே நாம் ஊகிக்கலாம். இராமன் முகக்குறிப்பால் தன் சங்கடத்தைச் சுட்டியிருந்தால், அனுமன் உடனுக்குடன் நண்பனையும், பகைவனையும் வேறுபடுத்திக் காட்டியிருப்பான் அல்லவா?

இராமன் கரந்திருந்த இடத்தை நோக்கி, உடம்பெல்லாம் உதிரம் சோர ஓடி வருபவன் சுக்கிரீவன் என்பதை அவன் உணர்ந்திருக்க முடியாதா? அப்பொழுதாவது, 'உருத்தவன் ஓடிவிட்டானே' என்று திகைத்துநின்ற வாலி மீது இராகவன் பகழியை ஏவியிருக்கமுடியாதா?

உருவ ஒற்றுமையால் இராமன் முதலில் மயங்கியிருக்கலாம். ஆனல் விரைவில் அந்த மயக்கத்தைப் போக்கிக் காரியத்தை முடிக்க, அவனுக்கு வாய்ப்பு இருந்தது. என்ருலும் அவன் அதைப் பயன்படுத்தவில்லை.

வான்மீகத்திலாவது, இராமனது மறைவிடத்துக்கும், வாலி-சுக்கிரீவர் மல்லமர் நிகழ்ந்த களத்துக்கும் இடையே நெடுந்தூரம் இருந்ததுபோல் தோன்றுகிறது. கம்பனில் அந்த இடரும் இல்லை.

வாலியின் வாக்குமூலத்தைக் கேளாமலே, அவனைக் குற்றவாளி என்று மதித்து, மரணதண்டனை அளித்து, அதைக் கரந்திருந்து தொடுக்கும் பகழி மூலம் நிறைவேற்றும் தகவிலாச் செயலை இராமனது மனம் ஒப்பவில்லை.

இலக்குவனுடன் நடத்திய வாதத்தில் அவன் விட்டுக் கொடுக்காமல் பேசினுன் என்ருலும், அது அவனது உளச்சான்றின் உறுத்தலை அதிகப்படுத்தியிருக்கவேண்டும். எனவேதான், அவன் தயங்கித் திகைத்து வாளா விருந்துவிடுகிருன். மற்போரில் அந்த அண்ணன் வெற்றி பெறுகிருன்: மனப்போரில் இந்த அண்ணன் இறுதிகாண முடியவில்லை.

கொடிப்பூச் சூடிச் சுக்கிரீவன் மறுபோருக்குச் சென்றபிறகும் இராமன் ஒரு முடிவுக்கு வரமுடியாமல் தத்தளிக்கிருன் என்றே கொள்ளவேண்டும். அதனுல் தான், முதற்போரில் சொல்லமுடியாத துன்பத்துக்கு உள்ளான இரவிமைந்தன் மீண்டும் இன்னல் உறுவதற்கு இடம்தராமல், உடனுக்குடன் அம்பைச் செலுத்தவேண்டிய அண்ணல், காலம் கடத்துகிருன். இந்திர குமாரன் கதிர் மகனை உயிர்நிலைகளில் அடித்துப் புடைத்து உதைத்து மயங்கச் செய்யும் வரை, இராமனது கலக்கம் தெளியவில்லை. கண்களிலிருந்தும் காதுகளிலிருந்தும் இரத்தம் பெருக்கெடுத்தோடச் சிதைவுற்ற சுக்கிரீவன் இராமன் இருந்த திசையை ஏக்கத்துடன் நோக்கிய பொழுதும், இராமனது வில் வளையவில்லை. இவனைப் "பற்றி எடுத்துப் பாரிடை எற்றுவன்' என்று எண்ணி, வாலி சுக்கிரீவனது இடுப்பிலொருகையும் கழுத்திலொரு கையுமாகப் பிடித்து எடுத்துத் தன் தலைக்குமேலாகத் தூக்கியபோதே, இனிச் சுக்கிரீவன் உயிர்தப்பான் என்ற நிலை ஏற்பட்டபோதே, இராகவன் வாலி மார்பு குறித்து வாளி விடுக்கிருன். வாலியைக் கொல்லாவிட்டால், சுக்கிரீவன் சாவான் என்ற அபாயகரமான நிலையைக் கண்ட பின்னரே, இராகவன் ஒருவகையாக மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, கணையை ஏவுகிருன் என்று நாம் அனுமானிக்கலாம். "கோலொன்று வாங்கித் தொடுத்து, நாணெடு தோளிறுத்து இராகவன் துரந்தான்"

---

பாரிடை எற்றுவன்-தரையில் மோதுவேன்.

கோல்-அம்பு. இறுத்து-இறுக்கி. துரந்தான்-செலுத்தினுன்.

என்று கவி கூறுவது கவனிக்கத்தக்கது. இராகவன் அம்பு ஒன்றை எடுத்து வில்லில் பூட்டி, நாணைத் தோள் அளவும் இழுத்து, அம்பைச் செலுத்துகிறான் என்று மட்டும் கூறாமல், நாணுடன் தோட்களையும் இறுக்கிச் செலுத்துகிறான் என்று கூறுகிறான் கம்பன். கோதண்டராமன் கணையை விடுக்கும்பொழுது, தோட்கள் ஒத்துழைக்க மறுப்பதில்லை. ஆனால் இப்பொழுது அவை யும் வில்லுக்கு நேரவிருக்கும் பழியை எண்ணி நாணின போலும்! எனவே, நாணினையும் தோட்களையும் இறுக்கி அம்பைச் செலுத்தினான் என்று கவி கூறுகிறான்!

# அடுசரம் தொடுத்தவனைச் சாடும் சுடுமொழி

பஞ்சபூதங்களினும் மிஞ்சிய வலிவுடையான் மார்பில் இராம பாணம் எளிதில் ஊடுருவுகிறது. "காரும் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச் சேரும் சூசியில் சென்றது" என்கிறான் கவி. அதன் விளைவு என்ன?

அலங்கு தோள்வலி அழிந்தனன் தம்பியை அருளான்
வலங்கொள் பாரிடை எற்றுவான் உற்றபோர் வாலி,
கலங்கி வல்விசைக் கால்கிளர்ந்து எறிவுறக் கடைக்கால்
விலங்கல் மேருவும் வேர்பறிந் தாலென வீழ்ந்தான்.

வாழைப்பழத்தில் தைத்துச் சென்ற ஊசிபோல், இராமனது பகழி வாலியின் மார்பில் ஊடுருவும்பொழுது, வாலி நிலைகுலைந்து விழுகின்றான். கற்பாந்த காலத்தில் வலிய வேகத்தை உடைய ஊழிக்காற்று எழுந்து வீசுவதால் மேருமலை நிலைபெயர்ந்து விழுந்தது என்ன அவன் விழுகிறான். அச்சமயம் அவன் தோள்வலியை இழந்து தோற்று ஒடுங்கிய தம்பியிடம் கருணைகாட்டாமல், அவனைத் தூக்கி வலிய தரையில் மோதிக் கொல்லும் தருவாயில் இருப்பதை,

---

காரும் வார்சுவை-முதிர்ந்து மிக்க சுவை உடைய. கதலியின் கனி-வாழைப்பழம். கழியச் சேரும்-தைத்துச் செல்கின்ற. சூசி-ஊசி.

அலங்கு-விளங்குகின்ற. அருளான்-கருணை கொள்ளாதவன். வலங்கொள் பாரிடை-வலிய தரையில். போர் வாலி-போரில் வல்ல வாலி. கால்-காற்று. கடைக்கால்-கற்பாந்த காலத்தில். எறிவுற-எழுந்து வீசுதலால்.

**அலங்கு தோள்வலி அழிந்தனன் தம்பியை அருளான்**
**வலங்கொள் பாரிடை எற்றுவான் உற்றபோர் வாலி**

எனக் கூறிக் கவிஞன் நினைவூட்டுகிறான். மேருவை நிகர்த்த வாலி நிலைகுலைந்து விழும் துன்பக்காட்சியின் வெம்மையைக் குறைக்கக் கம்பன் ஆளும் உத்தி இது.

எதிர்பாராத வகையில் நெஞ்சில் நுழைந்த படைக் கலம் தன்னைப் பாரில் தள்ளிய விந்தையால் அதிர்ச்சி அடைந்த வாலி, தம்பியைக் கொல்லச் சூழ்ந்த வினையை மறக்கிறான்; தன்னைக் கொல்லக் கருதியவன் யார் என் பதை அறிவதில் அவனது கருத்து நிலைத்து நிற்கிறது. எனவே சுக்கிரீவனை எடுத்த பிடி நெகிழ்கின்றது; ஆனால் கடுங்கணையைக் கவர்ந்த பிடி தளரவில்லை.

கோதண்டத்திலிருந்து செல்லும் இராம பாணம், குறித்த இலக்கை அழித்துவிட்டு விரைவினில் மீள வல்லது. ஆனால் வீரவாலி, தன் மார்பில் புகுந்த வாளி அப்பால் செல்வதைத் தடுத்துவிடுகிறான். அதை,

**... ... ...வலிய கரத்தால்**
**பற்றி வாலினும் காலினும் பிணித்துஅகப் படுத்தான்**
**கொற்ற வெங்கொடு மறலியும் சிரதலம் குலைந்தான்**

என்று கூறுவான் கவி.

உயிர் போகும் தருவாயிலும் வாலிக்கு உள்ள மனவுரத்தைக் கண்டு, காலதேவனும் திகைக்கின்றான். "கூற்று என் பெயர் சொலக் குலையும்" என்று முன் னர் தாரையிடம் வாலி இயம்பியது இவ்வகையில் மெய் யாகிறது.

"அழுந்தும் இச்சரம் எய்தவன் யார்கொல்?" என்று அயிர்த்து, வெகுளிக்கு ஒரு வடிவமான வாலி, கரங்களை

---

மறலி-யமன். சிரதலம் குலைந்தான்-சிரக்கம்பம் செய்தான்.

நிலத்தில் மோதுகிருன்; கண்களில் தீ உமிழத் திக்கெட்டும் நோக்குகிருன். கைகால்களையும் வாலையும் தொழிற்படுத்தி வாளியைப் பறிக்க முயன்று முடியாமல் வருந்திப் புரள்கிருன். இதைத் தேவர் எய்தனரோ என்று ஐயம் தோன்றி, அவர்களுக்குத் தன்மீது பாணம் எய்ய வல்ல ஆற்றல் இல்லையென்கிருன். ஏவியவர் யாரென்று அறியாது மரிப்பனோ என்று நகை செய்கிருன். இந்திரனது வச்சிராயுதத்துக்கு இந்த ஆற்றல் உண்டா? அல்லது இது திருமாலின் சக்கராயுதமா, சிவனின் சூலமா, ஆறுமுகனின் வேலா என்றெல்லாம் எண்ணிப் புழுங்குகிருன். இறுதியில் மார்பைத் தோண்டிப் பறித்துப் பகழியைக் கண்ட வாலி, இது ஒரு அம்பே என்பதைத் தெரிந்து, அதைக் கழற்றி எடுத்து ஏவிய பரமன் பெயரை அறியத் துணிகிருன். அப்பொழுது ஒரு அற்புதம் நிகழ்கிறது. எங்கும் சிக்காமல் தங்கு தடைகளைத் தகர்த்தெறிந்து கொண்டு விரைந்து, இலக்கை அழித்து மீண்டுவரும் தனித்திறத்துக்கு உரிய இராமபாணம், வாலியால் பறித்தெடுக்கப்படுகிறது. இராமபாணத்தின் பெருமைக்கு இது ஒரு பங்கம்தான். வாளியை ஆளி போல் வாலி வாங்கியதை,

ஆங்கு நோக்கினர் அமரரும் அவுணரும் பிறரும்
வீங்கி னுர்கள்தோள், வீரரை யார் வியவாதார்?

மனத்தின் திண்மையாலும், உள்ளத்தின் ஊக்கத்தாலும் வாலி சாதித்ததைக் கண்டு வானவரும் தானவரும் உளம் பூரித்தனர்; உடல் தடித்தனர். ''வீரரை வியவாதார் யார்?'' எனக் கூறிக் கம்பன் தனது வியப்பையும் பூரிப்பையும்கூடப் புலப்படுத்துகிருன்.

வீரம் விளைவித்த அற்புதத்தைத் தொடர்ந்து, இரத்த பாசம் விளைவித்த அதிசயத்தைக் காட்டுகிருன் கவி.

வாசத் தாரவன் மார்புஎனும் மலைவழங்கு அருவி
ஓசைச் சோரியை நோக்கினன்;‖உடன்பிறப் பென்னும்

பாசத் தால்பிணிப் புண்டஅத் தம்பியும் பசுங்கண்
நேசத் தாரைகள் சொரிதர நெடுநிலம் சேர்ந்தான்

மலையிலிருந்த அருவி பாய்வதுபோல், வாலியின் மார்பிலிருந்து குருதி பாய்வதைக் காண்கிறுன் சுக்கிரீவன். உடன்பிறபபு என்னும் உரிமைப்பாசம் உள்ளத்தைக் கலக்குகிறது; உயிர்ப்பைக் குலைக்கிறது. சோகத்தில் துடித்த சுக்கிரீவன், கண்ணீர் சொரிந்து களத்தில் விழுகிறுன்.

வாலிக்குக் காலனை இட்டுவந்த சுக்கிரீவன் களிவெறி கொண்டு ஆடிப்பாடவில்லை. அண்ணனைக் கொன்று அரியணை தந்த இராகவனைப் பாராட்டி வெற்றிவிழாக் கொண்டாடவில்லை. இன்னுயிர்க் காதலி உருமையைத் தேடி ஓடவும் இல்லை. தமையன் மார்பிலிருந்து பெருக்கெடுத்தோடும் குருதியைக் கண்டதும், பகைமையால் வன்மையுற்றிருந்த மனம் மென்மையுறுகிறது; நெகிழ்ந்து நீராகக் கரைகிறது. அடியற்ற மரம்போல் நிலத்தில் விழுகிறுன்.

வஞ்சனை அறியாத நெஞ்சம் சுக்கிரீவனுடையது. அவன் தனக்குத் துன்பம் இழைத்த தமையனைக் கொல்லக் கருதிக் கூற்றுவனைக் கொண்டுவந்தபோதிலும், அந்தப் பகைமைத்தீயெல்லாம் அன்புக்கடலில் அவிந்து போகிறது. காட்டு மனிதரின் முரட்டுத்தனம், வறண்ட இதயத்தில் வளரும் பாலைச்செடி அல்ல. அந்த அநாகரிக மாந்தர், உடலில் வீரமும் உள்ளத்தில் ஈரமும் ஒருங்கே பெற்றவர்கள். அனுபவமில்லாத சமுதாயத்தில் பிறந்து வளர்ந்ததால், அவர்கள் உண்மையை உள்ளபடி உணர முடியாதவர்களாகி, ஆத்திரம் கொண்டு, ஒருவருக்கொருவர் கூற்றுவராக மாறலாம். ஆனுலும் என்ன? அந்த

---

வாசத்தாரவன்-வாசனை பொருந்திய மலர்மாலையைச் சூடிய வாலி. சோரி-இரத்தம். சோரி ஓசை அருவி-இரத்த வெள்ளமாகிய ஆரவாரமுடைய அருவிப் பெருக்கை. பசுங்கண்-பசுமையான கண்கள்.

ஆத்திரம் ஆழ வேரோடிய க்ஷாத்திரமாக மாறுவதில்லை. எனவே இதயத்தின் ஈரம் உலர்வதில்லை.

அனுபவத்திலிருந்து மனித சமூகம் நல்லறிவு பெறலாம்; தீய அறிவும் பெறமுடியும். குழவிப்பருவத்திலிருந்த கிஷ்கிந்தைச் சமூகத்தின் தலைவர்கள் உண்மையை முழுமையாக அறியவும், நெடிது நோக்கவும் நோன்மை பெறவில்லை என்பதைப் போலவே, அவர்கள் கரவும் கபடமும் சூதும் வாதும் போன்ற இழிதகு சூழ்ச்சித்திறன்களையும் பெற்றிருக்கவில்லை. எனவே, சுக்கிரீவனது மனம் எளிதில் மென்மையுற்றுச் சோகக் கண்ணீரில் கரைந்துவிடுகிறது. வாலியின் குருதியில் தம்பியின் வெகுளி கரைகிறதென்றால், அயல் விழுந்து அழும் தம்பியின் கண்ணீரில் அண்ணனது ஆத்திரமும் கரைந்துபோவதைச் சீக்கிரம் காண்போம்.

தம்பியின் சோதர பாசம் மறுமலர்ச்சியுற்றதைக் காட்டிய கம்பன், அடுத்து வாலியின் பெருந்தன்மையைப் புலப்படுத்துகிறான்.

வாலி தன் மார்பிலிருந்து பறித்த அவ் வாளியில் பொறித்த பெயரைக் காண்கிறான். "இராமா" என்னும் "செம்மைசேர் நாமம்" தன்னைத் தெரியக் கண்டவுடனே, அவன் என்ன கருதுகிறான், என்ன செய்கிறான்? கவியே கூறட்டும்:

**இல்லறம் துறந்த நம்பி,**
**எம்மனோர்க் காகத் தங்கள்**
**வில்லறம் துறந்த வீரன்**
**தோன்றலால். வேத நூலிற்**

---

இல்லறம்-மனைவியுடன் வீட்டிலிருந்து வாழும் அறம். அதைத் துறந்து, மனைவியுடன் காட்டில் வாழும் வானப்பிரஸ்தாசிரமத்தை இராமன் மேற்கொண்டான். நம்பி-ஆடவரில் சிறந்த இராமன். எம்மனோர்க்காக-எம்மைப் போன்றவர்களுக்காக. சுக்கிரீவனுக்காக வாலியை மறைந்துநின்று கொன்று வில்லறம் துறந்தான் இராமன். சூரியன் மரபு-சூரிய குலம். நாண்-நாணம்; வெட்கம்.

சொல்லறம் துறந்தி லாத
　சூரியன் மரபும் தொல்லை
நல்லறம் துறந்த தென்னு
　நகைவர நாண்உட் கொண்டான்.

பகழியில் இராமன் பெயரைக் கண்ட வாலி சினந்து சீறவில்லை. முன்னே இருந்த சினமும் மாறிவிடுகிறது. மார்பில் ஊடுருவிய வாளியைத் தடுத்து நிறுத்தி, இதை ஏவியவன் யார் என்று அயிர்த்தபொழுது வானத்தின் முகட்டை இடிப்பேனென்றும், திக்குகளை அழிப்பேனென் றும் கோபாவேசம் கொந்தளிக்கக் கூறிய வாலி, அந்தக் கொதிப்பெல்லாம் அடங்கப்பெற்றவனுய்க் காட்சியளிக் கிறுன். பழியோடு பழகாத இராமன் இந்த இழிசெயலைச் செய்தான் என்பதைக் கண்டவுடன், அவன் தன்னை மறந்துவிடுகிறுன்; தனது மரணவேதனையை மறந்துவிடு கிறுன். தன் நிலையை எண்ணி இரங்கும் சாமான்யனுக இல்லாமல், தன்னைக் கொல்வதற்காகப் பழிசூடிய இராமனையும் அவனது குலத்தையும் எண்ணியே இரங் கும் சான்ருேனுகக் காட்சி தருகிறுன்.

தாரை தன்முன் தோன்றித் தடுத்துக் கூறியன யாவும் உண்மையாகிவிட்டதை எண்ணுகிறுன். "தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ" என்று அவளிடம் அவன் செப்பிய உறுதிவாசகம் பொய்யாகிவிட்டதை நினைக்கிறுன். 'அறத்தின் ஆறு எல்லாம்' உலகத்துக்கு இழைத்துக்காட்டும் உதாரண புருஷனே இவ்வாறு இழி வடைந்தால், இதரர் உய்திபெறுவது எங்ஙனம் என்று கருதுகின்றுன். இவ்வாறு எண்ணி நொந்த மனத்தில் தோன்றிய எள்ளல், குறுநகையாக வெளியாகிறது.

ஊன்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு

என்பது வள்ளுவம்.

---

எச்சம்-மிகுதி. வேறல்ல-வேறு வேறு அல்ல.

நாணம் உடையவனே மனிதன் என்னும் தகுதியை அடைகிருன். ஆனல் மனிதரில் சிறந்தவன், இராமன் என்ற நம்பி, "கருமத்தால் நாணுதல் நாணு" என்ற ஆணையை மறந்து, குற்றம் செய்துவிட்டான்.

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு

என்றபடி, பிறர்க்கு உற்ற பழியையும் தமக்கு வந்த தாகவே கருதி நாணுதல் உயர்ந்தோர் இயல்பாதலால், இராமனுக்கு உற்ற பழியை எண்ணி, வாலி நாணு கின்ருன்.

வெள்கிட மகுடம் சாய்க்கும்;
வெடிபடச் சிரிக்கும்; மீட்டும்
உள்கிடும்; இதுவும் தான்ஓர்
ஒங்குஅறமோ என்று உன்னும்;
முள்கிடும் குழியில் புக்க
மூரிவெம் களிநல் யானை
தொள்கொடும் கிடந்த தென்னத்
துயருழந்து அழிந்து சோர்வான்.

படுகுழிப்பட்ட யானையென்னத் துன்புற்று நிலை யழிந்து சோர்கின்ருனயினும், வாலி தன் வேதனையில் கருத்தைச் செலுத்தவில்லை. இராமன் செயலை எண்ணி நாணிய அவன் முன்னர் குறுநகை புரிந்தான்; பின்னர் வெடிபடச் சிரித்தான். மீண்டும் "இதுவும்தான் ஓர் ஓங்கு அறமோ" என்று யோசிக்கிருன். இராமன் அறம் திறம்

---

உறைபதி-இருப்பிடம்.

மீட்டும் உள்கிடும்–மீண்டும் ஆலோசிப்பான். உன்னும்-எண்ணுவான். முள்கிடும்-முழுகி அழுந்தத்தக்க. மூரி-வலிமை. களி-மதம். நல்யானை-உத்தம இலக்கணம் அமைந்த யானை தொள்கொடும்-விலங்குடன். தொள்கு-வலை. இங்கு, கால்விலங்கு என்பர்.

பான் என்பது அவனது தீர்மானமான கருத்தாயிருந்த லால், இந்தச் செயலிலும் ஏதாவது சிறந்த அறம் மறைந் திருக்குமோவென்று சிந்திககிருன். "இல்லே, இல்லே, இதில் அறம் ஏதும் இல்லே; இது தர்மம் துறந்த செயலே" என்ற முடிவுக்கு வந்தவனுகி, "இறை திறம்பினுல், என்னே இழிந்துளோர் இயற்கை" என்று வாலி வாய் திறந்து சொல்லும்பொழுது, இராமன் அவன் முன் தோன்றுகின்ருன்.

ஷேக்ஸ்பியர் எழுதிய "ஜூலியஸ் ஸீஸர்" என்ற நாடகத்தில் இதுபோன்றதொரு கட்டம் வருகிறது. வாலி தன் நம்பிக்கைக்கு உரிய நம்பியால் கொல்லப்படுவதைப் போலவே, சக்கரவர்த்தி ஸீஸரின் நேசபாசத்துக்குப் பாத்திரனுன புரூட்டஸ் ஸீஸருக்குக் காலனுக மாறு கிருன். இராமனைப் பற்றித் தாரை எச்சரித்ததைப் போலவே, ஸீஸரைக் கொல்வதற்குச் சதிசூழும் வஞ்சக ருடன் புரூட்டஸ் சேர்ந்திருப்பதாகச் சிலர் ஸீஸரிடம் விண்டுரைத்தனர். "பெண்மையால் பிழைத்த பாவி" என்று கூறித் தாரையை வாலி வாயடைத்ததைப் போலவே "அது செய்யான் என் புரூட்டஸ்" என்று மறுத்துரைத்தான் ஸீஸர். இறுதியில், சட்டமன்றத்தில் திடீரென்று உருவிய வாட்களுடன் சதிகாரர்கள் பாய்ந்த பொழுது, தற்காத்துக் கொள்ள முயன்ற தீரன் ஸீஸர், புரூட்டஸையும் கொல்வினை சூழ்ந்த கொடுமனத்தவர்க ளிடையே கண்டு திடுக்கிட்டான். தன் முகத்தினைத் துணி யால் மறைத்துக்கொண்டு, "நீயுமா புரூட்டஸ்! ஆயின் ஸீஸரே வீழ்க!" என்று புகன்று, நண்பனின் வாளுக்கு இரையாக வலிய முன்வந்தான். நாடகத்தில் இந்தக் குணச் சிறப்பைக் கண்டு கண்ணீர் விடாதார் இல்லே!

ஒத்தெல்லோ என்பது ஷேக்ஸ்பியரின் துன்ப இயல் நாடகங்களில் சிறந்தது என்பர். தலேவன் ஒத்தெல்லோ மூர் ஜாதியைச் சேர்ந்த கருமேனிப் போர்வீரன். டெஸ் டிமோனு என்ற உயர்குலத்துதித்த வெண்ணிற வனிதை அவனேக் காதலிக்கிருள். இருவரும் திருமணம் புரிந்து கருத்தொருமித்த சதிபதிகளாய் இன்பம் துய்ப்பதைக்

கண்ட கொடுமனக் காதகனை இயாகோ, பொய்யும் வஞ்சனையும் புரிந்து, ஒத்தெல்லோவுக்குத் தலைவியின் கற்பில் ஐயம் ஏற்படும்படி செய்துவிடுகிறான். பெண்மைக்கும் கற்பின் திண்மைக்கும் கணவன்பால் வைத்த தூய அன்புக்கும் இலக்கியமாகத் திகழ்ந்த வடிவழகி டெஸ்டிமோனாவின்பால் ஐயம் மேலிடவே, ஒத்தெல்லோ மூர்க்கனாகிறான். நம்பியிருந்த நன்மனைவியை, அவள் படுத்திருந்த பள்ளியறையிலேயே கழுத்தை நெறித்துக் கொன்றுவிடுகிறான். இந்தக் காட்சியைக் கண்டால் கல்லும் புல்லும் கரைந்தழும். பள்ளியறையில் வேண்டாத அரவம் கேட்டதால், அங்கு வரும் தாதி, தலைவியின் நிலை கண்டு திகைத்துத் துயருற்று "உன்னை இது செய்தது யார்?" என்று வினவுகிறாள். கொன்றவன் எதிர்நிற்கும் பொழுதே, உண்மை உரைக்காமல், "எவருமில்லை. நானேதான்....விடைபெறுகிறேன். என் காதற் கணவனுக்கு என் வணக்கம் சொல்" என்று கதறி உயிர் பிரிகின்றாள்! அந்த உத்தமியின் பெருந்தன்மையைப் போற்றிக் கண்ணீர் உகுத்துத் தூய்மை அடையாதார், மனிதரே அல்லர் எனலாம்!

அந்தத் துன்பியல் காட்சிகளை நினைவூட்டும் வகையில் கம்பன் வாலிவதைக் காட்சியை அமைத்திருக்கிறான். நம்பிக்கை மோசம் செய்தானென்று நாயகனை வெகுண்டு தூற்றும் சிறுமைக்கு இடம் கொடாமல், "இறை திறம்பினால் என்னே இழிந்துளோர் இயற்கை" என்று கூறித் தன் மரண வேதனையை மறந்து இராமனுக்கு உற்ற பழியை எண்ணி நாணமடையும் வாலியின் மகோன்னதத்தைக் கண்டு நாம் அவனைப் போற்றி வணங்குகிறோம். அவனது துன்பநிலையை எண்ணிக் கண்ணீர் பெருக்கிப் பரிசுத்தம் அடைகிறோம்.

விண்மீது விளங்கும் நீலக் கார்முகில், கமலம் பூத்து வரிவில் ஏந்தி, மண்மீது வந்தாற்போல், இராமன் வாலி முன் தோன்றுகிறான் என்பான் கம்பன். கரந்திருந்து கொலைவாளியை விடுத்த இராமன், கமலம் பூத்ததன்ன வதனத்துடன் வாலி முன் தோன்றுகிறானாம்; இராமன்

கன்னெஞ்சன் அல்லன். வாலியிடம் வைரம் கொண்டவனுமல்ல. அண்ணனிடம் கறுக்கொண்ட இரவி குமாரனே, கண்ணீர் வெள்ளத்தைப் பெருக்கி அதில் மிதந்து கொண்டிருக்கிருன் என்ருல், ஆழம் தெரியாமல் காலே விட்டவன்போல அவசரப்பட்டு வாக்களித்துவிட்டுத் தர்மசங்கடத்தில் தத்தளித்து, இறுதியில் ஒருவிதமாக மனத்தை உருக்காக்கிக் கொண்டு பகழியை ஏவிய அருளின்ஆழி மலர்ந்த முகத்துடன் வருகிருனும்! மறைந்து நின்று கொல்வினே சூழ்ந்த தலேவன் இப்பொழுது மனத் துயரையும் மறைததுக் கொல்ல முற்பட்டிருக்கிருன் போலும்!

வாலி இராமனேக் காண்கிருன். வெட்கித் தலேகுனியாமல், மலர்ந்த முகத்துடன் காட்சி தரும் கொடுமையைக் கண்டதாலோ எனனவோ, அவனிடம் அடங்கிக் கிடந்த வெகுளி விசுவரூபம் எடுக்கிறது. பொறி பறக்கும் விழிகளால் இராமனே நோக்கி, "என் எண்ணுற்ருய்? என் செய்தாய்? என்று ஏசுவான் இயம்பல் உற்ருன்" என்பது கவிக்கூற்று.

வாலியின் ஏச்சுப் பேச்சைப் பதினேந்து பாடல்களில் படிக்கிருேம். உண்மையில் அது ஏச்சுப் பேச்சு என்று கம்பன் கூறியபோதிலும்,

இனிய உளவாக இன்னுத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று

என்ற வள்ளுவத்தின் விழுமிய கருத்தைக் கற்றுத் தெளிந்தவன் பேச்சுக்கு உதாரணமாக அமைந்திருக்கிறது. பரிவும் அறிவும் பண்பும் நண்பும் உரைகளில் ஊடுருவி வருகின்றன. வாலி கூறுகிருன்:

வாய்மையும் மரபும் காத்து
மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே! நீ
பரதன்முன் தோன்றி னுயே!

தீமைதான் பிறரைக் காத்துத்
தான்செய்தால் தீங்கன் ருமோ?
தாய்மையும் அன்றி நட்பும்
தருமமும் தழுவி நின்ருய்!

"தாய் ஒக்கும் அன்பில்" என்று தயரதனுக்கு இலக்கணம் கூறினுன் கம்பன். பெற்ற தாயைப் போல, அன்பும் ஆர்வமும் கரிசனமும் நிறைந்தவனுய்க் குடிகளைக் காத்தான் என்று குறிப்பிட்டான். இங்கு உலகத்துக்கே தாயாக இராமன் விளங்குவதாக வாலி கூறுகிருன். "தாய்மையும் நட்பும் தருமமும் தழுவி நின்ருய்" என்று பகழி விடுத்த இராமனைப் போற்றிப் பேசுகிருன் பெருந் தன்மை மிகுந்த வாலி.

வாய்மை காக்க உயிர்நீத்தான் ஒரு தந்தை; தாய் உரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத் தீவினை என்ன நீத்தான் ஒரு தம்பி. "நீ உன் இழிசெயலால் அவர்களுக்குப் பழிதேடிவிட்டாயே!" என்று கூறி இரங்குகிருன் வாலி. "பிறர் தீமை செய்வதைத் தடுக்கும் பெரியோனுயிருப்பதால், நீ செய்யும் தீமையும் நன்மையாகி விடுமென்று கருதுகிருயா?" என்று வினவுகிருன்.

குலம்இது, கல்வி ஈது,
கொற்றம்ஈது, உற்று நின்ற
நலம்இது, புவனம் மூன்றும்
நாயகம் உன்ன தன்றே?
வலம்இது,இவ் வுலகம் தாங்கும்
வண்மைஈது என்ருல் திண்மை
அலமரச் செய்ய லாமோ
அறிந்திருந்து அயர்ந்துளார் போல்?

---

வாய்மை-சத்தியம். மரபு-குலமரபு. வள்ளல், தூயவன்-தயரதன்.

கொற்றம்-வெற்றி. உற்று நின்று-பொருந்திய. புவனம்-உலகம். வலம்-வலிமை. வண்மை-மேன்மை. திண்ணம்-உறுதி. அலமர-நிலைகலங்கும்படி.

குலத்திற் சிறந்தவன், கல்வியில் துறைபோகியவன், வலிமை மிகுந்தவன், வெற்றிவீரன், உலகம் காக்கும் மேன்மை பொருந்தியவன், திரிலோகத் தலைமைக்கு உரியவன், நீயே எல்லாம் அறிந்திருந்தும் ஏதுமறியாதவன் போலத் தருமம் தடுமாறக் காரியம் செய்யலாமா?'' என்று பரிவுபொங்கப் பேசுகிறான். 'இத்துணை நலங்களும் ஒருங்கே அமையப்பெற்ற நீயே இந்தக் காரியம் செய்தால், அறத்துக்கு வாழ்வு ஏது?' என்ற பொருள் தொனிக்கிறது.

பல்வகை நலங்கள் பொருந்தப்பெற்ற அறத்தின் மூர்த்தியே, தருமத்தைத் தடுமாறச் செய்யும் தீச்செயல் புரிந்தான் என்றால் ஏதோ காரணத்தால் அவனுக்குச் சித்தம் கலங்கியிருக்கவேண்டுமென்று வாலி அனுமானிக்கிறான்.

உடனே,

கோவியல் தருமம் உங்கள்
  குலத்துஉதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத்து எழுத ஒண்ணு
  உருவத்தாய்! உடைமை யன்றே?
ஆவியைச் சனகன் பெற்ற
  அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
  திகைத்தனை போலும் செய்கை!

என்று கேட்கின்றான். ''ஓவியத்து எழுதஒண்ணு உருவத்தாய்!'' என்று நளின மொழியில் விளிக்கிறான். ''உருவ எழில் காத்து நிற்கிறாய். ஆனால் உணர்வு குலைந்து உள்ளம் தடுமாறி, ஊனச் செயலைச் செய்துவிட்டாயே!'' என்ற கருத்து, விளியிலே புதைந்து கிடக்கிறது. ''அரச

---

கோவியல் தருமம்-அரசியல் தர்மம். கோ-அரசன். அமிழ்தின் வந்த தேவி-சீதை அமுதத்தைப் போல் அருமையானவள், இனிமை மிகுந்தவள்.

நீதியை உரிமையாகப்பெற்ற குலத்தில் பிறந்த நீ, இயற்கைப் புத்தியோடு இருந்திருந்தால், இம்மாதிரி ஈனம் புரிந்திருக்க மாட்டாய்! உயிரினும் இனிய சீதையைப் பிரிந்த துயரால், அறிவு கலங்கி, அறம் திறம்பினுயா?'' என்று கேட்பதால், இராமன்பால் அவனுக்குள்ள பேரன்பும் பரிவும் விளக்கம்பெறுகின்றன. இந்தக் கேள்வி, இவனே இராமன் செய்கைக்கு நியாயம் காட்டுவதாக அமைந்திருக்கிறது. சீதையின் பிரிவால் சிந்தை கலங்கிய சூழ்நிலையைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, குற்றத்தைப் புரிந்துகொள்ளலாம்; குற்றவாளியிடம் இரக்கம் காட்டலாம் எனினும் குற்றம் குற்றம்தானே? எனவே, கொல்லம்பு தொடுத்தவன் மீது வாலி சொல்லம்புகளைத் தொடுக்கிறுன்.

அரக்கர்ஓர் அழிவு செய்து
  கழிவரேல் அதற்கு வேறுேர்
குரக்கினத்து அரசைக் கொல்ல
  மனுநெறி கூறிற் றுண்டோ?
இரக்கம்எங்கு உகுத்தாய்? என்பால்
  எப்பிழை கண்டா யப்பா?
பரக்கழி இதுநீ பூண்டால்
  புகழையார் பரிக்கற் பாலார்?

என்று வினவுகிறுன்.

"தானவர் தேவியைக் கடத்திச் சென்று தீம்பு செய்தால், இடையில் கண்ட வானரனைக் கொல்ல வேண்டுமென்று மனு தர்மம் கூறியிருக்கிறதா?'' என்று குத்தலாகக் கேட்டபின், "இதயத்தில் ஈரம் இருந்தால் இந்தக் கொடுஞ் செயலைப் புரிந்திருப்பாயா?'' என்று இராமனது அடுசரத்தை ஒக்கும சுடுமொழியைக் கூறுகின்றுன். "குற்றவாளியைத் தண்டித்தேன் என்று கூறத் துணிந்தால், என்பால் எப்பிழை கண்டாயப்பா?'' என்று

---

அழிவு-அழிம்பு. உகுத்தாய்-சிந்திஞய். பரக்கழி-பெரிய பழி. பரிக்கற்பாலார்-தாங்கவல்லார்.

குறுக்கு விசாரணை செய்கிறான். "நீயே கொடும்பழி பூண்டால், மெய்ப்புகழை விரும்பி அடைவதற்கு யார் இருக்கின்றார்?" என்று கேட்டு இரங்குகின்றான். இரக் கத்தை உகுத்து அரக்கச் செயலைச் செய்தாய் என்று இராமன் மீது குற்றம் சாட்டிவிட்டு, அந்த இராமனிடமே இரக்கம் பெருக்கிப் பேசுகிறான் இந்த மேன்மகன்.

சொற்களின் திறனறிந்து ஆண்டு, கேட்பவன் உள் ளத்தைப் பிணிக்கும் வகையில் பேசிய பின்பும், இராம னது முகம் வாட்டமுறவில்லை போலும்! தகாத காரியம் புரிந்த தவறுக்கு வருந்தி மனம் மறுகிக் கண்களில் நீர் மல்கக் கதறி அழவேண்டிய இராமன், சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை முகத்துடனே காட்சியளிப்பதைக் கண்டு, வாலியின் நெஞ்சம் பதறுகிறது.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்

என்ற சான்றோர் நெறியை இவன் மறந்து விட்டானா? அல்லது மறுத்துப் புறக்கணித்துவிட்டானா? ஒருவேளை, ஒழுக்கத்தின் உயர்வு மெலியாருக்கே தேவையென்று கருதுகின்றானா?

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை. அதனை
மறத்தலினூஉங்கு இல்லை கேடு

என்பது வான்மறை. அறமே ஆண்மை என்ற அந்த நன்னெறியை மறுத்து ஆண்மையே அறம் என்ற புன் னெறியை நிலைநாட்டக் கருதுகின்றானா? இவ்வாறெல்லாம் எண்ணிய வாலி, "கருணை வள்ளல்" என்று அழைத்து,

மெலியவர் பால தேயோ
ஒழுக்கமும் விழுப்பம் தானும்?
வலியவர் மெலிவு செய்தால்
புகழன்றி வசையும் உண்டோ

என்று கேலி செய்கிறான். "கருணை வள்ளலே" என்ற விளியில் உள்ளம் உடைந்து பேசும் வாலியின் எள்ளல் கொப்பளிக்கிறது. "ஒழுக்கமும் அதனால் ஏற்படும் விழுப்பமும் நலிவுற்றவருக்குத்தான் தேவையா? வலியவர் இழிவு செய்தால் இசையன்றி வசை ஏற்படாதென்று எண்ணுகிறாயா?" என்று பரிகாசமும் பரிதாபமும் ஒருங்கே புலப்பட உரைத்துவிட்டு மேலும் பேசுகிறான்.

கூட்டொரு வரையும் வேண்டாக்
 கொற்றவ! பெற்ற தாதை
பூட்டிய செல்வம் ஆங்கே
 தம்பிக்குக் கொடுத்துப் போந்து
நாட்டொரு கருமம் செய்தாய்!
 எம்பிக்குஇவ் வரசை நல்கிக்
காட்டொரு கருமம் செய்தாய்!
 கருமம்தான் இதன்மேல் உண்டோ?

"கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவ" என்ற தொடர், 'அசகாய சூரன்' என்ற வடமொழித் தொடரின் தனித் தமிழாக்கமாகும். 'துணை வேண்டாச் செருவன்றி' என்ற சங்கத்தமிழ் வாசகத்தை இது நினைவூட்டுகிறது. இந்த விளியில் இராமன்பால் வாலிக்குள்ள பேரன்பும் பெருமதிப்பும் பொங்கித் ததும்புகின்றன. இந்தப் பாடலில் வாலியின் எள்ளல் எவரெஸ்ட் மலை முடியைத் தொட்டு விடுகிறது. "இராமா! நீ புதுமை விளைக்கும் புனிதன் தான்! உரிமையாகக் கிடைத்த அரிய செல்வத்தைப் பரதனுக்கு வழங்கி, உலகை வியக்கச் செய்தாய்! இங்கு என் ராஜ்யத்தை என் தம்பிக்குப் பறித்துக் கொடுத்து, காட்டிலும் ஒரு விநோதத்தைப் புரிந்துவிட்டாய்! இதனினும் மேலான புதுமைச் செயல் ஏதாவது எஞ்சி இருக்கிறதா?" என்று கேட்கிறான்.

இராமன் விடை தருவதென்றால், "வாலி! கோசலத்தில் செய்த தியாகத்தைத் தலைசிறந்த புதுமை என்கிறாய்.

---

தாதை-தந்தை. பூட்டிய-வலியக் கொடுத்த. செல்வம்-அரசுச் செல்வம். போந்து-வந்து. எம்பி-என் தம்பி.

ஆனால் அதைவிடத் தாயின் நல்லானான குகனைத் தோழனாகக் கொண்டதே பெரும்புதுமை என்று நான் கருதுகிறேன். உன்னைக் கரந்திருந்து கொன்றதால் மீளாப் பழியை அடைந்துவிட்டேன் என்று கூறுகிறாய். ஆனால் இந்தப் பிழை, இராவண வதம் என்ற இமாலய சாதனைக்குச் சித்தமாகும் போக்கில், இன்றியமையாத வினையாக, தவிர்க்கமுடியாத தவறாக அமைந்துவிட்டது என்பதைப் பிற்காலத்தார் புரிந்துகொள்வார்கள்! குற்றத்தைப் புரிந்து குணமிகுதியைப் போற்றும் பண்பாட்டை உணர்ந்த நீ இவ்வாறு பேசலாமா?'' என்று விரித்துச் சொல்லியிருப்பான். ஆனால் மனம் விட்டுப் பேசும் நிலையில் இராமன் இல்லை. வாலிக்கு இராமனது மனநிலை புரியாத புதிராக இருக்கிறது. அவன் குற்றத்தை உணர்ந்து பதறிப் புலம்பவுமில்லை; குற்றம் சாட்டி வக்கணை பேசும் வாலியை இடைமறித்துச் சினந்து சீறவுமில்லை. அமைதி தவழும் முகத்துடன் நின்று கேட்டுக் கொண்டிருக்கிறான். இதைக் கண்ட வாலி, இராவணனது வஞ்சனையுடன் ஒப்பிட்டாலாவது இராமன் வாய்திறக்கலாமென்று எண்ணி, 'முனிவு இலாதாய்' என்று விளித்துப் பேசுகிறான்:

அறைகழல் அலங்கல் வீரர்
ஆயவர் புரிவது ஆண்மைத்
துறையெனல் ஆயிற் றன்றே!
தொன்மையின் நன்னூற் கெல்லாம்
இறைவன்நீ என்னைச் செய்தது
ஈதுஎனில், இலங்கை வேந்தன்
முறையல செய்தான் என்று
முனிதியோ? முனிவிலா தாய்!

---

அறைகழல்-ஒலிக்கின்ற வீரக்கழல். அலங்கல்-மலர் மாலை. ஆண்மைத் துறை-ஆண்மைக்குரிய முறை (இங்கு வெற்றி மாலை). அன்றே-அல்லவா. இறைவன்-தலைவன்; ஆசான். முனிதியோ-கோபிப்பாயோ. முனிவு இலாதாய்-கோபமில்லாதவனே.

வல்லான் ஆற்றியதே அறம் என்னும் நிலைமை ஏற்படுகிறதே என்று மீண்டும் நெஞ்சு நைந்து நவின்றுவிட்டு "தொன்மையான நல்லற நூல்களுக்கெல்லாம் நாயகனுகத் திகழும் நீ எனக்கு இந்தத் தீமையைப் புரிந்துவிட்டு, இலங்கை வேந்தன் வஞ்சனை செய்தான் என்று வெஞ்சினம் கொள்ள இடமுண்டா?'' என்று வாலி வாதம் புரிகிருன். குற்றங்களில் கொடியது கொல்வினை யாதலால், காமவெறி கொண்டு தேவியைக் கடத்திய இராவணனது குற்றத்தைவிடக் கரந்திருந்து கொல்வினை சூழ்ந்த இராமனது குற்றம் கொடிது என்று வாலி எடைபோட்டு வாதிப்பதாக இதைப் பொருள் கொள்வது கூடாது. கள்வனது வழிப்பறியைவிடக் காவலன் களவு கொடிதே போல், இரக்கமில்லா அரக்கனுன இராவணனின் குற்றத்தைவிட அறம் வளர்க்கும் ஆதர்ச புருஷனுன இராமனது குற்றம் கொடிது என்பதே வாலியின் கருத்தாகும். கண்ணுடி வீட்டில் இருந்துகொண்டு கல் எடுத்து எறிவதேபோல், இராமன் தனது குற்றத்தை உணராமல், இராவணனது குற்றத்தைப் பெரிதும் பாராட்டுவதாக வாலி கூறுகிருன். இது,

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு?

என்ற குறளை நினைவுகூரச் செய்கின்றது.

இதன் பின்னும் இராகவன் கலவரம் அடையாமல் நிற்பதைக் கண்டான் போலும்! "அறம் திறம்பினுயே! பழிசூடினுயே!'' என்று பொதுப்படையாகப் பேசியதன் பொருள் இராமனுக்கு விளங்கவில்லையோ என்ற ஐயம் வாலிக்கு ஏற்பட்டது போலும்! எனவே வாலி, இராமன் இழைத்த குற்றத்தைப் பட்டவர்த்தனமாகவும் தெட்டத் தெளிவாகவும் எடுத்து உரைக்கிருன்:

இருவர்போர் எதிரும் காலை இருவரும் நல்லுற் ருரே;
ஒருவர்மேல் கருணை தூண்டி ஒருவர்மேல் ஒளித்து நின்று

**வரிசிலை குழைய வாங்கி வாய்அம்பு மருமத்து எய்தல்**
**தருமமோ? பிறிதொன் றாமோ? தருகிலது என்னும் பக்கம்**

இருவர் தம்மில் போர் நிகழும்போது, "ஒருபாற் கோடாமை, சான்றோர்க்கு அணி' என்பர். இராமனே ஒருவன்மீது கருணைகொண்டு, மற்றவன் மார்பில் மறைந்து நின்று அம்பு எய்திவிட்டான். இது பட்சபாதம் எனப் படும் தகவிலாச் செயல் என்பது வாலியின் குற்றச்சாட்டு.

இந்தச் செயலுக்கு எவ்வகையிலும் நியாயம் காட்ட முடியாது என்று வாலி பன்னிப் பன்னிப் பகர்கின்றான்.

**வீரம் அன்று; விதிஅன்று; மெய்ம்மையின்**
**வாரம் அன்று;நின் மண்ணினுக்கு என்உடல்**
**பாரம் அன்று; பகைஅன்று; பண்புஒழிந்து**
**ஈரம் அன்று;இதுஎன் செய்த வாறுநீ!**

என்ற வினவில் பரிவும், பண்பும் மிகுந்துள்ளதைக் காண் கின்றோம்.

விதிமுறை மீறி வீரமில்லாச் செய்கை செய்தான் ஈரமில்லாத இராமன் என்பது வாலியின் கருத்து.

**குடிபுறம் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்**
**வடுவன்று வேந்தன் தொழில்**

என்று இராமன் வாதிக்கலாமல்லவா? வான்மீகத்தின் இராமன் அவ்வாறுதானே வாதம் செய்கிறான்? "காடும் குன்றும் நிறைந்த இந்த நிலமெல்லாம் தொன்மையான இக்ஷ்வாகு குலத்துக்கு உரியது. இதில் வாழும் மாந்தரை யும் மிருகங்களையும் பறவைகளையும் புரப்பதற்கும், ஒறுப்

---

போர் எதிரும் காலை-தம்மில் போர் செய்யுங்கால். வாய் அம்பு—கூரிய அம்பு. மருமத்து-மர்மஸ்தானத்தில். தருகிலது-தகாதது. பக்கம்-பட்சபாதம்.

வாரம்-பங்கு.

பதற்கும் உரிமைபெற்றவர் நாங்கள். தற்சமயம் கடமை யின் அழைப்புக்கு இணங்கப் பரதன் அறம் கடவாது மெய்ம்மையில் நின்று செயல்படும் விவேகி—நம்மனைவருக்கும் கொற்றவனக விளங்குகிருன்....நானும் வலிமை பெற்ற ஏனைய வேந்தரும், பரதனது நற்செயலிலிருந்து படிப்பினை கற்று அறம் நிலைத்துத் தழைத்துப் பரவச் செய்வதற்காக உலகெங்கும் சஞ்சரித்து வருகின்ருேம். மாட்சிமைக்குரிய மதியூகியும் நீதிநிலையமுமான பரதன், தனது பெருமைசால் பொறுப்பான இந்தப் பரந்த உலகத்தில் கோலோச்சும்பொழுது, தருமம் வெறுக்கும் கருமத்தை எவர்தான் செய்யமுடியும்? பரதன் என்ற பேரரசன் பிறப்பித்துள்ள ஆணைக்கு இணங்க, நாங்கள் அறவழிப் பிழையாது வினையாற்றி வருகிருேம்; தருமவழியை இகழ்ந்து தாழும் பாவிகள் அனைவரையும் தண்டித்து வருகிருேம்....வாலி! உடன்பிறந்தவன் உயிர்வாழும் பொழுதே, அவன் மணந்த மனைவியை நீ கவர்ந்திருக்கிருய். தொன்மையான உரிமையைத் திரணமாகக் கருதி, அவனுக்குரிய உருமையை நீ இன்பப்பொருளாகக் கொண்டிருக்கிருய். இந்தப் பாவத்துக்காக நான் உன்னை வீழ்த்தினேன்'' என்று வான்மீகியின் இராமன் வாதிக்கிருன். அத்தகைய வாதத்துக்கு இடமில்லையென்பதைக் கம்பனது வாலி முன்கூட்டியே தெளிவுபடுத்திவிடுகிருன்.

''நின் மண்ணினுக்கு என் உடல் பாரம் அன்று'' என்று கருராகக் கூறிவிடுகிருன். ''நீ வேந்தனும் அல்ல, நான் உன் குடியுமல்ல'' என்ற பொருள் இந்த வாசகத்தில் அடங்கி இருக்கிறது. கோசலத்தில் முடியைத் துறந்துவிட்டு, வானப்பிரஸ்த வாழ்வு நடத்தும் இராமனை வேந்தனுகக் கொள்ளமுடியாது என்பது ஒன்று. இராமன் சக்கரவர்த்திதான் என்ருலும், கிஷ்கிந்தையில் பங்கமில்லாத அரசுரிமையுடன் ஆட்சி செலுத்தும் வாலி, இராமனது அதிகாரத்துக்குக் கட்டுப்பட்ட குடியல்ல என்பது இன்னென்று. இரண்டு உண்மைகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டே, ''நின் மண்ணினுக்கு என் உடல் பாரம் அன்று'' என்று வாலி இயம்புகிருன்.

பகையென்று வந்து, போர் ஒன்று மூண்டால், பாடறிந்து ஒழுகுதலான பண்பை எதிர்பார்க்க முடியாதென்று வாதிக்கலாம். பாரதப் போரில் நிகழ்ந்தனவெல்லாம் அறம் கடவாச் செயல்களென்று அறுதியிட்டுக் கூறமுடியுமா? இங்கு "இருவர் மல்லமர் புரிந்துநிற்க, நீ மறைந்திருந்து அம்பு தொடுத்தது தகவோ?" என்று வாலி கேட்கும் கேள்வி பாரதப் போரிலும் கேட்கப்பட்டதாக நாம் வியாசரிலும் வில்லிபுத்தூராரிலும் படிக்கவில்லையா? பதினான்காம் நாள் போரில், சாத்தகி-பூரிசிரவன் என்ற இருவரும் தடக்கை கொட்டி மற்போர் செய்தபொழுது, என்ன நேர்ந்தது என்பதை வில்லிபுத்தூராரே கூறட்டும்:

மல்லினின் வென்று வீழ்த்தி
  மாயவன் தம்பி தன்னைக்
கொல்லுவான் முனைந்து மற்றைக்
  கோமகன் அடர்த்தல் நோக்கி,
கல்லினின் மாரி காத்தோன்
  கண்டு,வில் விசயனோடும்
சொல்லினன் 'பகைவன் தன்னைச்
  சுடர்முடி துணித்தி' என்றே.

மற்போரில் வென்ற பூரிசிரவன், சாத்தகியைக் கீழே தள்ளி வருத்திக் கொல்வதற்கு முயன்றபொழுது அதைக் கண்ட கண்ணன், பகைவனது சிரத்தைத் துணித்திடும்படி பார்த்தனிடம் கட்டளையிட்டான். ஆனால் அர்ஜுனன் அவ்வாறு செய்வதற்குத் தயங்கினான்.

இருவரும் முனைந்த போரில்
  இளைத்தவற்கு உதவி யாகப்
பொருவது கடன்அன்று என்று
  போற்றிய விசயன் தன்னை

---

மாயவன் தம்பி-கண்ணனுடைய தம்பியாகிய சாத்தகி. மற்றைக் கோமகன்-பூரிசிரவன். அடர்த்தல்-வருந்துதல்.

வெருவர முனிந்து சீறி
மீளவும் விளம்ப, மாயன்
திருவுளம் அறிந்து தெவ்வன்
திண்புயம் துணிய எய்தான்.

இருவர் பொருங்கால் இடைபுகுந்து அம்பு தொடுப்பது அறமன்று என்று அர்ஜுனன் கூறியவுடன், கண்ணன் சினந்து சீறினான். "என் சொற்படி நட" என்று மீண்டும் உத்தரவிட்டான். உடனே மாயனின் திருவுளம் அது என்பதை உணர்ந்து, விஜயன் அம்பு எய்தினான். சாத்தகியைக் கொல்வதற்கு உடைவாள் ஏந்தி உயர்ந்த பூரிசிரவனது கை தோள் அளவில் அறுந்து வீழ்ந்தது.

புயம் துணிவுண்ட பூரிசிரவனைக் கீழே தள்ளி, அவனது சிரத்தைக் கொய்துவிட்டான் சாத்தகி. அப்பொழுது, "இப்போர் மன்னறம் அன்று" என்று அரசர்க்கரசனான துரியோதனன் கூறவே, கண்ணன் எதிர்மொழி இயம்பலுற்றான்:

நென்னல்நீர் அபிமன் தன்னை
நேருற வென்ற போரும்;
முன்னவே சிவேதன் தன்னை
விடுமன் முடித்த போரும்;

---

கல்லினில் மாரி காத்தோன்-(கோவர்த்தன) மலையைக் கொண்டு மழையைத் தடுத்த கண்ணன். வில்விஜயன்-வில்வீரனான அர்ஜுனன். சுடர்முடி-விளங்குகின்ற தலை.

கடன் அன்று-முறைமையன்று. என்று போற்றிய-என்று கூறி வணங்கிய. வெருவர-(அவன்) அஞ்சும்படி. தெவ்வன்-பகைவன். திண்புயம்-வலிய தோள். துணிய-அறுந்துபோக.

நென்னல்-நேற்று: நேர் அற-தடையில்லாமல். மன்னறம்-அரச நீதி. தவாமல்-தவறாமல். நக்கான்-நகைத்தான். தன்னை வந்து அடைந்தோர்க்கு-வந்து தன்னைச் சரண் அடைந்தவர்க்கு. உற்ற-நேர்ந்த. தளர்வு-துன்பம். தாளான்-திருவடியை உடைய கண்ணன்.

மன்னறமுறை தவாமல்
மலைந்தனிர் என்று நக்கான்;
தன்னைவந்து அடைந்தோர்க்கு உற்ற
தளர்வெலாம் ஒழிக்கும் தாளான்.

"உன் கண்ணில் உத்திரம் கிடப்பதை அறியாமல் என் கண்ணில் துரும்பு இருப்பதைச் சுட்டிக்காட்டுகிறாயா?" என்று கேட்கும் முறையில் கண்ணனது வாதம் அமைந் திருக்கிறது. பூரிசிரவன் புயத்தைப் பார்த்தன் துணித் தது அறமா? என்பது துரியோதனன் கேள்வி. அதற்குக் கண்ணன் நேர்முகமாகப் பதில் கூறுமல், "நீங்கள் அபிமன்யுவையும், சிவேதனையும் கொன்ற முறை மன் னறத்துக்கு உகந்ததா?" என்று எதிர்மொழி புகன்று நகைத்துத் துரியோதனன் வாயை அடக்கினுன்.

ஆனல் இராமன் இம்மாதிரி வாலியின் வாயை அடக்க முடியாது. ஏனெனில், இங்கு இராமனுக்கும் வாலிக்கும் போரும் இல்லை; பகையும் இல்லை. சிவேதனையும், அபி மன்யுவையும் கௌரவர் அறம் கடந்த வகையில் கொன்ற மாதிரி, வாலி இராமனது துணைவர் எவரையும் வதம் செய்யவில்லை. அதனுல்தான் நான் உன் 'பகை அன்று' என்று வாலி சுட்டிக்காட்டுகிறுன். "இராமா! எந்த வகையி லாவது உன் செய்கைக்கு அமைதி கண்டு, நிம்மதி பெறலா மென்று முயல்கிறேன். முடியவில்லையே! போர்வினை அனைத்தும் பண்புடைத்தாமே என்ற பெருவழக்குப்படி நியாயம் கற்பிக்கலாமென்றுல், உனக்கும எனக்கும் இடையே போரும் இல்லை, பகையும் இல்லையே!" என்று வாலி இரங்கிக் கூறுவான்போல் செய்யுள் அமைந்திருக் கிறது.

எத்துணை இடர்கள் ஒருவனை வருத்தியபோதிலும், சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யக்கூடாதுதான். என்றுலும் ஒருவன் பெருந்துயர் துடைக்கத் தப்பித்தவறி அறம் திறம்பினுல், அதைப் பெரிதாகப் பாராட்டக்கூடாது. தவறுவது மனித இயல்பு. நவையற்றவர் யாரும் நானிலத் தில் இல்லை. இந்த வகையில், இராமன் செயலுக்கு அமைதி

காணலாமா என்று பார்த்தால், அதுவும் பொருந்தவில்லை என்று வாலிக்குத் தோன்றுகிறது. ஏனெனில்,

**செயலைச் செற்ற பகைதெறு வான்தெரிந்து**
**அயலைப் பற்றித் துணைஅமைந் தாய்எனின்**
**புயலைப் பற்றும்அப் பொங்கரி போக்கிஓர்**
**முயலைப் பற்றுவது என்ன முயற்சியோ?**

இராவண வதத்துக்குத் துணை வேண்டுமென்றாலும் வாலியைவிட்டுச் சுக்கிரீவனைத் துணைகொள்வது, வாலிக்குப் பேதைமையாகத் தோன்றுகிறது. எப்படியென்றால், விசைகொண்டு குதித்துப் பாயுங்கால் விண்ணில் தவழும் மேகத்தையே சாடும் திறன் படைத்த சிங்கம் போன்றவன் வாலி; சுக்கிரீவனோ முயல் போன்றவன். "சிங்கத்தை விட்டு முயலைத் துணைகொள்ளும் பேதையாக இருக்கிறாயே!" என்று பரிந்து பேசுகிறான் வாலி.

தன்னை மறந்து பேசும் வாலி, இராவணனுடன் தனக்குள்ள கூட்டுறவை மறந்துவிடுகிறான். வாலியின் வாலால் கட்டுண்டு கலங்கிய இலங்கை வேந்தன், தன்னைத் தோழனாக ஏற்கும்படி வாலியிடம் வேண்டிய பொழுது, மானியான வாலி பேருவகைகொண்டு பத்துத் தலை அரக்கனைத் தழுவி, இன்னுயிர்த் துணைவனாக ஏற்றுக்கொண்டான். எனவே, இராம-இராவணப் போரில், இராமனுக்குத் துணைபுரியும் நல்வாய்ப்பு வாலிக்குக் கிட்டாது. மாறாக இராவணனுக்கு உதவியாக இராமனை எதிர்த்துப் போராடித் தோழமைத் தர்மத்தைக் காப்பாற்றவேண்டிய கடமை அவனுக்கு உண்டு.

---

செயலை-(சீதையை இராம இலக்குவர் பாதுகாத்த) காவலை. செற்ற-அழித்த. பகை-பகைவனான இராவணன். தெறுவான்-அழிக்க. தெரிந்து-யோசித்து. அயலை-இன்னொருவனை (சுக்கிரீவனை). புயல்-மேகம். பொங்கும் அரி-பொங்கி எழும் சிங்கம்.

எவ்வகையிலும் இராமன் செயலைப் பழியிலிருந்து காக்க இயலாமை கண்ட வாலி, மீண்டும் சூரிய குலத்துக்கு நேர்ந்த குற்றத்தை எண்ணிச் சோர்கிறான்.

கார் இயன்ற நிறத்த களங்கம்ஒன்று
ஊர் இயன்ற மதிக்குள தாம்எனச்
சூரி யன்மர புக்கும்ஓர் தொன்மறு
ஆரி யன்பிறந்து ஆக்கினை யாம்அரோ!

வாலியைக் கொன்ற வீரன் என்ற புகழ் இராமனுக்குக் கிட்டும் என்றாலும், அவன் தன் சாவைப் பொருட்படுத்த மாட்டான். ஆனால் கரந்திருந்து கொன்றவன் என்ற பழியே இராமனைச் சாரும் என்று கருதி, மனம் வருந்துகிறான் வாலி; வெட்கம் இல்லாமல் வீரர் ஏறுபோல் நேர் எதிரே நிற்கிறாயே என்று அவனைக் கடிந்துகொள்கிறான்.

மற்று ஒருத்தன் வலிந்துஅறை கூவவந்து
உற்ற என்னை ஒளித்துஉயிர் உண்டநீ,
இற்றை யில்பிறர்க் கும்இகல் ஏறுஎன
நிற்றி போலும் கிடந்த நிலத்துஅரோ!

இறுதியாக, சூரியகுல வேந்தரது தொல்லறத்தையும், நல்லொழுக்கத்தையும், சாத்திரங்கள் சாற்றும் முறையையும் போற்றத் தவறி இராமன் செய்த குற்றத்தை வாலி அறுதியிட்டுக் கூறுகிறான்.

---

கார்-கருமை. கார் இயன்ற நிறத்த களங்கம்-கருநிறமான களங்கம். ஊர் இயன்ற மதி-ஊர்ந்து சஞ்சரிக்கும் சந்திரன். தொன்மறு-நிலையான களங்கம். ஆரியன்-இராமனாகிய நீ. ஆக்கினை-உண்டாக்கினை.

இற்றையில்-இன்றைய தினம். பிறர்க்கும் இகல் ஏறு என-ஏனைய வீரருக்கெல்லாம் வலிய ஆண் சிங்கம் போல. இகல்-வலி. கிடந்த நிலத்து-(உன் அக்கிரமச் செயலால்) நான் விழுந்து கிடக்கும் நிலத்தில். நிற்றி போலும்-நிற்கின்றாயே!

**வாலி யைப்படுத் தாய்அலே; மன்அற**
**வேலி யைப்படுத் தாய்,விறல் வீரனே!**

இராகவனது கொல்வினையால் விழுந்து கிடக்கும் வாலி, "வாலியைப் படுத்தாய் அலே" என்று கூறுவது முரணுகத் தோன்றலாம். ஆனுல் தன்னிரக்கம் அறியாத அப்பெருவீரன், தனக்கு நேர்ந்த கேட்டைக் கருதவே இல்லை. அவன் தன்னையே மறந்து பேசுவதற்குத் தன்மை யில் படர்க்கை வந்ததே சான்ருகும். அவன் செய்கை யையும், செய்தோனையும் கணிப்பதிலேயே ஒருநிலைப் பட்ட சித்தத்துடன் ஈடுபட்டிருக்கிருன். வாலி என்ற வேந்தன் மாய்வது ஒரு சாமான்ய நிகழ்ச்சியாகவே அவ னுக்குத் தோன்றுகிறது. ஆனுல் அறத்தின் வெற்றிக்காக அனைத்தையும் அர்ப்பணித்து அரும்பணி புரிந்து வரும் இராகவனே இந்தக் கொலையைக் கரந்திருந்து செய்த கொடுமையால் அறத்தின் வேலி அழிந்துவிட்டதென்ற கருத்தே அவனது மனத்தில் பேராதிக்கம் வகிக்கிறது.

"அறவேலியை அழிக்கவல்ல உன் விறலும் வீரமும் மிக மிக நல்லன!" என்ற இகழ்ச்சிக் குறிப்பு "விறல் வீரனே" என்ற விளியில் அடங்கியிருக்கிறது.

இராமனுக்கு ரோஷம் ஏற்படவேண்டுமென்பதற்காக வாலி பேசும் ஏளனப் பேச்சுக்கு மகுடம் வைத்தாற் போல் கடைசிப் பாடல் அமைந்திருக்கிறது. "உற்ற தாரத்தைக் கவர்ந்து சென்ற கயவனைக் கொல்வதற்குப் பயன்படா மல், தோளுக்குப் பாரமாய் வில்லைச் சுமந்து திரிகிருயே! எதற்காக? ஆயுதமில்லாதவன் மார்பில் மறைந்திருந்து அம்பு விடவா?" என்று குத்தலாகக் கேட்கிருன் வாலி.

**தாரம் மற்றெரு வன்கொளத் தன்கையில்**
**பார வெஞ்சிலை வீரம் பரிப்பதுஎன்?**

---

படுத்தாய்-வீழ்த்திஞய். மன் அறம்-நிலைபெற்ற அறம், அல்லது அரசதர்மம். விறல்-வெற்றி.

தாரம்-மனைவி. பரிப்பது-தாங்குவது. இகல்—போர்.

**நேரும் அன்று மறைந்து நிராயுதன்**
**மார்பின் எய்யவோ வில்இகல் வல்லதே!**

இவ்வாறுக "எயிறு பொடிபடத் தின்று" (எயிறு-பல். தின்று-கடித்து) "விழிவழித் தீஉக" (உக-சிந்தி) வாலி தன் வாதத்தை முடித்தான் என்று கூறி, இராமனது மறுமொழியைத் துவக்குகிறான் கம்பன். வாலியின் 'ஏச்சுப் பேச்சு' வெகுளியில் தொடங்கி, வெகுளியில் முடிகிறது என்றாலும், இது தனக்கு நேர்ந்த கேட்டைக் கருதி எழுந்த இழிந்த வெகுளியல்ல; இராமன் தனக்குத் தேடிக்கொண்ட பழியை எண்ணி எழுந்த செம்மைசேர் வெகுளியாகும்.

# சாமான்யனும் சான்றோனும்

கம்பனது வாலி வாதித்த முறையையும் வற்புறுத்திய கருத்துக்களையும் அறிந்தோம். இராமனது மறுமொழியைக் கேட்பதற்கு முன், வான்மீகத்து வாலியின் வாசகத்தை நினைவூட்டிக்கொள்வது நலம். வான்மீக முனிவர் கூறுகிறார்:

"புண்பட்ட வாலி, நெருங்கி வந்த இராம இலக்குவரைக் கண்ணுற்றவுடன், அறவழிப்பட்ட கூரிய வார்த்தைகளைப் பேசலாயினன்.

"நான் என் பகைவனுடன் வெறிச்சமர் செய்த வேளையில் என்னை மறைந்துநின்று கொன்றுவிட்டீர்! பராமுகனாயிருந்து வீழ்த்திய இந்த வினையின்மூலம் நீர் என்ன புகழை அடையமுடியும்? உமது பெருமையை இசைக்காத நா இல்லை. நீர் அரசர் வம்சத்தில் உதித்தவர்; மேன்மை மிகுந்த குலத்தில் தோன்றியவர்; வாய்மை தவறாதவர்; காட்சிக்கு இனியவர்; குணசீலர்; பண்பாளர்; பிறர்துயரைக் கண்டு இளகும் இதயம் உடையவர்; பிறர் இன்புறுவதைக் கண்டே தாம் இன்பமடையும் சால்புள்ளம் படைத்தவர்; பெரும்புகழை நாடி மனம் விம்மியபொழுதும், கடமை தவறாதவர்; முறை பிறழாதவர். உமது வீரம், பொறை, சத்தியம், உறுதி, தன்னடக்கம், அரசநீதி, அபராதம் செய்தவரைத் தண்டிக்கும் திறன் ஆகியவற்றை மக்கள் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். அரசர்க்குத் தேவையான நற்குணங்கள் இவை. இவையனைத்தும் உம்மிடம் இருப்பதாகத்தான் நானும் எண்ணினேன். மேலும், உமது தொன்மையான குலத்தின் பெருமையையும் கருத்தில் கொண்டேன்; அதனால் தாரையின் கண்ணீரை ஒரு பொருட்டாக மதியாமல், உதாசீனம் செய்தேன். சுக்கிரீவனைச் சந்தித்து மல்லமர் நிகழ்த்த வந்தேன்; இராம! நான் வேறு ஒருவனுடன்

போர் செய்யும்பொழுது, இடையில் என்னைத் தாக்கும் ஈனச் செயலை நீர் வெறுப்பீர் என்று இன்று காலை மரண வாளி மார்பில் பாயும் வரை மயங்கியிருந்தேன். அன்னியன் அம்பை எதிர்பாராமல் அமர் செய்தேன். ஆனால் இப்பொழுது உமது கொடுமனம் அம்பலமாகிவிட்டது. நீர் புற்களால் மூடப்பெற்ற பாழுங்கிணறு போன்றவர். அறக்கூறி தாங்கி மறவினை புரிகிறீர். உமது உள்ளத்தில் கள்ளம் நிறைந்திருக்கிறது. இழிந்த தீவினையைப் புரிவதற்கும் நீர் சித்தமாயிருக்கிறீர். நீர், நீறு பூத்த நெருப்பைப்போல், முனிவர் வேடத்தில் திரியும் பாவியாக இருப்பதை நான் உணரவில்லை. நீர் தருமத்தின் நடை உடை பாவனையை வீணுக்குத் தரித்து வெளிச்சம் போடுவீர் என்று நான் கருதவில்லை. உமது நாட்டிலோ நகரிலோ நான் ஒரு தீங்கும் இழைத்திலேன். நான் மமதை கொண்டு உம்மை அவமதித்தேன் என்று நீர் குறைசொல்லமுடியாது. பின்னர் நீர் ஏன் குற்றமற்றவனை என்னைக் கொலை செய்தீர்? நான் காட்டிலுள்ள காய்கனிகளைப் புசித்துக்கொண்டு, எவருக்கும் கெடுதி செய்யாத வாழ்வை நடத்திவருகிறேன். என் பகைவனைக் களத்தில் கண்டு சமர் செய்தேன். இராம! உம்மோடு ஒருபொழுதும் போருக்கு வரவில்லை. அரசனே! உம்மை நான் தவக் கோலத்திலே காண்கிறேன். தொன்மையான பெருமைக்குரிய அரசர் குலத்தில் உதித்த உம்மைப் போன்ற ஒருவர், அழகான தருமவேடம் தாங்கி, இழிவான செயல் புரியலாமா? குலத்துக்குப் பழிதேடலாமா? ரகு மன்னன் காலத்திலிருந்து வாழையடி வாழையாக நீண்டு நிலைபெற்ற உமது வம்சம், கடமைகளை நிறைவேற்றிப் புகழ்பெற்றது. அந்த வம்சத்தின் தோன்றலாகிய நீர், ஏன் தவசி ஆடை தரித்த பாவியாகக் காடுகளில் திரிந்துகொண்டிருக்கிறீர்? சத்தியம், பராக்கிரமம், மாசு மறுவில்லாத நீதி, மனநிறைவுடன் வாரி வழங்கும் வள்ளன்மை, பாவியைப் பாரில் வீழ்த்தும் விறல் இவையே அரசனுக்குச் சிறப்பை அளிக்கின்றன. அரசனே! நாங்கள் காய்கனிகிழங்குகளைத் தின்று காட்டில் வாழ்கிறோம். எவருக்கும் தீமை செய்யாத எங்கள் இனத்

துக்கு இயல்பாக அமைந்த ஏற்பாடு இது. நீரோ மேலான இடத்துக்கு உரிய மானுடர். பொன்னும், வெள்ளியும், பூமியும், நாடும், பேராசையுமே போருக்குத் தூண்டுகோல்; கலகத்துக்குக் காரணம்; கொள்ளைக்குத் தோற்றுவாய். இவற்றில் எதன்மீது ஆசை கொண்டு என்னை நலிந்தீர்? மனிதன் கைப்படாத இந்தக் காட்டின் மீதும், நாங்கள் புசிக்கும் காய்கனிகள்மீதும் ஆசை கொண்டு என்னைத் தாக்கினீரோ? வலுப்பெற்ற அரசர்கள் இன்பம்நாடி இஷ்டப்படி செயல்படமுடியாது. அவர்கள் பாவத்தை ஒடுக்கும் வன்மையும் அன்பால், ஆதரவைத் திரட்டும் மென்மையும் பெற்றிருக்கவேண்டும். அரசுக்கப்பலைச் செலுத்திச்செல்லும் ஒருநிலைப்பட்ட சித்தத்துக்கு உரியவராயிருக்கவேண்டும். நல்லோரையும், சான்றோரையும் துணைகொள்ளும் விவேகத்தைப் பெற்றிருக்கவேண்டும். இந்தப் பண்புகளையெல்லாம் பிணக்கமில்லாமல் இணக்கமாக இசைத்துக் கடைப்பிடிக்கும் வேந்தரே அழியாப் புகழ் அடைவர். ஆனால் நீரோ திண்மையற்றவராகவும், முன்கோபியாகவும், ஊசலாடியாகவும், ஆசை அனைத்துக்கும் அடிமையாகவும் இருக்கிறீர். கடமையைத் திரணமாக மதித்து மிதித்துத் துவைக்கிறீர். வில்லொன்றே வலியுடைத்து என்று கருதி வாழ்கிறீர். நீர் மெய்ப்புகழை நாடவில்லை. நல்லொழுக்கத்தை இழிவாகக் கருதுகிறீர். ஐம்புலன்களின் சிறையாளாகிப் புதுப்புது இன்ப வேட்கைகளில் ஈடுபடுகிறீர். நான் சொல்லாலோ செயலாலோ உமக்குத் தீங்கு இழைக்கவில்லை; எனினும் உமது கொலைவாளியால் நான் இரத்த வெள்ளத்தில் கிடக்கிறேன். இதனால் உமக்கு நீங்காக் களங்கம் ஏற்பட்டுவிட்டது. இந்தத் தகாத காரியத்தை ஏன் செய்தீர் என்று சாதுக்கள் கேட்டால், என்ன சமாதானம் சொல்வீர்? அரசனே! அரசனைக் கொன்றவன், நாத்திகன், அந்தணனையோ ஆவினத்தையோ கொன்று அகமகிழ்ந்தவன், அண்ணன் திருமணம் முடிக்காதிருக்கும்பொழுது தான் தரும விரோதமாகத் திருமணம் செய்தவன், குருபத்தினியுடன் கூடத் துணிந்தவன், உலோபி, உளவாளி, நண்பனைக் கொன்றவன்

ஆகிய இழிவுப் 'பிறவிகள்' அனைவரும் பாவிகளின் நரகில் விழுவார்கள் என்பது திண்ணம். என் தோலைச் சாதுக்கள் உடுத்தமாட்டார்கள். எனது எலும்புகளும் உரோமங் களும் உமக்குப் பயன்தரா. உம்மைப் போன்ற தவசிகள் என் மாமிசத்தை உணவாகக் கொள்ளமாட்டார்கள். முள்ளம்பன்றி, பன்றி, உடும்பு, முயல், ஆமை ஆகிய நகங்களையுடைய பிராணிகளை ஒருவன் கொன்று புசிக்க லாம். ஆனால் நானோ ஐந்து விரல்களுள்ள குரங்கு. என் எலும்புகளையும், உரோமத்தையும், தோலையும் தொடு வது பாவம் என்று விவேகிகள் கருதுவர். அவர்கள் என் மாமிசத்தைப் புசிக்கமாட்டார்கள். இராமா! நான் பயனில்லாத பலியாக மரிக்கிறேன். தாரை திறம்பட வாதித்ததெல்லாம் வீண்போயிற்று. அவளது புத்திமதிக் குச் செவிகொடுக்க மறுத்தேன். இனிய சொற்களைத் தான் அவள் பேசினாள்; ஆனால் நான் அவற்றை வெறுத் தேன். இங்கு ஓடிவந்து காலன்வாய்ப் பட்டேன். நல் லொழுக்கச் சிறப்புக்குரிய பெண்ணுக்கு நாணம் அறி யாத நலங்கெட்ட நாயகன் வாய்த்தாற்போல, இந்தப் பூமாதுக்கு நீர் நாயகனாக அமைந்தீர். நீர் அவளைப் பாதுகாக்கவில்லை. நீர் கோழை; உமது இதயம் இழிவு அடைந்திருக்கிறது. நீர் மோசக்காரன்; துன்மார்க்கத் தில் திளைக்கும் தீயோன். உமது கொடுமனம் கபடத்தில் இன்பம் காண்கிறது. உம்மைப்போன்ற சிறுமைப் பிற வியை, அற்பனை மகாத்மாவான தசரதன் எப்படிப் பெற் றான்? அந்தோ! தருமம் என்னும் கயிற்றை அறுத்துக் கடமை என்னும் அங்குசத்துக்கு அடங்காது, மதம் கொண்டு அலையும் இராமன் என்ற வேழத்தால் எதிர் பாராமல் தாக்குண்டு கொல்லப்பட்டேன். அந்த மதயானை யின் மிதியடியில் நான் விழுந்து கிடக்கிறேன். இந்தத் தகாத காரியத்தைச் செய்த நீர், பெரியோர் கூடும் பேரவையில் பேசுவதற்கு எப்படித் துணிவீர்? இந்த மானங்கெட்ட செயலைக் கூரிய முறையில் கண்டித்து அவர்கள் அனைவரும் பேசும்பொழுது நீர் என்ன செய் வீர்? உமது வீரம், பலம், பராக்கிரமம் ஆகியவற்றை நிர பராதியிடம்தான் காட்டியிருக்கிறீர். உமது மனைவியைக்

கவர்ந்து சென்றவனுடன் ஆண்மையோடு போராடி உமது பராக்கிரமத்தை நிரூபிக்கவில்லை. நீர் மறைந்து நிற்காமல், தைரியமாக என் நேர்எதிர் வந்து நின்று போர் செய்திருந்தால் இந்நேரம் என்னால் கொல்லப்பட்டு எமலோகம் சென்றிருப்பீர்; என் முயற்சி வீணாயிற்று; கண்ணுக்குத் தெரியாத கரம் ஒன்றால் நான் கொல்லப் பட்டேன். இம்மாதிரிதான் உறங்கிக்கொண்டிருப்பவனைப் பாம்பு கடித்துக் கொல்லுகிறது; மீளா உறக்கத்தில் ஆழ்த்துகிறது. நீர் சுக்கிரீவனது சத்துருவைக் கொன்று அவனது ஆவலை நிறைவேற்றிவிட்டீர். ஆனால், நீர் முதலில் என்னை நாடிவந்து, உமது மனத்திலுள்ள எண்ணத்தை என்னிடம் சொல்லியிருந்தால், ஒரே பகலில் நான் மைதிலியை உம்மிடம் கொண்டுவந்து சேர்த்திருப்பேன்; அத்துடன் இராவணனைக் கொல்லாமல் சங்கிலியால் கட்டிக் கொண்டுவந்து உமது காலடியில் கிடத்தியிருப்பேன். ஆம், அவள் அடி ஆழ நரகத்தில் மறைக்கப்பட்டிருந்தாலும், கடல்அலைகளுக்குக்கீழ் கரவாக வைக்கப்பட்டிருந்தாலும், அவள் இருக்குமிடந்தேடிச் சென்று, வெள்ளைக் குதிரை வடிவில் இருந்த வேதங்களைத் திருமால் மீட்டுக் கொண்டு வந்ததுபோல மைதிலியை மீட்டுக்கொண்டு வந்திருப்பேன். என் ஆத்மா இந்தக் கூட்டை விட்டுப் பறந்தபின், சுக்கிரீவன் அரசுகட்டில் ஏறுவதுதான் நீதி; முறைமை. ஆனால், அரசனே! நீர் என்னை வஞ்சகமாகக் கொன்றது மிகப் பெரிய அநீதியாகும். என் இதயமே! அமைதி காண்பாயாக! இந்தப் பூமியில் விதி பேரரசு புரிகிறது. என்றைக்காவது ஒருநாள் இறக்கவேண்டியதுதான். ஆனால் நீர் உம்மைக் குற்றம் சாட்டுவோருக்குத் தக்க சமாதானம் சொல்ல வழி தேடும்.''

வான்மீகத்தின் வாலி கம்பனது வாலியைப்போலவே, இராமனது குலப்பெருமையைப் போற்றிப் பேசுகிறான். இருவரும் இராமனது அறம் திறம்பிய செய்கையைச் சாடுகின்றனர். எனினும் இருவரது பேச்சுக்களுக் கிடையே ஆழ்ந்த குணவேற்றுமை இருப்பதை நாம் தேர்ந்து தெளியமுடியும்.

"இராமா! என்னைக் கொல்வதற்காக அறம் திறம் பிழை! நீ அறத்தை மீறியதால் நான் வீணே உயிரை இழக்கிறேன்!'' என்று வான்மீகத்தின் வாலி கதறுகிறான். தன்னைக் கொன்ற இராமனைத் துன்மார்க்கத்தில் திளைக் கும் தீயோன் என்றும், கபடத்தில் இன்பம் காண்பவன் என்றும் ஐம்புலன்களுக்கு அடிமைப்பட்டவன் என்றும் ஏசுகின்றான். ஆம்! வான்மீகத்தின் வாலிக்கு, தனக்கு நேர்ந்த கேட்டைப்பற்றியே கவலை, வருத்தம், துயரம் எல்லாம்! இந்தக் கேட்டைச் சூழ்ந்தவன் மீது எல்லை யில்லாத கோபம் உண்டாகிறது. அந்தக் கோபம் வெறுப்பாக மாறுகிறது.

கம்பனது வாலி முற்றிலும் வேறுபட்ட பாத்திர மாகக் காட்சி தருகிறான். "என்பால் எப்பிழை கண்டா யப்பா?'' என்று அவன் கேட்பது மெய். ஆனால் "நீ ஏன் உனக்கு இழிவு தேடும் வகையில என்னைக் கொன்றாய்?'' என்பதுதான் கம்பனது வாலி வற்புறுத்திக் கேட்கும் கேள்வியாகும். இவன் தன் சாவை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை; தன்னைக் கொன்றதால் இராமனுக்கு உண்டான பழியைப்பற்றியே கவலை, வருத்தம் எல்லாம்! அறம் வளர்க்கும் கண்ணாளனே தருமம் தவறிவிட்டானே என்று அவன் ஆத்திரப்படுகிறான். அந்த வெகுளி தன்னலம் கருதாத் தூய்மைச் சுடரொளியுடன் பிரகாசிக் கிறது. எனவே, வான்மீகியின் வாலியைப்போலக் கம்ப னது வாலி வசைமொழி பேசவில்லை. இவனது ஏச்சுப் பேச்சில் இராமன்பால் இவனுக்குள்ள பெருமதிப்பும், பேரன்பும் விளக்கம்பெறுகின்றன. இராமனிடம் உள்ள பரிவும் இரக்கமும் இவனது வாதத்தின் அடிச்சரடாக அமைந்திருக்கின்றன.

நுணித்து ஆராய்ந்தால், கம்பனது வாலி தன்னை மறந்து பேசுவதை உணரமுடியும். "என்னைக் கொன் றாயே!'' என்று அவன் பேசவில்லை. "நீ இதைச் செய்ய லாமா?'' என்றுதான் அவன் பன்னிப் பன்னிக் கேட் கிறான். செய்தவன், செய்கை ஆகிய இரண்டில்தான் அவன் ஈடுபட்டிருக்கிறான். செய்கையின் விளைவாகத்

தான் மரண வேதனையில் துடிப்பதை அவன் மதிக்கவே யில்லை.

அதனால்தான்,

**இருவர் போர் எதிருங்காலை...ஒருவர்மேல் ஒளித்து நின்று...வாயம்பு மருமத்து எய்தல் தருமமோ?**

என்று கேட்கும்பொழுது படர்க்கையில் பேசுகிறான். "வாலியைப் படுத்தாய் அலை" என்று மீண்டும் படர்க்கையில் பேசுகிறான்.

வான்மீகத்தின் வாலி சராசரி மனிதனாக நடந்து கொள்கிறான். வஞ்சகமாகக் கொலையுண்ட நிலையில் அவனது ஆத்திரம் வசைக்கணைகளாகப் பாய்ந்து சீறுகிறது. வாழ்வை நேசிப்பது மனித இயல்பு. அக்கிரமமாகத் தன் உயிர் பறிக்கப்படுவதைக் கண்டு மனிதன் உளங்கொதித்துப் பேசுவது இயல்பு. அநீதி இழைத்த கொலைகாரனின் குணத்தையும் குற்றத்தையும் எடை போட்டு, உண்மையை உள்ளபடி உணர்ந்து பொதுநெறி தவறாமல் அளந்து பேசுவது சாமான்ய மனிதனுக்குச் சாத்தியமான விஷயம் அல்ல. ஒருவன் எதிர்பாராத வகையில் கால பாசத்தால் கட்டுண்டால், அவன் தனக்கு நேர்ந்த கதியை எண்ணி மனம் வருந்துவதும், தன்னிரக்கம் கொண்டு புலம்புவதும் மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்ட செய்கையாகாது. எனவே, வான்மீகியின் வாலியை நாம் புரிந்துகொள்ள முடியும். நம்மில் பெரும்பாலோர் அவனைப் போலவே பேசுவோம் என்பதையும் எவரும் மறுக்கமுடியாது.

உண்மையில் அவனது பேச்சை அர்த்தமில்லாத புலம்பல் என்றோ அபாண்டமான அவதூறு என்றோ ஒதுக்கிவிடமுடியாது. அவனது பேச்சில் நியாயம் இருப்பதால்தான், அவன் "அறவழிப்பட்ட கூரிய வார்த்தைகளை"ப் பேசியதாக வான்மீகி முனிவர் குறிப்பிடுகிறார்.

வான்மீகியின் வாலி, நாம் அனைவரும் புரிந்துகொள்ளக்கூடிய சாமான்ய மனிதனாக வடிவெடுத்து நம் பரிவுக்

குப் பாத்திரமாகிருன். ஆனல் கம்பனது வாலி, நாம் அனைவரும் முன்மாதிரியாகக் கொண்டு போற்றத்தக்க சான்ருேனுக உருப்பெற்றுவிடுகிருன். தன்னைக் கரந்திருந்து கொன்ற இராமனிடம் எத்துணை அன்பு! தம்பிக்காக அரசுச் செல்வத்தை ஈந்த உராமனது தியாகத்தில் எத்துணை ஈடுபாடு! சனகன் பெற்ற அன்னத்தை இழந்ததால் 'சிந்தை திகைத்தனையோ' என்று கேட்டு, அவனது கொல்வினைக்கு அமைதி காணும் அருமுயற்சியில்தான் எத்துணைப் பரிவு! உலகினுக்கு அறத்தின் ஆறு எலாம் இழைத்தவர்க்கு இயல்புஅலாத காரியம் நிகழ்ந்து அவன் பழிசூடிவிட்டானே எனபதில்தான் எவ்வளவு நாணம்! தன்னைக் கொன்ருன் என்ற ஓர் உண்மையைமட்டும் உரைகல்லாகக் கொண்டு இராமனை மதிப்பிடாமல், அவனை முழுமையாகப் புரிந்து, குற்றத்தைக் கடுமையாகக் கண்டிக்கும்பொழுதே குணத்தைப் போற்றுவதில் எத்துணை அக்கரை! 'முனிவு இலாதாய்!' என்றும் 'தாய்மையும் அன்றித் தருமமும் நட்பும் தழுவினின்ருய்!" என்றும் இராமனை விளிப்பதில் பொதிந்திருக்கும் பண்பாடு எத்தகையது! அறத்தின் நாயகனே அற வேலியை வீழ்த்திஞல், தருமத்தின் கதி என்ன என்று மனம் மறுகும் மாண்பு எத்தகையது? இராமனை இகழ்ந்து பேசும்பொழுதும், அவனுக்கு ரோஷம் ஏற்படவேண்டுமென்பதில் எவ்வளவு கரிசனம்!

# வாய் இழந்த இராமன்; நவை உணர்ந்த வாலி

கம்பனது வாலி வான்மீகத்து வாலியிலிருந்து வேறு பட்டிருப்பதைப் போலவே, கம்பனது காவியத் தலைவனும், வான்மீகத்தின் தலைவனிலிருந்து வேறுபட்டவனாகக் காட்சி தருகிறான். வான்மீகத்தில் பாராளும் வேந்தனான பரதனது பிரதிநிதி என்ற முறையில் குற்றவாளிகளைத் தண்டித்துப் பிரஜைகளைப் பாதுகாக்கும் உரிமை தனக்கு உள்ளதென்று இராமன் சாதிக்கிறான். தம்பி உயிர் வாழும்பொழுதே, அவனது மனைவியைத் தமையன் கவர்ந்து பெண்டாகக் கொள்வது, மனுநீதியிலிருந்து பிறழும் பாதகச் செயலாகும். வாலி இந்தக் காரியத்தைச் செய்ததால், அவனுக்குக் கொலைத் தண்டனை விதித்து நிறைவேற்றியதாக அவன் விளக்கம் தருகிறான். மறைந்திருந்து கொன்றது மாபெரும் பிழையென்று முதநூல் வாலி வாதிக்கவில்லையென்றாலும், அந்தக் கரவுச் செயலுக்கும் வான்மீகத்து இராமன் அமைதி காட்ட முற்படுகிறான். வாலி ஒரு விலங்கு என்றும், மறைவிலிருந்து விலங்குகளைக் கொல்லும் உரிமை மாந்தருக்கு உண்டு என்றும் கூறுகிறான். இவ்வாறு அவன் முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகிறான். வாலியை மனிதனாக மதித்து, மனுநீதி பிறழ்ந்தாய், மருமகள் எனக் கருதத்தக்க புனிதமான உருமையுடன் கூடினாய் என்று குற்றம்சாட்டிய இராமனே, அவனை வேட்டைவிதிகளுக்கு இலக்காகவல்ல விலங்கு என்றும் கூறிவிடுகிறான். ஒன்றோடொன்று ஒவ்வாமல் வாதித்தாலும், அதைப் புரியவல்ல நுண்மதி வாலிக்கு இல்லை என்பதை அறிந்தே, அவ்வாறு அவன் பேசினான் போலும்! உயிரையும், உணர்வையும் இழந்த வான்மீகியின் வாலி இராமனது வாதத்தின் முரணைக் காணமுடியாதவனாய், "ஐயனே! நீவிர் கூறிய அனைத்தும் நீதிவாசகமாகும். நாயேன் சினந்து செப்பிய மொழி

களைப் பொறுத்தருள்க!'' என்று கூறி அமைந்துவிடு கிறான். கம்பனது வாலியை அவ்வாறு வாய் அடைக்க முடியாது. "இது என் செய்தவாறு நீ?'' என்ற கேள்விக்கு அமைதிகாட்டுவது இயலாது என்பதைக் கம்பனது இராமன் அறிவான். எனவே, "என்பால் எப்பிழை கண்டாய் அப்பா?'' என்ற வினவுக்கு விடையளிப்பதில் அவன் ஈடுபடுகிறான். வாலி மாயாவியைத் தொடர்ந்து சென்றபொழுது சுக்கிரீவன் யாதொரு பிழையும் செய்ய வில்லை என்பதை விரித்துரைக்கிறான். "குற்றமற்றவனைக் கொல்லக் கருதினாய்! தம்பி என்றுகூடத் தயைகாட்ட வில்லை! தஞ்சம் புகுந்தவனிடம் வஞ்சம் தீர்க்க முனைந்தாய்! அவனது அருமை மனைவியைக் கவர்ந்தாய்!'' என்று வாலி இழைத்த பிழைகளை இராமன் தொகுத்துக் கூறுகிறான்:

கொல்லல் உற்றனை உம்பியைக் கோதுஅவற்கு
இல்லை என்பது உணர்ந்தும் இரங்கலை
'அல்லல் செய்யேல், உனக்குஅபயம்,பிழை
புல்லன்' என்னவும் புல்லலை, பொங்கினாய்

என்று இராமன் குற்றம்சாட்டுகிறான்.

"கோது அவற்கு இல்லை என்பது உணர்ந்தும் இரங்கலை'' என்று இராமன் கூறுவதை ஏற்கமுடியாது. சுக்கிரீவன் ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றத் துணிந்தான் என்று வாலி கருதியது தவறு. தம்பியும் பிறரும் உண்மையை எடுத்துக் கூறிய பின்பும் சந்தேகத்தை விட்டொழிக்காதது வாலியின் பிழை. ஆனால் சுக்கிரீவன் நிரபராதி என்பதைப் புரிந்துகொண்டே அவனை வாலி கொல்லக் கருதியதாக இராமன் கூறுவதற்கு ஆதாரம் இல்லை. இராமனிடம் வாலி-சுக்கிரீவ வரலாற்றை விளம்பிய அனுமன் அம்மாதிரி சொல்லவில்லை.

---

கோது-குற்றம். அல்லல் செய்யேல்-துன்பம் செய்யாதே. புல்லல்-பொறுத்தருள்வாய். புல்லலை-பொறுக்கவில்லை.

மேலும் இராமன் கேட்கிறான்:

ஈரம் ஆவதும் இற்பிறப்பு ஆவதும்
வீரம் ஆவதும் கல்வியின் மெய்ந்நெறி
வாரம் ஆவதும் மற்றொரு வன்புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கரோ?

அன்பும், ஆன்ற குடிப்பிறப்பும், வீரமும், கல்வியின் பயனான ஒழுக்க உயர்வும் பிறன்மனைவியைப் பெண்டாளும் செருக்குடன் பொருந்துமா என்று இராமன் கேட்கிறான். ஏனெனில், தீவினைகளில் கொடிது, பிறன்மனை நயத்தலாகும்.

எனவே,

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையான்
பெண்மை நயவாமை நன்று

என்றார் வள்ளுவர்.

"நாம் வலியேம்" என்று கருதி மெலியாரை வெகுண்டு துன்புறுத்துவது வீரம் தவறிய செயலென்றும், அயலார் மனைவியரைக் கற்பழிப்பது அறம் தவறிய செயல் என்றும் தெளிந்த அறிவுடையோர் கருதுவதை இராமன் எடுத்து இயம்புகிறான்.

மறம் திறம்பல், வலியம் எனுமனம்
புறம் திறம்பல், எளியவர்ப் பொங்குதல்,

---

ஈரம்-அன்பு. இற்பிறப்பு-உயர்குடிப் பிறப்பு. வாரம்-உரிமை. புணர் தாரம்-திருமணம் புணர்ந்த மனைவி. தாங்கும்-பிடித்துக்கொள்வது. தருக்கு-செருக்கு.

அறன் வரையான்-அறத்தை உரிமையாக்கிக்கொள்ளாமல். அல்ல செயினும்-பாவத்தைச் செய்தாலும்.

மறம்-வீரம். திறம்பல்-நெறிதவறி நடத்தல். அருங்கடி-அருமையான காவல் (உடைய). திறம் திறம்பல்-கற்பின் வலிமையை அழித்தல்.

அறம் திறம்பல் அருங்கடி மங்கையர்
திறம் திறம்பல் தெளிவுடை யோர்க்கெலாம்

வாலி வலியிழந்தோடிய சுக்கிரீவனைத் துரத்தித் துரத்திக் கொல்ல முயன்று மறம் திறம்பினன் என்றும் உருமையைக் கவர்ந்து அறம் திறம்பினன் என்றும் இராமன் வாதிக்கிறன்.

ஆத லானும் அவன்எனக்கு ஆருயிர்க்
காத லான்என லானும்நிற் கட்டனென்
ஏதி லாரும் எளியர்என் றுரையும்
தீது தீர்ப்பதுஎன் சிந்தைக் கருத்தரோ.

இவ்வாறு இராமன் வாலி வதைக்கு நியாயம் கூறுகிறன். "என் ஆருயிர்த் தோழனன சுக்கிரீவனது மனைவியைப் பெண்டாளத் துணிந்தாய்; அவனையே கொல்லக் கருதினய். எனவே உன்னைக் கொன்றேன்" என்றதுடன் இராமன் அமையவில்லை. துன்பமுற்றுத் தவிப்பவன் தோழனக இல்லாவிட்டாலும் அநாதையாக இருந்தாலும், அவனது துயரைத் துடைப்பது தன் கடமையென்பதையும் வற்புறுத்திக் கூறுகிறன்.

வான்மீகத்தின் இராமனன சக்கரவர்த்தி திருமகன், "பரதன் என்ற பேரரசன் பிறப்பித்துள்ள ஆணைக்கு இணங்க, நாங்கள் அறவழிப் பிழையாது வினையாற்றி வருகிறேம்; தரும வழியை இகழ்ந்து தாழும் பாவிகள் அனைவரையும் தண்டித்து வருகிறேம்" என்று இயம்பி அரசியல் அதிகாரத்தைக் காட்டி அமைதி கூறுகிறன்.

ஆனல் நல்லவற்றையெல்லாம் ஆற்றுவதையே தன் கடனகக்கொண்டு, தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனகச் சிறக்க முற்படும் கம்பனது இராமனே, ஆதரவில்லாத எளியவரின் கண்ணீரைத் துடைப்பது தன் கடமை

---

நிற்கட்டனென்-உன்னைக் கொன்றேன். தீது-துன்பம். ஏதிலார்-யாதொரு ஆதரவும் இல்லாதவர்.

யென்ற அறவழி ஒழுக்கத்தைக் காட்டி அமைதி கூறு கிறுன்.

எனினும், "நேரும் அன்று, மறைந்திருந்து நிராயுதன் மார்பில் ஏன் எய்திஞய்?" என்று வாலி நேர்முகமாகக் கேட்டிருந்தும் அதற்கு இராமன் விளக்கம் தரவில்லை. வாலி செய்த பிழையைமட்டும் விளக்கிக் கூறிஞன். இது நேரான கேள்விக்குச் சீரான விடை தராமல், பெரும் பாலும் வேருென்று விரித்தலாய் உள்ளது. ஆயினும், வாலி இராமனது வாதத்துக்கே எதிர்மொழி கூறத் தொடங்குகிருன்.

கதிரவன் செல்வனைக் கொல்லக் கருதியது அக்கிர மம் என்று இராமன் கூறியதை வாலி மறுக்கவில்லை. அது பற்றி அவன் மௌனம் சாதிக்கிருன். அந்தக் கூற்றின் உண்மையை அவன் உணர்ந்தான் போலும்! தம்பியைக் கொல்லக் கருதிய தவறை எடுத்துக்காட்டித் திருத்துவதற்குப்பதிலாக, அதற்காகக் கொலைத் தண்டனை விதிப்பது நியாயமா என்றும் அவன் கேட்கவில்லை. ஏனெனில், உருமையைக் கவர்ந்து அறம் திறம்பிஞய் என்ற வாதத்துக்குத் தீர்வு காணுமல், அந்தக் கேள்வி யைக் கேட்பதில் பயனில்லை. எனவே, பிறன்மனை நயந்த பாவி என்ற பழிச்சொல் வழிவகை தெரியாத வசை மொழி என்பதை எடுத்துக்காட்ட அவன் முற்படுகிருன்.

ஐய, நுங்கள் அருங்குலக் கற்பினப்
பொய்யின் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சிபோல்
செய்தி லன்எமைத் தேமலர் மேலவன்
எய்தின் எய்திய தாக இயற்றிஞன்.

"ஐயனே! ஒருவனை மணந்துகொண்டு அவனையே புணர்வ தென்ற முறை உம் குலத்து மாதர்க்கு உரியது. எங்

---

கற்பின்-கற்பினை உடைய. பொய்இல்-பொய்மை இல்லாத. ஏய்ந்த-பொருந்திய. புணர்ச்சி-(விவாகம் செய்து) கலத்தல். தேமலர் மேலவன்-மணமிகுந்த மலர் (தாமரை) மேலிருப்பவன்; பிரமன்.

களைப் பிரமதேவன் அவ்வாறு படைக்கவில்லை. நேர்ந்த போது நேர்ந்தபடி புணரும் ஒழுக்கமுடையவர்களாய் அவன் எங்களைப் படைத்திருக்கிறான்'' என்று வாலி வாதிக்கிறான். மேலும்,

மணமும் இல்லை மறைநெறி வந்தன
குணமும் இல்லை குலமுதற்கு ஒத்தன
உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கலால்
நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்!

"மனம் போனபடி மருவிக் களிப்பதே எங்கள் ஒழுக்கம். எனவே, எங்களுக்கு வேத விதிப்படி விவாகம் செய்யும் முறையோ வம்ச பரம்பரைக்கு ஒத்த மரபுக் குணமோ கிடையாது'' என்பதை எடுத்துக்கூறி,

பெற்றி மற்றிது பெற்றதோர் பெற்றியிற்
குற்றம் உற்றிலென் நீஅது கோடியாய்

என்று அவன் தன் வாதத்தை முடிக்கிறான்.

"மனம்போன போக்கில் புணர்வதே எங்களுக்கு இயற்கையாக ஏற்பட்ட ஒழுக்கம். எனவே நான் நிரப ராதி என்பதை நீ கருத்தில் கொள்வாய்'' என்று வாலி கூறி முடித்ததைச் சொல்லும்பொழுது, கம்பன் வாலியைச் 'சொற்றகை' என்று குறிக்கிறான். அனுமனது சொல்லாற்றலைக் கண்டு இராமன் அவனைச் 'சொல்லின் செல்வன்' என்றான். வாலியின் சொல்லாற்றலைக் கண்ட கம்பன் இவனைச் சொற்றகை என்று குறிக்கின்றான். மானிடர்க்குரிய சட்டம் வானரர்க்குப் பொருந்தாது

மறைநெறி வந்தன-வேத விதிப்படி வந்த. மணமும்-விவாக முறையும். குலமுதற்கு-வம்ச பரம்பரைக்கு. குணமும்-மரபுக் குணமும். நிணம்-உடற் கொழுப்பு. இணங்கிய-பொருந்திய. நேமி-சக்கிராயுதம்.

பெற்றி-(பிறப்புக்குரிய) தன்மை. பெற்ற-அடைந்துள்ள. கோடி-கருத்தில் கொள்வாய்.

என்று வியத்தற்குரிய முறையில் நிதானமாகவும் சுருக்க விளக்கமாகவும் வாதிக்கும் வாலியைச் சொற்றகை என்றது சாலப் பொருத்தமாகும்.

வாலி வழங்கிய வாய்மையைக் கண்ட பின்னரும் இராமன் பின்வாங்கவில்லை. எவ்வாருயினும் வாலியை வாயிழக்கச் செய்யவேண்டுமென்று அவன் கருதினுன் போலும்! எனவே, வாலியின் சமாதானம் போலியாம் என்று கூறப்புகுந்து, புதிய இடர்களைத் தோற்றுவித்துக் கொள்கிருன்.

வாலி வானர வடிவு கொண்டிருந்தாலும் வானவர் அம்சம் கொண்டவன் என்பதாலும், அறநெறியை உணர்ந்தவன் என்பதாலும் 'விலங்கிலாமை விளங்கியது' என்று இராமன் கூறுகிருன். மேலும்

பொறியின் யாக்கைய தோ,புலன் நோக்கிய
அறிவின் மேலதன் ரேஅறத் தாறுதான்?
நெறியின் நோன்மையை நேர்நின்று உணர்ந்தநீ
பெறுதி யோபிழை யுற்றுறு பெற்றிதான்?

என்று வினவுகிருன். அறவழி பிழையாமல் ஒழுகுதல், உடலைப் பற்றியதல்ல; ஐம்பொறி வாயிலாக அடையும் விஷயங்களைப் பகுத்தாராய்ந்து பெறுகின்ற அறிவைச் சார்ந்தது. வாலி வானர வடிவில் இருந்தாலும், அறநெறியின் நோன்மையை நன்கு உணர்ந்திருக்கிருன். மனிதரைப் போலப் பகுத்தறியும் திறனை உடைய வாலி, தரும மார்க்கத்திலிருந்து தவறக்கூடாது என்பது இராமன் வாதம்.

முதலை தன்னைப் பிடித்திழுத்தபொழுது, ஆதிமூலமே என்று திருமாலைக் கூவியழைத்தது கஜேந்திரன் என்ற யானை.

---

பொறியின் யாக்கை-பொறிகளை உடைய உடம்பு. மேலது-இடத்தினது. அறத்தாறு-அறநெறி. பிழையுற்றுறுபெற்றி-பிழைகளைச் செய்யும் தன்மை.

பாடு பெற்ற உணர்வின் பயத்தினுல்
வீடு பெற்ற விலங்கும் விலங்கதோ?

என்று கேட்கிருன் இராமன்.

சிந்தை நல்லறத்தில் சென்றதால், சீதையின் துன்பத்தைத் தீர்க்கும் பொருட்டு, இராவணனுடன் கடும்போர் செய்தான் சடாயு.

வெந்தொ ழில்திறல் வீடுபெற்று எய்திய
எந்தை யும்எரு வைக்குஅரசு அல்லனே?

என்று இராமன் கேட்கிருன்.

கஜேந்திரன், சடாயு ஆகியோரைப் போல வாலி உருவத்தால் மிருகமானுலும் உணர்வால் மானுடனுதலால், மிருகச் செயல் செய்தது தவறு என்பது இராமனது வாதம்.

நன்மைதீமைகளைப் பகுத்தறியும் திறன் மிருகத்துக்குக் கிடையாது. ஆனுல்

நின்ற நன்னெறி நீஅறி யாநெறி
ஒன்றும் இன்மைஉன் வாய்மை உணர்த்துமால்

என்று அவன் கூறுகிருன். நிலையான நன்னெறிகளில் வாலி அறியாத நெறி ஒன்றுமில்லை என்பதை அவனது பேச்சே புலப்படுத்திவிட்டது என்று கூறிவிட்டு,

தக்க இன்ன தகாதன இன்னஎன்று
ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள

---

பாடு-பெருமை. பயம்-பயன்; பலன். வீடு-விடுதலை; முக்தி.

எருவை-கழுகு.

உன்னலர்-நினைக்காதவர். புத்தேளிர்-தேவர்.

மக்க ளும்விலங் கே;மனு வின்நெறி
புக்க வேல்,அவ் விலங்கும்புத் தேளிரே

என்று எடுத்துரைக்கிருன். "உயர்வு தாழ்வைத் தீர்மானிப்பது பிறப்போ, உருவமோ அல்ல. தகுதியானவை இவை, தகுதியில்லாதவை இவை என விதிவிலக்குகளைப் பகுத்து உணர்ந்து ஒழுகாதவர் மனிதராய்ப் பிறந்திருந்தாலும் மிருகங்களே ஆவர். மற்று, விலங்காயினும் மனுநீதியை மேற்கொண்டு ஒழுகுமாளுல், அவ்விலங்குகளும் தேவர்களுக்குச் சமானம்" என்பது இராமனது வாதம்.

"பிறப்பினுல் தாழ்ந்தவர்களில், நல்லவை செய்தவர் உள்ளனர்; தேவர்களிலும், முனிவர்களிலும் அல்லவை செய்தவரும் உள்ளனர்" என்று இயம்பிவிட்டு,

இனையது ஆதலின் எக்குலத்து யாவர்க்கும்
வினையி னுல்வரும் மேன்மையும் கீழ்மையும்
அனைய தன்மை அறிந்தும் அழித்தனை
மனையின் மாட்சிஎன் ருன்மனு நீதியான்

எந்தக் குலத்தில் பிறந்த எவர்க்கும் மேன்மையும், தாழ்மையும் அவரவர் செய்யும் செயல்களாலேயே வரும் என்று கூறிக் கருமத்தைக்கொண்டே ஒருவனது தருமத்தைத் தீர்மானிக்கமுடியுமென்ற அரிய தத்துவத்தை எடுத்து இயம்புகிருன்.

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்" என்று குணம் குற்றம் நாடும் கருவியை வள்ளுவப் பேராசான் சுட்டியிருப்பது ஈண்டு நினைவுகூரத்தக்கது.

---

இனையது ஆதலின்-(உண்மை) இத்தன்மையது ஆக இருப்பதால். மனையின்-அயலான் மனைவியின். அனைய தன்மை-அத்தன்மை. மனுநீதியான்-மனுநீதி தவருது நடக்கும் இராமன்.

ஒருவனது நிறைகுறையை வரையறுத்துக் காட்டுவது அவனது நடைமுறையே என்பதை உணர்ந்திருந்தும் அயலான் மனைவியின் பெருமையைக் குலைத்து அபராதம் இழைத்துவிட்டாய் என்று இராமன் வாலிமீது குற்றம் சாட்டுகிறான்.

இவ்வாறு இராமனது வாதத்தை முடிக்கும்பொழுது, அவனை 'மனுநீதியான்' என்று கம்பன் குறிப்பிடுகிறான். இது சிறப்புமொழியா, குறிப்புமொழியா என்பதைத் தீர்மானிக்க இயலாமல் நாம் தடுமாறுகிறோம். நீதி சாஸ்திரம் என்பது நிலைபேறு உடையது அல்ல; பொதுமை உடையதும் அலல. அது ஒவ்வொரு சமுதாயத்தின் மரபுகளுக்கு இசைந்தவாறு, வேறுபட்டிருப்பது கண்கூடு. மேலும், சமுதாய ஏற்பாடு மாறுதல் அடையும்பொழுது, நீதிசாஸ்திரமும் மாறுதல் அடைகிறது. எனவே, கிஷ்கிந்தைச் சமுதாயத்தின் நீதிமுறை, இராமன் அறிந்து போற்றும் மனுநீதியிலிருந்து மாறுபட்டிருப்பதில் வியப்பு இல்லை. அந்தக் கிஷ்கிந்தையின் நீதிமுறையை உரைகல்லாகக் கொண்டே வாலியின் நடத்தையைக் கணிக்கவேண்டும். ஆனால் இதைச் செய்யாமல், மனுநீதியையே விவரித்துப் பேசி, வாலியின் வாதத்துக்குத் தகுந்த அமைதிகாட்டமுடியாமல் இராமன் தவிக்கிறான். இதைச் சுட்டவே, அவனை இங்கு மனுநீதியான் என்று கவிஞன் குறித்தனன் போலும்!

இராமன் கஜேந்திரனையும், ஜடாயுவையும் மேற்கோள் காட்டுகிறான். ஆனால் அவர்கள் எதற்கு மேற்கோள் என்பது விளங்கவில்லை. அவர்கள் மனுநீதியைப் பற்றுக்கோடாகக் கொண்டு மணவினை புரிந்து வாழ்ந்தனர் என்பதற்குச் சான்று இல்லை.

ஒருத்தி ஒருவனுக்கே உரிமையாகி வாழும் கற்பு நெறிக்கு உரிய சமுதாயத்தில்தான் பிறன்மனை நயத்தல் பாவம் என்ற கருத்துத் தோன்றமுடியும். வாலியின் மனைவியான தாரை கற்பின் திண்மைக்குச் சான்றெனத் திகழ்ந்தபோதிலும் அபேதப் புணர்ச்சியை அறமாகக் கொண்ட கிஷ்கிந்தையில், தன் மனை-பிறன் மனை வேற்

றுமையே ஆழ வேரூன்றவில்லை; எனவே, வாலி அயலான் மனையின் மாட்சியை அழித்தான் என்ற குற்றச்சாட்டுக்கு இடமில்லை.

“நின்ற நன்னெறி நீ அறியா நெறி'' ஒன்றுமில்லாத தால், “நீ மனுநெறியிலிருந்து இழிந்திருக்கக்கூடாது'' என்று இராமன் வாதிப்பது விந்தையாக உள்ளது. நாக ரிகச் சமுதாயத்தின் பிறன்மனை நோக்காப் பேராண்மை அறத்தை அவன் அறிந்திருப்பதால், அதைக் கடைப்பிடிக் காதது கொலைத் தண்டனைக்குரிய குற்றமாகிவிடாது. நாகரிகச் சமுதாய நன்னெறியை அறிந்து போற்றிய வாலி, அதைப் பொதுவாகக் கிஷ்கிந்தை வாழ்விலும், சிறப்பாகத் தன் வாழ்விலும் அமல் நடத்தும் வளர்ச்சி யைப் பெறவில்லையென்று கூறுவது நியாயம். அது வாலியின் குறை; ஆனால் குற்றமாகாது; நிச்சயமாகக் கொலைத் தண்டனைக்குரிய குற்றமாகாது.

மேற்சொன்ன குறை வாலியுடையது மட்டுமல்ல; சுக்கிரீவனிடமும் உளது என்பதை முன்பே சுட்டிக் காட் டினோம். அனுமன்தான் அபேதப் புணர்ச்சி நெறியிடம் அருவருப்புக்கொண்டு, பிரம்மச்சாரியாக வாழ முனைந் தான் என்று சொல்லலாம்.

ஆக, இராமனது செய்கை ஒன்றாகியும் அதற்கு அவன் பலபடப் பேசும் நியாயம் முற்றிலும் வேறாகியும் அமைகிறதென்பதில் ஐயமில்லை. ஆனால் இதற்கு நேராக மாறுகூறாமல், வேறு ஒன்று கூறி வாதத்தைத் தொடர் கிறான் வாலி.

அவ்வுரை அமையக் கேட்ட
  அரிகுலத்து அரசு, மாண்ட
செவ்வியோய்! அனையது ஆகச்
  செருக்களத்து எதிர்த்துஎய் யாதே

---

அமையக் கேட்ட-பொருந்தக் கேட்ட. அரி-குரங்கு. மாண்ட-மாட்சிமைப்பட்ட. அனையதுஆக-அப்படியானால். செரு-போர். வெவ்விய-கொடிய. புளிஞன்-வேடன். விலங் கியே-விலகியே.

**வெவ்விய புளிஞர் என்ன**
**விலங்கியே மறைந்து வில்லால்**
**எவ்வியது என்னை? என்றான்;**
**இலக்குவன் இயம்ப லுற்றான்**

"நான் கொலைத் தண்டனைக்குரிய குற்றம் இழைத்தவன் என்று (வாதத்துக்கு) ஏற்றுக்கொண்டாலும், நீ களத்தில் நேரில் தோன்றி அம்பு எய்யாமல், கொடிய வேடரைப்போல் மறைந்துநின்று பகழி தொடுத்தது என்ன காரணத்தாலோ?" என்று வாலி வினவுகிறான்.

இந்தக் கேள்வியைக் கேட்டவுடன் இராமன் வாயிழந்து நிற்கிறான். எனவே, 'உடுக்கை இழந்தவன் கை போல ஆங்கே' இலக்குவன் இடைவந்து விடை பகர்கிறான்.

சிறிது நேரம் முன்னர்தான், வாலியும் சுக்கிரீவனும் மல்லமர் நிகழ்த்தியபொழுது "தமையனைக் கொல்வதற்குக் கூற்றுவனைக் கொணர்ந்திருக்கும் தம்பியை எப்படி நம்புவது?" என்று இலக்குவன் வினவினான். இளையவனின் துடுக்குக் கேள்வியைக் கேட்ட இராமனுக்கு வெடுக்கென்று கோபம் வந்தது. "இப் பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?" என்று கூறி அவன் வாயை அடக்கினான். தந்தையின் வாய்மையைக் காப்பதற்காகக் கானகம் ஏகியுள்ள அதே இராமன், "உன்னை விலங்கு என்று கொள்ளேன்" என்று இப்பொழுது வாலியிடம் பேசி அவனது வாயை அடக்க முயன்றான். இந்த முரணைச் சுட்டிச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி சத்தியம் வளைந்து கொடுக்குமா என்று இராமனைக் கேட்டு, அவனை வாயிழக்கச் செய்யும் வாய்ப்பு இளையவனுக்குக் கிட்டியது. ஆனால் அண்ணன் மீது அளவில்லாத அன்புகொண்ட அருமைத் தம்பி அதைப் பயன்படுத்தவில்லை. மேலும், "என்னை விலங்கென்று கொள்ளாதபொழுது, வெவ்விய வேடனைப்போல் மறைந்துநின்று கொன்றது ஏன்? செவ்வியோய்!" என்று கேட்டு இராமன் எதிர்மாற்றம் கூற முடியாமல் திகைக்கச் செய்து, வாதப் போரில் வாலி

வெற்றி அடைவதைக் கண்டு இலக்குவன், புனைந்துரை புகன்று அண்ணனைக் காக்க விரைகிறான். இராமன்பால் அவனுக்கு உள்ள அன்பு அத்தகையது!

முன்புநின் தம்பி வந்து
சரண்புக, முறையி லோயைத்
தென்புலத்து உய்ப்பன் என்று
செப்பினன்; செருவில் நீயும்
அன்பினை உயிருக்கு ஆகி
அடைக்கலம் யானும் என்றி
என்பது கருதி அண்ணன்
மறைந்துநின்று எய்தது என்றான்

"உனது தம்பி முதலில் வந்து அடைக்கலம் புகுந்தான். அப்பொழுது உன்னைக் கொல்வதாக இராமன் வாக்களித்துவிட்டான். களத்தில் நேர்எதிர் தோன்றினால், இராமபாணத்தால் இன்னுயிரை இழப்பது உறுதி என்பதை உணர்ந்த நீ, உயிர் அஞ்சி வந்து தஞ்சம் அடைவாய்! அப்பொழுது, சுக்கிரீவனுக்குக் கொடுத்த வாக்குறுதி நிறைவேறாமல் போய்விடுமென்று கருதி, இராமன் அயல் நின்று பகழி ஏவினான்" என்பது இலக்குவனின் சமாதானம்.

இது பேதையின் வாதமாகும். தஞ்சம் புகுந்தவனுக்குத் தண்ணளி காட்டுவது ஒன்று; அவனது பேச்சை நம்பி, அவனது சத்துருவைக் கொல்வதாக வாக்குறுதி அளிப்பது இன்னொன்று. முந்தைய செயலைச் செய்வது வீரனுக்குப் பெருமை. பிந்தைய செயலைச் செய்வது நீதிக்கு இழுக்கு. இரண்டையும் சேர்த்துக் குழப்பிப் போலிச் சமாதானம் பகர்கின்றான் இளையவன்.

கிஷ்கிந்தை வந்தடைந்த இராமனை முதலில் வாலி சந்தித்தானென்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது

---

முறையிலோய்-முறைதவறி நடந்தவன். தென்புலம்-யமலோகம். உய்ப்பன்-அனுப்புவன். அன்பினை உயிருக்கு ஆகி-உயிர்மீது ஆசைகொண்டு.

அவன் இராமனைத் தொழுது, மாயாவியை மல்லமரில் அழிக்க, தான் பாதலம் சென்ற சமயம், தனக்குத் தம்பி துரோகம் செய்தானென்று விவரித்துக் கூறித் தண்டனையிலிருந்து தப்பி ஓடிச் சாபக்காப்பு உடைய வரையில் பதுங்கி வாழும் தம்பியைக் கொன்று நீதியை நிலைநாட்ட வேண்டுமென்று இரந்தான் என்றால், இராமன் அதற்கு இணங்கியிருப்பான் அல்லவா? பரிதி மகனது பேச்சையும் அவனைச் சார்ந்தவனான அனுமனது சான்றையும் கொண்டு வாலியை யாதும் வினவாமல், வாலியைக் கொல்லக் கருதியவன், வாலியின் பேச்சைக் கேட்டுப் பகலவன் மைந்தனைக கொல்லத் துணியான் என்று எவர் தான் இயம்பமுடியும்? அப்பொழுது, தான் போர்முகம் தோன்றினால் சுக்கிரீவன் சரண் அடையலாமென்றும், அதனால் தஞ்சமடைந்தவனைக் கொல்லலாகாதென்ற தருமமும், வாலிக்கு அளித்த வாக்கை நிறைவேற்ற வேண்டுமென்ற தருமமும் முரண்பட்டு நின்று தரும சங்கடத்தைத் தோற்றுவிக்குமென்றும் அஞ்சி, இராமன் மறைவிடத்தில் நின்று சுக்கிரீவன் மீது பகழி ஏவினால், இலக்குவனது கொள்கைப்படி அது நியாயமாகும் அல்லவா? இந்த உதாரணத்திலிருந்து இலக்குவனது வாதத்தின் பேதைமை வெள்ளிடைமலையாக விளங்கும்.

உண்மையில் இலக்குவன் பேதையும் அல்ல; புல்லறிவாளனும் அல்ல; அவன் வாலிவதையை நியாயம் எனக் கருதியவனும் அல்ல. வாலியை வதை செய்வது அநீதி என்று இவனே அண்ணனிடம் கழறினான் என்பதை நாம் அறிவோம். எவ்வகையிலேனும் அண்ணனைக் காத்தல் வேண்டுமென்ற ஆவலினால்தான் அவன் இவ்வாறு பேசுகின்றான்.

வாய் இழந்து நிற்கும் இராமன்; ஒவ்வாக் கொள்கையை எடுத்து இயம்பும் இலக்குவன்; இருவரையும் வாலி நோக்குகிறான். இனி இவர்களிடம் வாதித்துப் பயனில்லை என்பதை உணர்கின்றான். குற்றத்தை மறைக்கக் குதர்க்கம் செய்யும் இராம-இலக்குவர்பால் அவனுக்குப் பரிவே மிகுதியாகப் பெருகுகின்றது. எனவே அவனது

சினமும், தாபமும் நீங்குகின்றன. அமைதி கண்ட செம்மை மனம், இராமனைப்பற்றிச் செவிவழியே கேட்டறிந்த வரலாற்றையெல்லாம் நினைவுகொள்ளுகிறது.

கவிக்குலத் தரசும் அன்ன
கட்டுரை கருத்திற் கொண்டான்
அவியுறு மனத்த னாகி
அறத்திறன் அழியச் செய்யான்
புவியுடை அண்ணல் என்ன
எண்ணினன் பொருந்த முன்னே
செவியுறு கேள்விச் செல்வன்
சென்னியின் இறைஞ்சிச் சொன்னான்

இலக்குவன் புனைந்துரைத்த பொருந்தா வார்த்தை கேட்டு வாலி தெளிவு பெற்றான் என்று பொருள் கொள்வது எவ்வகையிலும் ஏற்புடைத்தாகாது. ஏனெனில், கம்பனது வாலி அத்துணை அறிவிலி அல்ல. அவனது வாதமுறையே நுண்மதிக்குச் சான்று பகர்கின்றது. இலக்குவன் இயம்பியது புனைந்துரை என்பதை உணர்த்தவே, கம்பன் அதனைக் கட்டுரையென்று குறிப்பிடுகிறான். அவ்வாறே அதனைக் கட்டுரையென்றே கூர்த்த மதிக்கு உரிய வாலியும் கருத்தில் கொண்டிருத்தல் வேண்டும். வாதத்தின் பெயரால் பிடிவாதம் செய்யும் இராமஇலக்குவரிடம் கனிவு உண்டாகவே, அவனது மனம் அமைதி அடைகின்றது. அந்த அமைதியில் தெளிந்த அறிவு பிறக்கிறது. எனவே முன்னால் கரந்திருந்து கொன்ற குற்றத்தைப் பெரிதுபடுத்தி, 'மன்னற வேலியைப் படுத்தாய்' என்ற

---

கவி-குரங்கு. அன்ன-அந்த. அவியுறு-அமைதியடைந்த. கட்டுரை-உறுதி வாசகம் அல்லது கட்டுக்கதை. (இங்கு உறுதிவாசகம் எனப் பொருள்கொள்வது வலிந்து உரை காண்பதாகும். கட்டுக்கதை என்றே உரை கொள்ளவேண்டும்.) அறத்திறன்-அறத்தின் உறுதிநிலை. அண்ணல்-தலைவன் (இராமன்). செவியுறுதல்-கேட்டல். சென்னி-தலை.

தூய சினத்துடன் குற்றம்சாட்டிய வாலியே இப்பொழுது, 'புவியுடை அண்ணல் அறத்திறன் அழியச் செய்யான்' என்ற முடிவுக்கு வருகிறான். செல்வத்துட் செல்வமான கேள்விச்செல்வம் உடையவன் அவன். எனவே அவன் இராமனைப்பற்றி நன்கறிந்திருக்கிறான். (தாரையிடம் அவன் நிகழ்த்திய உரையும் இதை உறுதிசெய்கின்றது.) எனவேதான், தெளிந்த மனத்துடன் சிந்தனை செய்த கேள்விச்செல்வனான வாலி, 'அண்ணல் அறத்திறன் அழியச் செய்யான்' என்று முடிவுசெய்கிறான். அண்ணலின் நிறைகுறைகளைத் தொகுத்து மதிப்பிடுங்கால் அவன் தனது நிறைகுறைகளையும் உணர்ந்துகொள்கிறான். எனவே, இராமனுக்குத் தலைவணங்கித் தன் குற்றம் பொறுக்கவேண்டுமென்று வேண்டுகிறான்.

தாயென உயிர்க்கு நல்கித்
  தருமமும் தகவும் சால்பும்
நீயென நின்ற நம்பி
  நெடிதுநீ நோக்கு நோன்மை
நாயென நின்ற எம்மால்
  நவையற உணர லாமே
தீயன பொறுத்தி என்றான்
  சிறியன சிந்தியா தான்

"தாய்மை, தருமம், தகவு, நிறைவு ஆகியவற்றின் நிறைகுடமாக விளங்கும் நம்பியே!" என்று வாலி இராமனை, விளிக்கிறான். "நெடிது நோக்கும் உன் நோன்மையை எம்போன்றவரால் உணரமுடியாது; உணர்ந்தாலும் ஐயம் திரிபு இல்லாமல் உணரமுடியாது" என்று கூறித் தன் குற்றங்களுக்குக் காரணம் காட்டுகிறான். இந்த விளக்கத்தின் அடிப்படையில் 'தீயன பொறுத்தி' என்ற வேண்டுகோளை விடுக்கிறான்.

---

நல்கி-அருள்செய்து. தகவு-நடுவுநிலைமை. சால்பு-நிறைவு. நம்பி-ஆடவரில் சிறந்தவன். நெடிது நோக்கு நோன்மை-தீர்க்கதரிசன வல்லமை. நவை-குற்றம்.

'தீயன பொறுத்தி' என்று உரைக்கும்பொழுது, வாலி தான் இழைத்த தீமைகளென்று எவற்றைக் குறிப்பிடுகிருன்? தம்பியின் மனைவியைக் கவர்ந்தானென்று இராமன் குற்றம் சாட்டியதை மறுத்துப் பேசிய வாலி, இப்பொழுது மனம் மாறி அது குற்றம் என்பதை ஏற்றுக் கொள்கின்ருனு? அவ்வாறு ஆயின் அதற்கும் இராமனது தீர்க்கதரிசன ஆற்றலை வாலி உணரமுடியாமைக்கும் என்ன தொடர்பு? இராமன் நெடிது நோக்கும் நோன்மையை உடையவன் என்பதை உணராத நிலையிலும், அயலான் மனைவியை நயத்தல் பாவம் என்பதை ஒருவன் புரிந்துகொள்ளமுடியாதா? எனவே தீயன பொறுத்தி என்று குறிப்பிடும்பொழுது வாலி கருதும் பொருள் வேறு என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

கடன்என்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு

என்றபடி சான்ரோர் தீச்செயல்களைத் தீயினும் கொடியவையாகக் கருதி வெறுத்து ஒதுக்கினுல் போதாது; நற்காரியங்கள் அனைத்தையும் தமது கடமைகளாக மேற்கொள்ளவேண்டும். ஆனுல் வாலி இந்த அறத்திலிருந்து திறம்பிவிட்டான். வரம்பில்லாத ஆற்றலுக்கு உடைய வாலி, இராவணனைப் போலத் தீங்கு செய்யவில்லை என்பது உண்மை. ஆனுல் உலகைப் பிடித்த பீடையாக விருந்து கேடுசூழ்ந்த இராவணுதியருக்கு அவன் இறுதி தேடவில்லை. இரக்கமில்லாத அரக்கரின் கொடுமைகளால் துன்புற்றுத் தவிக்கும் மக்களை ரட்சிப்பதைவிடப் பெரிய நற்காரியம் ஏதும் இல்லை. அந்தப் பணிக்குத் தேவையான ஆற்றலும் வாலியிடம் இருந்தது. எனினும் அதைப்பற்றி அவன் கருதவேயில்லை. மேலும் இராம சேனைக்குத் தலைவனுகவிருந்து அறத்தின் வெற்றிக்காகப் பாடுபடவேண்டிய வாலி, இராவணனுடன் கூடி அக்கினி சாட்சியாக, நட்புக் கொண்டுவிட்டான். "சிற்றினம் அஞ்சும் பெருமை" என்பதை மறந்துவிட்டான். இராவண வதம் என்ற இராம காரியத்துக்குக் கேடு சூழ்ந்து விட்டான். நாளைக்கு இராம-இராவணப் போர் நிகழும்

பொழுது வாலி இராவணன் பக்கம் நின்று, இராமனையே எதிர்த்துப் போராடவேண்டும் அல்லது இராவணனைத் தோழனாக வரித்தபொழுது கொடுத்த வாக்குறுதியை மீறவேண்டும். இந்த உண்மைகளையெல்லாம் இப்பொழுது வாலி நினைவுகொள்கிறான். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு எண்ணித் துணிந்தே இராமன் தன்னை வதம் செய்ததாக அவன் எண்ணுகிறான். எனவே நெடிது நோக்கும் அவனது நோன்மையைப் போற்றுகின்றான். இராவணனைத் துணைவனாகக் கொண்ட தன் குற்றத்தைப் பொறுத்தருளும்படி வேண்டுகிறான்.

அறத்தின் வெற்றிக்காகத் தன் வாழ்வை அர்ப்பணித்துக்கொண்டிருக்கும் தலைவன் இராமன். எனவே, இராவண வதம் அவனது வாழ்க்கைப் பணியாக நிற்கிறது. இந்தக் குறிக்கோளைக் கொண்ட தலைவன், துணைவலியைப் பெருக்கிக்கொள்ளவும், மாற்றான் வலியைக் குறைக்கவும் இமை சோரா விழிப்புடன் செயலாற்ற வேண்டும். எனவே, வரம்பில்லாத ஆற்றலுக்கு உரிய வாலி இராவணன் கட்சியில் நின்று சமர் செய்வதைத் தவிர்க்கவேண்டும். வாலி வதத்தின் மூலமே இது சாத்தியமாகும். மேலும் சுக்கிரீவன் முடிசூடினால்தான், எழுபது வெள்ளம் வானரப்படையும் இராமனது துணைவலி ஆகும். இவ்வாறாக, வாலி தன்மீது வாளி எய்த இராமன் செயலை நியாயப்படுத்திக் கொள்கிறான். ஆணவம் மிகுந்து, அதிகார வெறிக்கு இரையாகி, அனைவரையும் துன்புறுத்திக்கொண்டிருக்கும் இராவணனைத் துணைவனாக வரித்து இராம காரியத்துக்கு நாசம் தேடிய குற்றத்துக்குக் கொலைத் தண்டனை முற்றிலும் பொருந்தும் என வாலி உன்னி ஓர்கின்றான்.

இந்த ஞானம் ஏற்பட்ட பின்பு, கரந்திருந்து கொன்ற காரியத்துக்கு அமைதி தேடுவது கடினமல்ல. நேர்நின்று எதிர்ப்பவரது பலத்தில் பாதி தன்னைச் சேரவேண்டுமென்று வரம் கேட்டுப் பெற்றவன் வாலி. எதிரி பலத்தில் பாதியும் தன் பலமும் சேர்வதால் எவரையும் வெல்லலாம் என்று கருதியிருந்தான் என்பதைத் தாரை

யிடம் அவன் பேசியதில் தெளிவாகக் காண்கிறோம். வரபலம் பெற்றவன் அறம் திறம்பினால், அவனை எதிர்த்து விதிவிலக்கான முறையை ஆள்வதைத் தவிர்க்கமுடியாது. இரணியன் இரவிலும், பகலிலும் இறவாமலிருக்க வரம் பெற்றான்; மனிதராலும் விலங்குகளாலும் மாளாதிருக்கவும் வரம் பெற்றான். எனவே அவன் தருமத்தைத் திரணமாகக் கருதி மிதித்துத் துவைத்துச் செம்மையெல்லாம் பாழாக்கியபொழுது, பகலும், இரவும் சந்திக்கும் அஸ்தமன வேளையில் மானுட மடங்கலால் வதம் செய்யப்பட்டான். அதுபோலவே, நேர்எதிர் நின்றவன் பலத்தில் பாதியைப் பெறும் வரபலத்தை உடைய வாலியைக் கொல்வதற்கு இராமன் மறைவிடம் தேடவேண்டியதாயிற்று!

இன்னொன்று. வரபலத்தை அழிக்கும் திறன் இராமனுக்கு உண்டு என்று வாதிக்கலாம். இராமனது போர்த் திறமையைக் கண்டு வியந்த இராவணன்,

சிவனோ அல்லன்; நான்முகன்
அல்லன்; திருமாலாம்
அவனோ அல்லன்; மெய்வர
மெல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னில் செய்து
முடிக்கும் தரன் அல்லன்;
இவனோ தானவ் வேத
முதற்கா ரணன்என்றான்

"மெய் வரமெல்லாம் அடுகின்றான்" என்று இராவணனே கூறுவதால், வாலியின் வரபலத்தையும் இராமனால் அழித்திருக்கமுடியுமென்றும், மறைவிடம் நாடியிருக்கத் தேவையில்லையென்றும் வாதிக்கலாம். ஆனால் இராவணவதமே எளிதில் கைகூடவில்லை என்பதை நாம் மறக்கக் கூடாது. இராவணன் அம்புமாரி பொழிந்தபொழுது, "என்னே திண்போர்த் தொழில்" என்று ஆனையின் உரி போர்த்தவனான சிவனே திகைத்தான். ஒரு சமயம்,

இராமன் உடல் முழுவதும் மூடும்படி இராவணன் கொடுங்கணைகள் எய்தான்; இராமனுக்கு இறுதி நேர்ந்த தென்றே இயற்கை வருந்தியது: இமையோர் அஞ்சினர். பின், இராம கணைகளால் மூர்ச்சையடைந்த இராவணன், மூர்ச்சை தெளிந்தபின், மும்மடங்கு வலுவுடன் "வேறோர் வாளரக்கன் என"ப் போர்புரிந்தான். இராவண வதமே இத்துணைக் கடினமானதாயிருந்ததெனில், இராவணனைத் தன் வாலிற் கட்டி வலியடக்கிய வாலியின் வதம் எத்துணைச் சிரமமாயிருந்திருக்கவேண்டும்! அதற்குத் தேவையான நேரமும் இல்லை. சிறைப்பட்டிருக்கும் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கவேண்டும். விடுதலை கிடைக்கும் என்ற நம்பிக்கையை அவள் இழப்பதற்கு முன், அவளைக் காணவேண்டும். இராவண வதத்தை முடித்துவிட்டுக் குறித்தநேரத்தில் பரதன் நோன்பிருக்கும் நந்திக் கிராமத்தை அடையவேண்டும். இந்தக் கால வரம்புகளைக் கணக்கில் எடுத்துப் பார்த்தால், எதிர்நின்று போர்புரிந்து வதம் செய்வதற்கு நேரம் இல்லை என்பது புலப்படும். இவ்வாறெல்லாம் வாலி நுணுக்கமாக ஆராய்ந்தானு என்பதை நாம் அறியோம். ஆயினும், கரந்திருந்து கொல்வினை சூழ்ந்த செயல், மன்னறவேலியை அழிக்கும் பாதகம் என்ற வாதத்தின் தவறை அவன் உணர்ந்துவிட்டான். மன்னறவேலியை அழிக்கும் இராவணுதியருக்கு இறுதி தேடுவதற்கே, இராமன் தன்னை வதம் செய்தான் என்று எண்ணித் துணிந்துவிட்டான். எனவே "அண்ணல் அறத்திறன் அழியச் செய்யான்" என்று கூறுகிறுன். நெடிது நோக்கும் தலைவனது நோன்மையைப் பாராட்டுகிறுன். சிற்றினம் சேர்ந்த தன் தீய செயலுக்கு வருந்துகிறுன்.

இந்தச் சீர்மையை நோக்கித்தான், 'சிறியன சிந்தியாதான்' என்று வாலியைக் கம்பன் ஈண்டுக் குறிப்பிடுகின்றுன். தவறுவது இயல்பு. ஆனல் தன் குற்றத்தைத் தானே கண்டு, தெளிவு பெற்று, செய்த குற்றத்துக்காக வருந்துவதே சான்றேனின் சிறப்பு. அற்ப சிந்தனை உடையவர்க்கு அந்தச் சிறப்புக் கிட்டாது. இராமன் தன்னைக் கொன்றுன் என்ற ஒரு உண்மையிலேயே

கருத்தூன்றிக் கவல்கின்றவனாக வாலி இருந்திருந்தால், அவன் தன் குறையை உணர்ந்திருக்கமாட்டான். சிறுமை யான சிந்தனைகளுக்கு மறந்தும் இடம் கொடாதவன் வாலி. எனவே, தொடக்கத்திலிருந்தே அவனிடம் தன் னிரக்கம் தோன்றவேயில்லை. இராமனது மேன்மையை எண்ணி, அவன் செய்த தவறுக்காக இரங்கும் வகையி லேயே அவனது வாதம் அமைந்தது. வாக்குவாதத்தில் இராம இலக்குவர் மனம்விட்டுப் பேசாதபொழுது, அவர்களது விதண்டாவாதத்தைக் கண்டு வெகுளி கொள் ளும் சிறுமைக்கு இடம் கொடாமல், குதர்க்கம் செய்த பெருமக்களைப் பரிவுடன் நோக்கித் தெளிவு பெறுகின் ருன். அப்பொழுதே, இராவணனைத் துணைவனாகக் கொண்ட தன் குற்றத்தை உணர்கிருன். இந்தப் பெருந்தன்மையைக் கண்டு மனமுவந்த கம்பன், இவனைச் 'சிறியன சிந்தியாதான்' என்று போற்றுகின்ருன்.

அறவழி பிழையாது நின்று செயற்கரிய சாதிக்கும் பெரியோரைத் தெய்வமாகக் கருதுவது மரபு. அவ்வாறே வாலியும் இராமனைத் தெய்வமாகப் போற்றுகிருன். 'ஏவுகூர் வாளியால்' ஆவி போகும் வேளையில் அறிவு தந்து அருளியதற்காக இராமனைப் பாராட்டுகிருன். சான்றோனாகத் திகழ்ந்த வாலி, சிற்றினம் சேரும் குற்றத் தைப் புரிந்தான். அதை இராமனது வாளியே அவனுக்கு உணர்த்தியது. இவ்வாறு தன் மருளை நீக்கிய அருளின் ஆழியைப் போற்றி,

மூவர் நீ; முதல்வன் நீ;
 முற்றும் நீ; மற்றும் நீ;
பாவம் நீ; தருமம் நீ;
 பகையும் நீ; உறவும் நீ

என்று துதி செய்கிருன். இராமனைப் பரம்பொருளாகவே கண்டு பேசுகிருன் வாலி.

புரமெலாம் எரிசெய்தோன் முதலினோர் பொருவிலா
வரமெலாம் உருவிஎன் வசையிலா வலிமைசால்

உரமெலாம் உருவிஎன் உயிரெலாம் நுகரும்நின்
சரமெலாம் பிறிதுவேறு உளதரோ தருமமே

என்று வியக்கிருன்.

இராமனது அம்பு தருமம் தவறியவர்களைத் தவருது தண்டிப்பதொன்றையே கருமமாகக் கொண்டது. எனவே அந்தப் பகழியையே தருமத்தின் வடிவமாகக் காண்கின்ருன். தன் உயிரைத் தின்றுகொண்டிருக்கிற அம்பு தருமத்தின் வடிவமே என்பதைக் கண்டு உணரும் அளவுக்குத் தன்னலம் கடந்து நிற்கிருன் வாலி.

உண்டுஎனும் தருமமே உருவமாய் உடையநிற்
கண்டுகொண் டேன்இனிக் காணஎன் கடவெனே?
பண்டொடுஇன்று அளவுமே எனபெரும் பழவினைத்
தண்டமே அடியனேற்கு உறுபதம் தருவதே

என்று பேசுகின்ருன். "மன்னறத்தைத் தன் வடிவமாக உடையவனே" என்று விளித்துத் தன் பரவசநிலையைப் புலப்படுத்துகின்ருன். இராமனைக் கண்டபின் இனிக் காணவேண்டுவது யாதுமில்லையென்று செப்பித் தன் காட்சியின் மாட்சியைப் போற்றிப் பரவசமடைகிருன்.

---

புரம் எலாம்-திரிபுரங்களை. எரி செய்தோன்-எரித்த சிவன். பொருவிலா-ஒப்பில்லாத. நுகரும்-உட்கொண்ட. சரம்—அம்பு.

உண்டு எனும்-அழிவற்றதென்று கூறப்படும். இனிக் காண என் கடவெனே-இனி எந்தப் பொருளைக் காண வேண்டும்? (ஒன்றையுமில்லை). தண்டமே-தண்டனையே. உறுபதம்-நல்ல பதவி (விமோசனம்). பழவினை-இங்குப் பழைய செயல் என்பதையே குறிக்கும். முற்பிறப்பு வினை என்ற சிறப்புப் பொருள் இங்கு பொருந்தாது. ஏனெனில், வாலி இந்திரனது அவதாரம் என்பதும் அவன் முன்னல் பூவுலகப் பிறவி எடுத்தவனல்ல என்பதும் கதையின் குறிப்பு ஆகும்.

(இராவணனோடு நட்புக் கொண்ட) பழவினைக்குத் தகுந்த தண்டனையாக அமைந்த செயலே தனக்கு வீடுபேற்றை அளித்துவிட்டதென்று உவந்து கொண்டாடுகிறான். தன்னைக் கொல்விக்க இராமனை இட்டுவந்த தம்பி தனக்கு உபகாரம் செய்ததாகவே எண்ணி,

வெற்றரசு எய்தி எம்பி
விட்டரசு எனக்கு விட்டான்

என்று கூறிப் பூரிப்படைகிறான். நாமும் அவனது பெருந் தன்மையை எண்ணி எண்ணிப் பூரிக்கிறோம்.

# சான்ருண்மையைப் புதுக்கிய செம்மல்

குற்றம் புரியாத வாழ்வே நல்லோரின் லட்சியம். நவையற்றவர் யாருமிலர் என்ருலும், பழியை அஞ்சும் பெரியோர் தினையளவு குற்றம் செய்தாலும் அதைப் பனைத்துணையாகக் கருதி வருந்தித் திருந்துவர். தவிர, தம் குற்றத்தை உணராமல் பிறர்குற்றம் கடிதல் பிழை என்பதே சான்ருேர் கருத்து. எனவேதான்,

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு?

என்று வள்ளுவப் பேராசான் கூறினர்.

தன்குற்றம் கடிந்தவனே பிறர்குற்றத்தைக் காண வல்லவன் என்பது இந்தக் குறளின் உட்கருத்து. வாலி தன்குற்றத்தைக் கண்டுவிட்டான். எனவே, இராமனிடமும், சுக்கிரீவனிடமும் உள்ள குற்றங்களை உணர்வது அவனுக்குச் சாத்தியமாகிறது.

வாலி இராமனை "மூவர் நீ, முதல்வன் நீ" என்று புகழ்வது உண்மை. தருமமே உருவமாய் உடையவன் என்று அவனைப் போற்றுவதும் உண்மை. ஆனுல் இந்தப் புகழ்ச்சியில் இராமனது குறையை அவன் மறந்துவிடவில்லை. சீதையை இழந்துநிற்கும் சூழ்நிலையில், இராமன் ஆரத்திர யோசிக்காது அவசரப்பட்டுக் காரியம் செய்யக்கூடும் என்பதை வாலி அறிந்திருக்கிருன். மறுபுறத்தில் தன் தம்பி மதுவுண்டு மனம் திரிந்து தீவினை புரியக்கூடுமென்பதையும் அவன் தேர்ந்து தெளிந்திருக்கிருன். தம்பியின் குறையும் தலைவனது குறையுமாகச் சேர்ந்து, தம்பியின் உயிருக்கு உலை வைத்துவிடுமோவென்று அவன் அஞ்சுகிருன். எனவே,

ஓவிய உருவ நாயேன்!
உளதொன்று பெறுவது உன்பால்,
பூவியல் நறவம் மாந்திப்
புந்திவேறு உற்ற போது,
தீவினை இயற்றும் ஏனும்
எம்பிமேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும்
கூற்றினை ஏவல்! என்ருன்

"என் தம்பி மது அருந்துவதைப் பழக்கமாகக் கொண்டவன். அவன் குடிவெறியில் அறிவு தடுமாறித் தீவினை இயற்றினுல், அவனை வெகுண்டு, என்மீது ஏவிய பகழியை ஏவிவிடாதே!" என்று வேண்டுகிருன் வாலி. இங்கு வாலியின் நெடிது நோக்குந் திறனைக் கண்டு பூரிக்கிரேம். சுக்கிரீவன் முடிசூடியவுடன் கிட்கிந்தை செல்லும்பொழுது, நான்கு மாதம் கழிந்த அளவில் சேனையுடன் திரும்புவதாக வாக்களித்துச் செல்வான். ஆனுல் மதுவின்பத்திலும், மாதர் முயக்கிலும் மதிமயங்கித் தவணை தவறுவான். அப்பொழுது இராமன் வெகுண்டு,

இம்பர் நல்லறம் செய்ய எடுத்தவிற்
கொம்பும் உண்டுஅருங் கூற்றமும் உண்டு

என்றும் "வானரப் பேரும் மாளும்" என்றும் எச்சரிக்குமாறு கூறி, இலக்குவனைத் தூது அனுப்புவான். இவ்வாறு இராமன் வெகுளிகொண்டு தம்பியைத் தண்டித்துவிடக் கூடாதென்றே வாலி வருமுன் காப்போனுக வரம் வேண்டுகிருன். இராமனது நிறையுடன் அவனது குறையையும் தெளிவாக உணர்ந்திருக்கும் வாலியின் கூர்த்த மதி வியத்தற்குரியது. வாளி துளைக்கும் மரணவேதனை

---

பூவியல் நறவம்-மலரிலிருந்து எடுத்த மது. மாந்தி-குடித்து. புந்தி-புத்தி. பகழி என்னும் கூற்றினை-காலனைப் போல் தப்பாது கொல்லும் அம்பை. ஏவல்-செலுத்தாதே.

இம்பர்-இவ்வுலகத்தில். விற்கொம்பு-வில்லுத் தடி.

யால் வருந்தும்பொழுதும், தன்னைக் கொல்வித்த தம்பியின் நன்மையை நாடும் பெருந்தன்மை போற்றற்குரியது. தூய்மையின் மேன்மை இதனினும் உயர்தல் அரிது. இன்னொரு உயிர் இருந்தாலும் அதையும் இவன் தன் தம்பியின்பொருட்டுத் தியாகம் செய்வான்! இந்த வாசகத்தைக் கேட்டுச் சுக்கிரீவன் கண்ணீர் வெள்ளத்தைப் பெருக்கிக் கரைந்துருகியிருக்கவேண்டும்.

வாலியின் உயர்வான பேச்சைக் கேட்டு, இலக்குவன் சுக்கிரீவனை இகழ்வாக நோக்கினான் போலும்! "இத்தகைய அண்ணனைக் கொல்வித்தாயே! பாவி!" என்று சபிக்கும் தோரணையில் இளையவன் பார்த்ததை வாலி கண்டான் போலும்! எனவே, "நாயேன் உளது ஒன்று பெறுவது உன்பால்" என்று தொடங்கி ஒரு வரம் கேட்கத் துணிந்த வாலி, இப்பொழுது இன்னொரு வரமும் கேட்கிறான்.

இன்னும்ஒன்று இரப்பது உண்டால்
எம்பியை உம்பி மார்கள்
தன்முனைக் கொல்வித் தானென்று
இகழ்வரேல் தடுத்தி தக்கோய்
முன்முனே மொழிந்தாய் அன்றே
இவன்குறை முடிப்பது ஐயா!
பின்னவன் வினையின் செய்கை
அதனையும் பிழைக்க லாமோ?

"அண்ணனைக் கொல்வதற்குக் கூற்றுவனைக் கொணர்ந்த கொடியன்" என்று இலக்குவன் சுக்கிரீவனை இகழ்ந்து இராமனிடம் பேசினான் அல்லவா? அதற்குப் பதிலாக அமைந்திருக்கிறது வாலியின் வாசகம். "முதலில் என்னைக் கொல்வதாக நீ வாக்குக் கொடுத்தாய். அதன் பின் என்னைக் கொல்வித்த பிழை என் தம்பியைச்

---

உம்பிமார்கள்-உன் தம்பிமார்கள். தன்முனை-தன் தமையனை. முனே-முன்னமே.

சாராது. உடன்பட்ட பின்பு அவனைப் பழிசொல்வது அடுக்காது'' என்று கூறுகிருன் வாலி.

"இராமா! உன் தம்பிமார்கள் கோசலத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். நல்லறம் நிலைகொண்ட சமுதாயத்தின் தலைவர்கள்; சிற்றத்தை ஒழித்த சிந்தைக்கு உரிய செம்மல்கள். எனவே, அவர்களுக்கு எங்கள் சண்டை புரியாது. நாங்கள் உடன்பிறப்புப் பாசத்தையும் மறந்து, ஒருவரையொருவர் ஜன்ம சத்குருவாகக் கருதும் சண்டாளர்களாக இருந்தோம் என்று அவர்கள் எளிதில் முடிவுசெய்யலாம். என் அரசைக் கவர்வதற்காக என்னைக் கொல்வித்தான் என்று அவர்கள் என் தம்பியை இகழலாம். உண்மை அதுவல்ல. எங்களுக்கிடையே நீங்காத அன்பு உண்டு. ஆயினும் நாங்கள் மானிகள். எனவே ஆய்ந்தோய்ந்து பாராமல் ஐயம் கொள்வதும் சினந்து சிறுவதும் எங்களது இயல்பாக உள்ளது. இவ்வாறுதான் நான் என் தம்பியைப் பகைவனுக்கிக்கொண்டேன். இதைப் பரிவுடன் புரிந்துகொள்ளும் பான்மை இல்லாமல், உன் தம்பிகள் என் தம்பியை இகழ்ந்தால், நீ அதைத் தடுக்கவேண்டும். பார்க்கப்போனுல், என்னைக் கொன்று அவனது குறையைத் தீர்த்துவைப்பதற்கு நீயே முன்வந்தாய். இவ்வாறு நீ வலிய வந்து உடன்பட்டுக் காரியம் செய்தபின்பு, என் தம்பி குற்றவாளியாகமாட்டான் என்பது ஒருதலை'' என்று கூறுவதுபோல வாலியின் வாசகம் அமைந்திருக்கிறது.

தம்பியின் நலம் கருதி இரு வரங்களை வேண்டிய வாலி, மீண்டும் தலைவனைப் பற்றிச் சிந்திக்கிருன். தாரத்தை இழந்துநிற்கும் தலைவனுக்கு உதவி செய்ய இயலாதுபோயிற்றே என்று வருந்துகின்ருன்.

மற்றிலென் எனினும் மாய
  அரக்கனை வாலில் பற்றிக்
கொற்றவ நின்கண் தந்து
  குரக்கியல் தொழிலும் காட்டப்

பெற்றிலன். கடந்த சொல்லிப்
பயனிலை; பிரிதொன் றேனும்,
உற்றது செய்கென் றாலும்
உரியன்இவ் அனுமன் என்றான்

இராவணனை வாலில் கட்டிக்கொண்டுவரும் ஆற்றல் உடையவனாயிருந்தும், அந்த நற்பணியைச் செய்யமுடியாதபடி, விதி சதி செய்துவிட்டதே என்று வாலி வருந்துகிறான். எண்ணித் துணியாமல் இலங்கை வேந்தனாகிய சிற்றினம் சேர்ந்ததால் ஏற்பட்டுள்ள நிலையை நினைந்து உருகுகின்றான். அதேபொழுதில், தான் செய்யாதுபோன காரியத்தைச் சாதிப்பதற்குத் தேவையான ஆற்றல் அனுமனிடம் இருப்பதை எண்ணி ஆறுதல் கொள்கிறான்.

அனுமன்என் பவனை ஆழி
ஐய! நின் செய்ய செங்கைத்
தனுவென நினைதி; மற்றுஎன்
தம்பிநின் தம்பி யாக
நினைதி;ஓர் துணைவர் இன்றேர்
அனையவர் இலைநீ ஈண்டுஅவ்
வனிதையை நாடிக் கோடி;
வானிலும் உயர்ந்த தோளாய்!

சதி சூழ்ந்து தன்னைக் கொல்வித்த அனுமனைத் துதி செய்து பேசுகிறான் வாலி. வளைத்தபடி வளையும் என்னும் தன்மையிலும், உறுதித்துணையாய் நின்று அரிய வெற்றிகளைப் பெற்றுத் தரும் ஆற்றலை உடையது என்ற தன்மையிலும் கைத்தனுவைக் கருதி, அந்தத் தன்மைகளில் அனுமன் கோதண்டத்துக்கு நிகராவான் என்று வாலி

---

மற்றிலென் எனினும்-வேறொரு பேருதவி எதனையும் செய்ய முடியாவிட்டாலும். பெற்றிலென்-(பாக்கியம்) பெருதவனாயினேன்.

ஆழிஐய-சக்கராயுதத்தை உடையவனே. தனு-வில். கோடி-பெறுவாய்.

பேசுகிருன். அனுமனைப் போற்றிக் கூறியபின், "என் தம்பி நின் தம்பி ஆக நினைதி'' என்று நேசபாசத்துடன் வேண்டிக்கொள்கிருன். அனும சுக்கிரீவரைப் போன்ற துணைவர் கிடைப்பது அரிது என்று கூறி "இனிச் சிதையைத் தேடிப் பெறுவாய்'' என்று செப்புகின்ருன்.

வாலி தன் மார்பிலிருந்து இராம பாணத்தைப் பறித்தபொழுது, குருதி வெள்ளம் பெருக்கெடுப்பதைக் கண்ட சுக்கிரீவன் ஆவி குலைந்து பூமியில் விழுந்தானல்லவா? அதன்பின் அவன் எழுந்திருக்கவேயில்லை. இப்பொழுது, இராமனிடம் உரைக்கவேண்டியதைக் கூறி முடித்த வாலி, தன் நீண்ட கரங்களால் தம்பியை வாரி எடுத்து அணைத்துக்கொள்கிருன். கண்ணழிய அழுது கொண்டிருக்கும் தம்பியிடம் "வருந்தலை'' என்று தேறுதல் கூறுகின்ருன். "உனக்கு உரைப்பது உறுதி ஒன்று உண்டு. அதைக் கேட்டு மனத்திற் கொண்டு நடப்பாயாக!'' என்ற பீடிகையுடன் தொடங்குகிருன்.

மறைகளும் முனிவர் யாரும்
  மலர்மிசை அயனும், மற்றைத்
துறைகளின் முடிவும் சொல்லும்
  துணிபொருள், துணிவில் தூக்கி
அறைகழல் இராமன் ஆகி,
  அறநெறி நிறுத்த வந்தது
இறைஒரு சங்கை இன்றி
  எண்ணுதி, எண்ணம் மிக்கோய்

"வேதங்களும் முனிவர்களும் கருதியுருகும் பரம்பொருளே தருமத்தை ரட்சிப்பதற்காகக் கோதண்டராமனுகக் காட்சியளிக்கிறது. இந்த உண்மையை உறுதியாக நம்பு'' என்று வாலி உபதேசிக்கிருன்.

---

மலர்மிசை அயன்-தாமரை மலர்மீது வாழ்கின்ற பிரமன். மற்றைத் துறைகளின் முடிவும்-இதர சாத்திரங்களின் முடிவும். துணிபொருள்-பரப்பிரம்மம். துணி வில்-(அம்பால் பகைவரைத்) துண்டிக்கும் வில். சங்கை-ஐயம்.

நிலையான வீடுபேற்றை நாடும் உயிரினங்கள் அனைத்தும் இராம நாமத்தைத் தாரக மந்திரமாகக் கொண்டு நாளும் ஓதுவதாகக் கூறி, இராமனது தெய்வத் தன்மையை மேலும் வலியுறுத்துகிறான். இராமனது தன்னேரில்லாச் சிறப்பை உணர்வதற்கு 'எற்கொன்ற வலியே சாலும் இதற்கொன்றும் ஏது வேண்டா' என்றும் எடுத்துரைக்கிறான். அத்தகைய இராமனுக்கு ஏவல் செய்வோர் முக்தி பெறுவது உறுதியென்பதை விளங்க வைக்கிறான். "ஊழே உதவினால் யாதே அரிது?" என்று வினவிவிட்டு, ஒருநிலைப்பட்ட சிந்தையுடன் இராமனுக்குத் தொண்டுபுரிந்து இம்மை மறுமை இன்பங்களைத் துய்க்குமாறு அறிவுறுத்துகிறான்.

மதவியல் குரக்குச் செய்கை
  மயர்வொடு மாற்றி, வள்ளல்
உதவியை உன்னி ஆவி
  உற்றிடத்து உதவு கிற்றி

என்று கேட்டுக்கொள்கிறான்.

குரங்கு இனத்துக்கு மதவு, மயர்வு ஆகிய இரண்டு ஊனங்கள் இருப்பதை இங்கு வாலி குறிப்பிடுகிறான். மதவு என்பது மடமையையும், மூர்க்கத்தையும் குறிக்கும்; மயர்வு என்பது மயக்கத்தைக் குறிக்கும். அறிவு வளராத இயற்கைப் பேதைமையாலும், மதுபானத்தாலும் மதிமயங்குவதையே இங்கு வாலி கருதுகின்றான். மடமை, மூர்க்கம், மதிமயங்குதல் ஆகிய சிறுமைகளுக்கு இடம் கொடாமலிருக்கும்படி வாலி தம்பிக்குப் போதிக்கிறான். வள்ளலின் நன்றியை மறவாதிருக்கும்படி வேண்டுகிறான். அபாயம் உற்றபொழுது ஆருயிரையும் கொடுத்து உதவவேண்டுமென்று ஆணையிடுகின்றான்.

இராமனது தெய்வத்தன்மையை வற்புறுத்தி, அவனைத் தொழுது தொண்டுபுரியும்படி போதிப்பதுடன் வாலி

---

உற்றிடத்து-வேண்டும் பொழுது. ஆவி உதவுகிற்றி-உயிரையும் கொடுப்பாய்.

அமையவில்லை. ஏனெனில் அவன் இராமனைத் தெய்வீக சக்தி உடைய மனிதனுகவே கருதுகிருன். இராமன் அரசர்குலத்தில் பிறந்த மனிதன் என்பதை மறந்து ஒழுகினல் அனர்த்தம் விளையுமென்று கருதி அவன் சுக்கிரீவனுக்குப் பின்வரும் நல்லுரை போதிக்கிருன்:

அரசியற் பாரம் பூரித்து
  அயர்ந்தனை இகழாது ஐயன்
மறைமலர் பாதம் நீங்கா
  வாழுதி; மன்னர் என்பார்
எரியெனற்கு உரியார் என்றே
  எண்ணுதி; எண்ணம் யாவும்
புரிதி;சிற் றடிமை குற்றம்
  பொறுப்பரென்று எண்ண வேண்டா

"இராச்சியச் செல்வம் கிடைத்ததால் இறும்பூதெய்தி, மதிமயங்கிவிடாதே. உள்ளக் களிப்பால் உணர்வை இழந்து இராமனை இகழும் மருளில் விழுந்துவிடாதே. அவனது தாமரைத் திருவடிகளை நீங்காமல் வாழ்வாயாக!'' என்று கூறிவிட்டு,

....மன்னர் என்பார்
  எரிஎனற்கு உரியார் என்றே
எண்ணுதி

என்று எச்சரிக்கிருன்.

வேந்தரைக் கனலாகவே கருதியொழுக வேண்டும் என்பது வாலியின் கருத்து. தீயை நெருங்கித் தொட்டால் சுட்டுவிடும்; எட்டாமல் ஒதுங்கிப்போனல், குளிர்காயமுடியாது. அதுபோல, அரசரை நண்பர் எனக் கருதி நெருங்கினல் அவர் சினந்து கடிவர். அரசரை நீங்கி ஒதுங்கினல் அவருக்குத் தொண்டுபுரிவது கடினமாகும். எனவே,

---

அயர்ந்தனை-அறிவு கெட்டு. அரசியற்பாரம் பூரித்து-இராச்சிய பாரத்தைப்பெற்ற மகிழ்ச்சியால் மனம்களித்து.

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்

என்று வள்ளுவப் பேராசான் கூறினார்.

மேலும்,

இளையர் இனமுறையர் என்றுஇகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்

என்றும் கூறினார்.

அரசர் இளையராகவோ, உறவினராகவோ இருப்பதை எண்ணி உரிமை பாராட்டாமல், அவரது நிலைக்கேற்ற நன்மதிப்புடன் நடந்துகொள்ளவேண்டுமென்றார்.

பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்

என்று கூறி, மன்னர் எவ்வளவு பழகியவராயினும், அவரிடம் மதிப்பும் பணிவும் குன்றாமல் நடந்துகொள்ள வேண்டும் என்பதை அறிவுறுத்தினார்.

இதே கருத்தோட்டத்தை,

அளையுறை பாம்பும், அரசும், நெருப்பும்,
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றன என்றுஎண்ணி
இகழின் இழுக்கம் தரும்

என்று ஆதாரக்கோவை கூறும்.

---

இகல் வேந்தர்-வலிய வேந்தர்.

இனமுறையர்-உறவினர். நின்றஒளி-உள்ள ஸ்தானத்தின் பெருமை.

கெழுதகைமை-உரிமை.

அளை-புற்று. உறை-வசிக்கும். முழை-மலைக்குகை. சீயம்-சிங்கம்.

இளையர், எளியர், பழகியவர் என்று எண்ணி அரசரிடம் எல்லை மீறி உரிமை பாராட்டுவது, நெருப்புடன் விளையாடும் செயலாகும். தீ தீண்டியவரைத்தான் சுடும்; மன்னர் என்ற தீயோ, கிளையோடு எரித்துவிடும்.

தீண்டி னார்தமைத் தீச்சுடும் மன்னர்தீ
ஈண்டு தம்கிளை யோடும் எரித்திடும்

(சிந்தாமணி)

அரசர் பொறுப்பர் என்று வெறுப்பன செய்தல் விபரீதமாக முடியுமென்பதை மீண்டும் வற்புறுத்துவதற்காகச் "சிற்றடிமை குற்றம் பொறுப்பர் என்று எண்ண வேண்டா" என எச்சரிக்கிருன். இராமன் நினைத்த காரியங்களையெல்லாம் குறிப்பறிந்து செய்யக்கடவாய் என்று செப்புகின்ருன்.

என்னதான் அறிவுரை பகர்ந்தாலும் குற்றம் குறைக்கு இடம் கொடாமல் தம்பி தொண்டுபுரிவான் என்பதற்கு உத்திரவாதம் இல்லை. எனவே, தம்பி ஒரு வேளை பிழைத்தாலும், நம்பி கண்ணேடாமல் கடிந்து தண்டிப்பதைத் தடுக்க ஓர் உபாயம் தேடுகின்ருன்.

மன்னவர்க்கு அரசன் மைந்த!
மற்றுஇவன் சுற்றத் தோடும்
உன்அடைக் கலம்என்று உய்த்து
உயர்கரம் உச்சி வைத்தான்

சுக்கிரீவனைச் சுற்றத்தோடு இராமன் கையில் அடைக்கலப் பொருளாக ஒப்படைத்து, அவர்களது சேமத்துக்கு உறுதி தேடிக் கரங் கூப்புகின்ருன்! இந்தப் பெருந்தன்மையைக் கண்டு இராமனது மனம் எவ்வாறெல்லாம் துடித்திருக்கவேண்டும்!

அதன்பின் வாலி, உரிமைத் தம்பியின் மாமுகம் நோக்குகின்ருன். "உன்தன் ஓங்கு அருமகனை வல்லே

---

மன்னவர்க்கு அரசன் மைந்த-சக்கரவர்த்தி திருமகனே. உய்த்து-(சுக்கிரீவனை இராமனிடம்) செலுத்தி.

9

உய்த்தனை கொணர்தி'' என்று கூறுகிறான். தாரை வயிற்றில் பிறந்த தனது ஒரே புதல்வனை, ''உன்தன் மகன்'' என்று சுக்கிரீவனிடம் குறிப்பிடுகிறான் வாலி. தம்பியிடம் கொண்ட அன்புரிமையைப் புலப்படுத்தும் வாசகம் இது!

சுக்கிரீவன் போய் அழைத்தவுடன், அங்கே அங்கதன் வருகிறான்; வாலியைக் காண்கிறான்.

சுடருடை மதியம் என்னத்
  தோன்றினன் தோன்றி, யாண்டும்
இடருடை உள்ளத்தோரை
  எண்ணினும் உணர்ந்திலாதான்,
மடருடை நறுமென் சேக்கை
  மலைஅன்றி, உதிர வாரிக்
கடரிடைக் கிடந்த காதல்
  தாதையைக் கண்ணில் கண்டான்.

அங்கதன் இளமையின் வளமையுடன் எழில் விளங்க ஒளிவீசும் பாலகன். அவன் துயரை அனுபவித்து அறிந்தவனல்ல; இடர்ப்பட்டவரைக் கண்ணால் கண்டவனுமல்ல; வருத்தம் என்ற சொல்லே அவன் செவியில் பட்டதில்லை. நிறைந்த ஆனந்தத்தையே கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், தீண்டியும் வளர்ந்த அங்கதன், தன்னைப் பெற்றெடுத்த பெருமகனைப் பார்க்கின்றான். மலை போன்ற மலர்ப் படுக்கையில் பள்ளிகொண்டிருக்கும் தந்தையைப் பார்த்துப் பழகியவன், இரத்தக் கடலில் மிதக்கும் காதல்தந்தையைக் காண்கிறான். துயரே

---

வல்லே உய்த்தனை கொணர்தி-விரைவில் அழைத்து வருவாய்.

சுடர்உடை-ஒளி உடைய. மதியம்-பூர்ணச் சந்திரன். எண்ணினும் உணர்ந்திலாதான்-எண்ணிப் பார்த்தாலும் தெரியமாட்டாத பாலன். மடர்உடை-மடல் உடை. மடல்-பூஇதழ். நறுமை-நறுமணம். சேக்கை-படுக்கை. வாரி-பெருக்கு.

அறியாதவன், துயரின் செம்பொருளாக மாறுகிறான். செந்நீரும் கண்ணீரும் நயனங்களிலிருந்து பெருக்கெடுத்தோடுகின்றன. சோகமிகுதியால் தகப்பன்மீது விழுந்து சோர்கின்றான் அதன்பின் புலம்புகின்றான்:

எந்தையே! எந்தையே! இவ்
  எழுதிரை வளாகத்து யார்க்கும்
சிந்தையால், செய்கையால், ஓர்
  தீவினை செய்திலாதாய்!
நொந்தனை! அதுதான் நிற்க;
  நின்முகம் நோக்கிக் கூற்றம்
வந்ததே அன்றோ அஞ்சாது
  ஆர்அதன் வலிமை தீர்ப்பார்

இந்த உலகத்தில் எவர்க்கும் மனம், மொழி, மெய்களால் தீவினை கருதாமல் வாழ்ந்தவன் எனக் கூறித் தந்தையின் புனித நிலைமையை மகன் எடுத்துரைக்கிறான். 'பிறன்கேடு சூழ்ந்தவனுக்கே அறம் கேடுசூழும்' என்பது பெரியோர் வாக்கு. ஆயினும், மனத்தாலும் தீவினை கருதாத் தந்தை கேடுற்றுத் துன்பமடைகிறானே என்று உருகி மறுகுகின்றான்.

"கூற்றும் என் பெயர் சொலக் குலையும்" என்று தாரையிடம் உறுதிகூறிய வாலிக்கே இறுதி நேர்ந்து விட்டது. தந்தையின் அதிசய அடலாண்மையை அறிந்த மைந்தனும் "கூற்றம் நின்முகம் நோக்கி அஞ்சாது வந்ததே" என்று வியந்து பதறுகிறான்.

யமனுக்கு அச்சம் நீங்கிவிட்டது. இனி இராவணனும் பயத்தை விடுத்து வாழ்வானேயென்று அங்கதன் பரிந்து புலம்புகிறான்.

---

திரை—அலை. திரை வளாகம்—கடல் சூழ்ந்த நிலவுலகம். நொந்தனை—துன்பமடைந்தாய். கூற்றம்—யமன். அதன் வலிமை—யமன் வலிமையை. தீர்ப்பார்—ஒழிக்க வல்லவர்.

திசைகள் தாங்கும் கறையடிக்கு
அழிவு செய்த கண்டகன்

என்று வாலி குமாரன் இராவணனைக் குறிப்பிடுகிறான்.

திசை யானைகளை வலி அடக்கிய தீரன் இராவணன். நல்லவருக்கு இன்னல் செய்வதையே தொழிலாகக் கொண்ட அல்லவன் ஆதலால், அவனைக் கண்டகன் என்கிறான். அத்தகைய இராவணனை வாலி வாலிற் கட்டித் தன் மெலிவு உணரச் செய்தான். அதனால் அந்த இராவணன் வாலியின் வாலை நினையும்பொழுதெல்லாம் அவன் நெஞ்சம் பறையடிப்பதுபோல் படபடவென்று அடிக்கும். இனி அவ்வாறு அஞ்சமாட்டான் என்று கூறுகிறான் அங்கதன்.

வாலின் ஆற்றலை வியந்து கலுழ்ந்தவன், வாலியின் கால் கை ஆற்றல்களையும் கருதிப் புலம்புகிறான். பாற்கடல் கடைந்த பெருஞ்செயலை எண்ணி,

அலைகடல் கடைய வேண்டின்
ஆர்இனிக் கடைவர் ஐயா?

என்று கதறுகின்றான்.

வாலியுடைய வாலின் ஆற்றலை இராவணனது நெஞ்சம் உணர்ந்து துடித்தது. அவனது காலின் வலிமையால் மலைச்சிகரங்கள் தழும்பேறின. அவனது கை வல்லமையைக் கண்டு பாற்கடலே கலங்கியது. இந்த உண்மைகளைக் கருதிப் புலம்பியபின், அங்கதன் தந்தையின் வள்ளன்மையைப் போற்றிப் புலம்பிக் கரைகின்றான்.

---

கறை—உரல். உரலைப் போன்ற கால்களை உடைய யானை என்பதைக் குறிக்க கறையடி என்று வந்தது. கண்டகம்—முள். கண்டகன்-முள்ளைப் போல் தொல்லை கொடுப்பவன்.

பஞ்சின்மெல் லடியாள் பங்கன்
  பாதுகம் அல்லது யாவும்
அஞ்சலித்து அறியாச் செங்கை
  ஆணையாய்! அமரர் யாரும்
எஞ்சலர் இருந்தார் உன்ஞல்
  இன்னமுது ஈந்த நீயோ
துஞ்சினை வள்ளி யோர்கள்
  நின்னின்யார் சொல்லற் பாலார்?

உமாபதியின் திருவடிகளைத் தவிர, வேறு எதனையும் கும்பிட்டறியாதவன் என்று தந்தையின் மாட்சியைப் போற்றிப் பேசுகிருன் அங்கதன். மறு மன்னரை வணங்காத மாட்சிக்கு உரிய வாலியின் அதிகாரம் விளங்க, அவனை 'ஆணையாய்' என்று விளிக்கிருன். வாலி பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்தான். தனக்கென்று கொஞ்சமும் கொள்ளாமல், அமுதம் முழுவதையும் தேவருக்கே வழங்கினன். அந்த அமுதை உண்டு உய்தி பெற்ற அமரர் எண்ணற்றவர். அவர்கள் அனைவரும் இறவாநிலைபெற்று வாழச் சாவாமருந்தை வழங்கிய ஒருவன் மட்டும் துன்புற்று மாய்கிருன். கொள்வோர் அனைவரும் சிரஞ்சீவிகளாய் வாழக் கொடுத்தவன் சாகின்ருன்! இத்தகைய கொடையாளர் எக்காலத்தும் இருந்ததில்லையென்று அங்கதன் சாற்றிப் போற்றி அரற்றுகிருன். தன்னலம் துறந்து மன்னுயிர் ஓம்பிய வாலியின் வண்மையும் திண்மையும் என்னே, என்னே என்று நாம் வியந்து நிற்கிருேம்.

இந்தத் துன்பக் காட்சி இராமனது இதயத்தை எவ்வாறெல்லாம் வதைத்திருக்கவேண்டும்! பெற்றவன் மார்பில் விழுந்து புரண்டு, கண்ணீரும் குருதியும்

---

பஞ்சின் மெல்அடியாள்-பஞ்சு போல் மென்மையான பாதங்களை உடைய பார்வதி தேவி. பங்கன்-பார்வதியைத் தன் உருவில் இடப்பக்கத்தில் கொண்ட சிவபெருமான். பாதுகம்-திருவடிநிலை. எஞ்சலர் இருந்தார்-குறையாது இருந்தனர்.

ஊற்றுநீரெனப் பெருக்கி, உடல் கரைய உயிர் பதறப் புலம்பும் அங்கதனைக் கண்டு, தன் வினையால் விளைந்த விபரீதம் இதுவெனத் தெரிந்த இராமனது நெஞ்சும் சுக்குநூறாகத் தகர்ந்தாலும் ஆச்சரியமடையமுடியுமா?

பெற்றவன் கொடியவனு யிருந்தாலும், பாசம் விடாது என்பது உலகம் ஒப்பும் உண்மை. இரணியனைப் போன்ற கொடியவன் இறந்தபொழுது, பிரகலாதன் வருந்தாததைக் கண்டு நரசிம்மனே வியந்தான். வியந்து,

உந்தையை உன்முன்கொன்று
   உடலைப் பிளந்துஅளையச்
சிந்தை தளராது
   அறம்பிழையாச் செய்கையாய்!
அந்தமிலா அன்புஎன்மேல்
   வைத்தாய் அளியத்தாய்
எந்தை இனிஇதற்குக்
   கைம்மாறு யாது?என்றான்

பிரகலாதன், தன் கொடிய தந்தையின் பிரிவுக்கு வருந்தாததைக் கண்டு நரசிம்மன் திகைத்தான் என்றால், வாலியின் பிரிவை எண்ணிப் புலம்பும் அங்கதனது அவலநிலையைக் கண்டு இராமன் எவ்வாறு கரைந்திருக்க வேண்டும்!

தந்தையின் பிரிவால் நிகழும் துன்பத்தை இராமன் உணராதவன் அல்ல. தயரதன் விண்ணகம் எய்தினான் என்ற வெய்ய சொல் கேட்டு, அவன் எவ்வாறெல்லாம் கலங்கினான்! நிலத்தில் விழுந்து பேச்சுமூச்சில்லாமல் கிடக்கவில்லையா? உணர்வு வந்தபின் பெருமூச்செறிந்து பன்முறை பொருமிப் பின் புலம்பவில்லையா?

நந்தா விளக்கனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனியறத்தின் தாயே! தயாநிலையே!

தந்தாய்—தந்தையே.

எந்தாய்! இகல்வேந்தர் ஏறே! இறந்தனையே!
அந்தோ! இனிவாய்மைக்கு ஆருளரே மற்று?என்றான்

அல்லவா?

நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீஇயற்றி
எற்பெற்று நீபெற்றது இன்னுயிர்போய் நீங்கவோ?

என்று இராமன் அப்பொழுது கதறவில்லையா?

தந்தையின் பிரிவால் துயரத்தின் ஆழத்தைக் கண்டு துன்புற்ற இராமன், தன் வினையால் தந்தையை இழந்து நிற்கும் தனயனது புலம்பலை நோக்கித் தன்னையே நொந்து வெந்திருக்கவேண்டுமல்லவா?

தன் தந்தையைக் கொன்றவன் எதிர்நிற்கக் கண்டும், அவனைச் சினந்தோ, நிந்தனை செய்தோ, அங்கதன் ஒரு வார்த்தை பேசவில்லை. இந்தப் பெருந்தன்மையே இராமனை வதைத்திருக்க வேண்டுமல்லவா?

ஆனால் இராமன் கண்ணழியக் கலுழ்ந்தானா? யாது செய்தான் என்பதைக் கம்பன் எடுத்துரைக்கவில்லை. இவ்வாறாகச் சிலவற்றை நம் ஊகத்துக்கு விடுதல் நாடகக்கலை வல்லுநர் ஆளும் உத்திகளில் ஒன்று.

பல பல பன்னிப் புலம்பும் மகனை நோக்கித் துயர் மிகுதியால் வாயடைத்துக் கிடந்த வாலி, இறுதியில் பேசத் தொடங்குகிறான்.

ஆயன பலவும் பன்னி அழுங்கினன் புழுங்கி நோக்கித்
தீயுறு மெழுகின் சிந்தை அலம்வரும் செங்கண் வாலி
'நீயினி அயர்வாய் அல்லை' என்றுதன் நெஞ்சிற் புல்லி
'நாயகன் இராமன் செய்த நல்வினைப் பயனிது' என்றான்

---

நவை-குற்றம். எற்பெற்று—என்னைப் பெற்று.

அழுங்கினன்-(அங்கதன்) அழுதான். புழுங்கி-(வாலி) மனம் தவித்து சிந்தை அலம் வரும-மனம் நெகிழ்ந்து உருகுகின்ற. அயர்வாய் அல்லை-வருந்தாதே புல்லி-தழுவி.

தீயிலிட்ட மெழுகுபோலப் பிள்ளைப் பாசத்தால் துய ருற்ற வாலி உள்ளம் கரைந்ததாகக் கவிஞன் கூறுகிறான். இந்தத் துயரமிகுதியிலும், "நாயகன் இராமன் செய்த நல்வினைப் பயன் இது" என்று தன்னை வதம் செய்த செயலை வாலி உயர்த்திப் பேசுகின்றான்.

பிறத்தலும் இறத்தலும் தொன்றுதொட்டு இயல் பாக நிகழ்கின்றன என்பதைக் குறிப்பிட்டுத் தனக்கு நன்மரணம் வாய்த்திருப்பதாகப் பெருமை கொள்கிறான். இராமனே வந்து, தனக்கு வீடுபேற்றை நல்கிவிட்டதாக மனமுவந்து சொல்கின்றான். மேலும்,

பாலமை தவிர் நீ, என்சொல்
  பற்றுதி ஆயின் தன்னின்
மேலொரு பொருளும் இல்லா
  மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக்
கால்தரை தோய நின்று
  கட்புலக்கு உற்ற தம்மா!
மால்தரும் பிறவி நோய்க்கு
  மருந்தென வணங்கு, மைந்த!

தகப்பன் பட்டனன் என்று பதறிநிற்கும் மைந்தனிடம், வாலி தன்னைக் கொன்றவனுக்கு அளிக்கும் ஏற்றத்தைப் பாருங்கள்! பரம்பொருளே மானிட உருப்பெற்று வில் லொன்று தாங்கிக் காட்சி தருவதாகக் கூறிவிடுகிறான்! இதைவிட உயர்ந்ததொரு பாராட்டு எவருக்குத்தான் கிட்டும்? பிறவியெடுத்தவருக்குப் பீடையாக வாய்க்கும் பேராசைக்கு இலக்கு ஆகாமல், தியாக வாழ்வு நடத்து வதற்கு இவ்விராமனையே பற்றுக்கோடாகக் கொள்ள வேண்டுமென்று கூறி, அவனை வணங்கும்படி அங்கத னுக்கு அறிவுறுத்துகிறான்.

தந்தையின் பேச்சைக் கேட்டுத் தனயன் திகைத்து நின்றான் போலும்! பெற்றவனது கூற்றுவனைத் தலைவ

---

பாலமை-பிள்ளைமை. கட்புலக்கு-கண்ணின் புல னுக்கு (காட்சிக்கு). மால்-அவா.

னுகக் கொள்வது என்றால், அதற்கு அங்கதன் எளிதில் இணங்க முடியுமா? மகனது முகக்குறிப்பைக் கூர்ந்து நோக்கிக் கண்டான் போல, வாலி, தொடர்ந்து பேசுகிறான்:

என்னுயிர்க்கு இறுதி செய்தான்
என்பதை இறையும் எண்ணாது
உன்னுயிர்க்கு உறுதி செய்தி
இவற்குஅமர் உற்ற துண்டேல்,
பொன்னுயிர்த் தொளிரும் பூணாய்!
போதுநி நிலைமை நோக்கி
மன்னுயிர்க்கு உறுதி செய்வான்
மலரடி சுமந்து வாழ்தி!

வாலியை இராமன் கொன்றானென்ற உண்மையைக் கருத்தில் கொண்டு, அங்கதன் மனம் திரிந்து வழிதவறக் கூடாதென்று அவன் கவலைப்படுகிறான். ஏனெனில், இராவண வதத்துடன் ஒப்பிட்டால், வாலி வதம் பொருட்படுத்தவேண்டாத ஒரு நிகழ்ச்சி. இராவண வதமென்ற யுகச்சாதனைக்குச் சக்திகளைத் திரட்டும் போக்கில் நிகழ்ந்த துர்ப்பாக்கியமான சம்பவம். எனவே, தந்தையைக் கொன்றானேயென்று சிந்தை கலங்காது, இராமனைத் தலைவனாக ஏற்று, இராவணாதியருடன் நிகழவிருக்கும் போரில் தனக்குரித்தான பங்கை வகிக்கும்படி வாலி தன் மகனை வேண்டுகிறான். நிலைபேறுடைய சாதனையைக் கண்டு, பிறப்புக்குச் சிறப்புநாடும் பாதை அதுவே என்றும் அவன் அங்கதனுக்கு அறிவுறுத்துகிறான்.

இவ்வாறு இதமொழிகளைக் கூறித் தன் மகனை இறுகத் தழுவுகிறான் வாலி. அதன்பின் வாலி,

---

இறையும்-சிறிதும். உறுதி-நிலையான நன்மை. இவற்கு-இராமனுக்கு. அமர்-போர். பொன் உயிர்த்து-பொன்னால் செய்த. பூணாய்-ஆபரணங்களை உடையவனே.

நெய்யடை நெடுவேல் தாஃண
  நீல்நிற நிருதர் என்னும்
துய்யடைக்கு அனலி அன்ன
  தோளினன்; தொழிலும் தூயன்;
பொய்யுடை உள்ளத் தார்க்குப்
  புலப்படாப் புனித! மற்றும்
கையடை ஆகும் என்றுஅவ்
  இராமற்குக் காட்டும் காலே

எனக் கம்பன் கதையை நடத்திச்செல்கிருன்.

இராமஃனத் தொழுது தொண்டுபுரியும்படி மகனுக்கு அறிவுறுத்திய வாலி, நம்பிக்குத் தனயனின் மேன்மையை எடுத்துரைக்கிருன். மூர்த்தி சிறிதாளுலும் கீர்த்தி பெரிது என்பது போல, அங்கதன் வயதில் சிறியவளுயினும், ஆற்றலிலும் சீலத்திலும் பெரியோன் என்பதை வாலி எடுத்துரைக்கிருன். பஞ்சுப் பொதிகஃள எரிக்கும் தீ போல, அங்கதன் அரக்கர் கூட்டத்தை அழித்துவிடுவான். மேலும், அவன் சித்தசுத்தி உடையவன். எனவே, அவஃன அடைக்கலப் பொருளாக அங்கீகரித்து அருள்புரியும்படி இராமஃன வேண்டுகின்ருன். அவ்வமயம்,

தன்அடி தாழ்த லோடும்
  தாமரைத் தடங்க ணனும்
பொன்உடை வாஃள நீட்டி,
  'நீஇது பொறுத்தி' என்ருன்.

---

நெய்யடை-நெய்பூசிய. நிருதர்-அரக்கர். துய் அடை-பஞ்சு மூட்டை. கையடை-அடைக்கலம்.

தன்னடி தாழ்தலோடும்-அங்கதன் விழுந்து வணங்கிய அளவில். தாமரைத் தடங்கணனும்-தாமரை மலர் போன்ற பெரிய கண்கஃள உடைய இராமன். ஏத்தின-துதித்தன. வானுக்கு அப்புறத்து உலகன்-வானுக்கு அப்பால் உள்ள வீட்டு உலகத்தவன்.

என்னலும் உலகம் ஏழும்
ஏத்தின! இறந்து வாலி
அந்நிலை துறந்து வானுக்கு
அப்புறத்து உலகன் ஆனான்.

முன்னால் சுக்கிரீவனை இராமன்பால் செலுத்தி, "இவன் சுற்றத்தோடும் உன் அடைக்கலம்" என்று இயம்பினான் வாலி. அப்பொழுது பரிதி மைந்தன் விழுந்து தொழுததாகக் கவிஞன் கூறவில்லை. தமையனுக்கு முடிவு சூழ்ந்த தகவிலாத காரியத்தில் ஒத்துழைத்த இராமனை வணங்குவதா என்று அவன் மனம் உணங்கியது போலும்! ஆனால் தந்தைசொல்மிக்க மந்திரம் இல்லை என்று கருதிய அங்கதனே இராமனை வணங்கி நிற்கிறான். இராமனும் அவனுக்கு உடைவாள் தந்து வீர மரியாதை செய்கிறான். வெள்ளை மனத்துக்குரிய அங்கதனது பணிவையும், பாலகனுக்குத் தலைவன் தந்த பெருமையையும் கண்டு உலகம் ஏழும் துதிபாடுகின்றன. இந்தக் காட்சியைக் கண்ட வாலி களிபேருவகை கொள்கிறான்; கரத்தில் பிடித்திருந்த இராம பாணத்தை நெகிழ விடுகிறான். அது அவனது மார்பைத் துளைத்து அப்பால் ஓடிக் கடலில் குளித்து, இராமனது அம்பறாத் தூணியை அடைகிறது. வாலியின் உடலிலிருந்து கிளம்பிய ஒளிப் பிழம்பு வீட்டுலகை அடைகிறது!

அங்கதனைத் தருவித்து அறிவுரை புகன்ற வாலி, ஆவி பிரிவதற்குமுன் தன் தேவியை வரவழைக்கவில்லை. "இராமன் என்பவன் உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான்" என்று அவள் எச்சரித்தாள். ஆனால் அவன் அதற்குச் செவி கொடுத்தானில்லை. இராமனுக்கு 'இயல்புஅல இயம்பி என்செய்தாய்?' என்று அவனை வெகுண்டான். 'பெண்மையால் பிழைத்த பேதை' என்று ஆடவனுக்குரிய அகந்தையுடன் அவளை ஏசவும் அவன் கூசவில்லை. ஆனால் அவள் வாக்கு மெய்யாகிவிட்டது. தானே செய்த பிழையால் உயிர்பிரிகின்றான் வாலி. உற்ற கணவனுக்கு நேரவிருந்த ஆபத்தைத் தெரிந்திருந்தும், அவனைக் காப்பாற்ற முயன்றும், அது கைகூடாது

போன கையறுநிலையில், கதறவிருக்கிருள் தாரை. அதைக் கண் கொண்டு காண அந்த அருமைக் கணவனுக்கு முடியுமா?

பெண்ணென்ருல் பேயும் இரங்கும் என்பார்கள். உருவத்தில் பெண்ணுயிருந்ததால், பெண்ணுருக் கொண்ட பாவமான தாடகையையும் கொல்லத் தயங்கியவன் இராமன். அவன், உத்தமி தாரையிடம் வாலி பிரியா விடைபெறும் காட்சியைக் காணச் சகிப்பானு? தன் தந்தை இறந்தபொழுது, தாய்மார்கள் இரங்கி ஏங்கி விம்மி வெதும்பியதெல்லாம் நெக்குருகி நெட்டுயிர்த்ததெல்லாம் நினைந்து நினைந்து, தன் வினையால் விதவையாகவிருக்கும் வனிதையைக் கண்டு வருந்திச் சாம்புவான் அல்லவா? தந்தை-மகன் சந்திப்பிலேயே உடைந்திருக்கும் இராமனது மனம், தாரை புலம்புவதைக் கண்டால் எப்பாடு படும்? தலைவன் துயரில் உழன்று தவிப்பதைத் தவிர்க்க வேண்டியும், பெருந்தன்மை மிகுந்த வாலி, தாரையைத் தருவிக்காமலிருந்தானென்று கொள்ளலாம்!

இராமன் தலைமையில் நிகழவிருக்கும் அறப்போரில் அங்கதனும், சுக்கிரீவனும் பங்குபற்ற வேண்டும். எனவே, அவர்கள் இராமனை வணங்கவேண்டுமென்பதில் வாலி கண்ணுங் கருத்துமாயிருந்தான். இராம-இராவணப் போரில் தாரைக்குப் பாத்திரம் ஏதுமில்லை. இனி அவள், கொழுநன் நினைவைத் தொழுது நோன்பிருந்து காலம் கடத்தவேண்டியவள். எனவே, அவளை இட்டுவரச் செய்து இராமனது மலரடி தொழுது வாழும்படி கூறுவது அநாவசியமானது மட்டுமல்ல, அதிகப்பிரசங்கித்தனமும்கூட. இல்லாளை இட்டுவரும்படி வாலி கேட்டுக் கொள்ளாமைக்கு இதுவும் ஒரு காரணம் எனலாம்.

வாலியின் உயிர் பிரிந்தவுடனேயே, அந்தக் களத்திலிருந்து இராமன் நீங்கிவிடுகிருன். அங்கதனையும் சூரிய குமாரனையும் உடன் அழைத்துச் செல்கிருன். தாரையின் துயரைக் கண்டால், அவள் புலம்பலைக் கேட்டால், இராமன் நெஞ்சம் வெடித்து மாள்வான் என்று அஞ்சியே,

கம்பனும் காவியத் தலைவனைக் களத்திலிருந்து போக்கி விடுகிறான் போலும்!

கணவன் இறந்தான் என்ற செய்தி கேட்ட தாரை ஓடிவந்து வாலியின் மார்பில் விழுந்து புரள்கிறாள். துவண்டு துடித்து, விம்மி வெதும்பிப் பின் ஓங்கிய குரலில் அரற்றுகிறாள்:

*வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்*
*கரைசேரா இடர் வேலை காண்கலேன்*
*உரைசேர் ஆருயி ரேஎன் உள்ளமே!*
*அரைசே; யானிது காண அஞ்சினேன்!*

வாலியின் தோளான வரைமீது மலைக்குல மயிலான தாரை மகிழ்ந்து வாழ்ந்தாள். இப்பொழுது அவள் கணவனது சவக்கோலத்தைக் கண்டு துன்பக்கடலில் விழுந்தவளாகத் தவிக்கிறாள்.

உயிர் நீங்கியபின் உடலுக்கு உய்தியில்லை. ஆனால் ஆருயிர் அனைய கணவன் இறந்தபின்பும் தாரை மாயாதிருக்கிறாள். இதைக் கண்ட கணவன் தன்னை வெறுத்து வாய்பேசாதிருப்பதாக மயங்கி, அவள் மறுகுகிறாள்:

*துயரா லேதொலை யாத என்னையும்*
*பயிரா யோ?பகை யாத பண்பினோய்?*
*செயிர்தீ ராவிதி யான தெய்வமே*
*உயிர்போ னல்உட லாரும் உய்வரோ?*

என்று கேட்கிறாள்.

---

வரை-மலை. நாளும்-எந்நாளும். வேலை-கடல். காண்கலேன்-கண்டதில்லை. உரை-புகழ். அரைசே-அரசே. (எதுகை நோக்கி, அரைசு எனப் போலியாக நின்றது). இது-இப்பிணக்கோலம்.

துயராலே தொலையாத-உன்னைப் பிரிந்த துயரால் உயிர் நீங்காத. பயிராயோ-வெறுக்காயோ? செயிர்-கோபம். தீரா-நீங்காத.

அவ்வமயம், வாலி கடலைக் கடைந்து அமுது எடுத்துத் தேவருக்கு வழங்கியதை நினைவு கொள்கிருள். அந்த உபகாரத்துக்குத் தேவர்கள் வாலிக்கும் கடமைப்பட்டவர்களல்லவா என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்கிருள்.

எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்பது பெரியோர் வாக்கு அல்லவா?

வாலி தனக்குச் சாவாமருந்தை அளித்தவன் என்பதையும் சிந்தியாமல் யமன் அவனது உயிரைப் பிரித்தானென்ருல், யமன் நன்றி மறந்த அற்பனல்லவா என்று எண்ணுகிருள்.

நறிதா நல்லமிழ்து உண்ண நல்கலின்
பிறியா இன்னுயிர் பெற்ற பெற்றிதாம்
அறியாரோ? நமனர்? அதன்றெனில்
சிறியாரோ உபகாரம் சிந்தியார்?

அவள் இங்கு, துன்புற்று நிற்க அவன் மேல்உலகம் சென்று இன்புறுகிருன் என்ற நினைவு பட்டுத் தெறிக்கிறது. எனவே,

ஐயா நீஎனது ஆவி என்றதும்
பொய்யோ? பொய்யுரை யாத புண்ணியா!

என்று அரற்றுகிருள்.

காதற் பாசத்தால் பிணிக்கப்பட்ட இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினரென்று அவர்கள் எண்ணியதுண்டு; அது உண்மையாயின், இராமனது சரம் அவளது உயிரை

---

நறிது-நறுமை (நன்மணம்) உடையது. பிறியா-பிறியாத; நீங்காத. நல்கலின்-கொடுத்தலால். சிறியாரோ-அற்பரோ?

யும் உண்டிருக்கவேண்டும். எனவே "இருவேம் உள் இருவேம் இருந்திலேம்" (இருவரும் ஒருவர் உள்ளத்தில் ஒருவர் இருந்தோமில்லை) என்று கூறிப் புலம்புகிறாள்.

விழுந்து கிடப்பது வாலிதானா என்ற ஐயமே அவளுக்கு உண்டாகிறது. ஏனெனில் மேரு மலையையும் நெருக்கிப் பொடிக்கும் வல்லமையுடைய வாலியை ஒரு வாளி கொல்வது சாத்தியமில்லையென்று அவள் கருதுகிறாள். காட்சிஅறிவும் கருத்தறிவும் மாறுபடுவதைக் கண்டு திகைத்து,

நீரும் மேருவும் நீநெருக்கினால்
மாறோர் வாளிஉன் மார்பை ஈர்வதோ?
தேறேன் யான்இது தேவர் மாயமோ?
வேறோர் வாலி கொலாம் விளிந்துளான்

என்று கதறுகிறாள்.

இந்த அவலநிலையிலும், தாரை என்ற பெருந்தகை வனிதை, இராமனை வெகுண்டோ, தூற்றியோ ஒரு வார்த்தை சொன்னாளில்லை. இராமன் தன் 'ஓயா வாளியை ஒளித்துநின்று' எய்யாமல்,

வாயால் ஏவினன் என்னின் வாழ்வெலாம்
ஈயா யோ?அமிழ் தேயும் ஈகுவாய்!

என்றுதான் வருந்துகிறாள். அமுதமே வேண்டுமென்றாலும் கரவாது உவந்து ஈயும் வள்ளலான வாலி, இராமன் வாய்மொழியாகக் கேட்டிருந்தால் தன் வாழ்வையே தந்திருப்பானே என்று இரங்குகின்றாள்.

வில்லில் வல்லவன் இராமன். ஆனால் அவன் "ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினார்" என்று மறுகுகின்றாள்.

---

நீரும்-நீறு ஆம்; பொடியாகும். ஈர்வதோ-பிளப்பதோ, விளிந்துளான்-(இங்கு) மாண்டு கிடப்பவன்.

ஏவினன் என்னின்-ஏவினான் என்றால்.

உன்னினார்-கருதிச் செய்தார்.

இராமன் "அறத்தின் ஆறு எலாம்" உலகுக்குக் காட்ட வந்தவன் என்று வாலி கூறியதை நினைவுகொள்கின்றாள். எனவே,

> **தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம்**
> **கருமம் கட்டளை என்றல் கட்டதோ?**

என்று வினவுகிறாள்.

முன்னர் வாலி இராமனிடம் செய்த வாதமெல்லாம் இந்தக் கேள்வியில் அடங்கிவிடும். பெண்மைக்குப் பெருமையாய்த் துலங்கும் தாரையின் அறிவுநுண்மைக்கும் சீலத் திண்மைக்கும் சான்றாக நிற்கும் இந்த வினாவை எழுப்பி எழுப்பி இடர்ப்பட்டுச் சிந்தை கலங்காதவர் யாரே உளர்?

இந்தக் கேள்வியுடன் தாரையின் புலம்பலும் ஓய்கின்றது. அவள் உணர்விழந்து செயலிழந்து கிடக்கிறாள். இதைக் கண்ட அனுமன், தாரையை அந்தப்புரத்துக்குக் கொண்டுசெல்லுமாறு தாதிகளை ஏவிவிட்டு, இறந்த வீரனின் ஈமக்கடன்களை அங்கதனைக் கொண்டு செய்விக்கிறான். ஜீவ ஒளியை இழந்த உடல் தீயின் ஒளியாக மாறுகிறது.

---

கட்டதோ-கட்டு அதோ. கட்டு-பொய்; அல்லது (நடத்தையில் வராத வெறும்) கட்டுப்பாடு.

## முடிவுரை

வாலி வதை, இராம காதையுடன் ஒன்றிப் பொருந்திய கிளைக்கதை யாகும். காவியத்துக்கு நாயகன் இராமன். ஆயினும் கிளைக்கதையின் தலைவன் வாலியே ஆவான்.

காவிய நயமும், நாடக நயமும் இனிது இசைந்தமைந்த நனிசிறந்த பகுதிகளில் ஒன்றாக வாலி கதை விளங்குகிறது. துன்பியல் நாடகக்கலையில் தனக்குவமையில்லாதானாகத் திகழும் ஷேக்ஸ்பியருடன் ஒப்பிடத்தக்க வகையில், கம்பன் கதையை நடத்திச்செல்கிறான். வாலி என்ற தலைவனது வீழ்ச்சியால் விளையும் அவலச் சுவை, வாசகரைத் தூய்மை அடையச் செய்யும் தனித்திறம் பெற்றுத் துலங்குகிறது.

எத்தகைய மாவீரன் மாய்ந்துவிட்டான்! மெய்வலிக்கும், மனவிரிவுக்கும் எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தவன்; மல்லமரில் வல்லவன்; மறலியும் சிரதலம் குலையச் செய்யும் சூரன்; தன்னேரில்லாக் கொடைவள்ளல்; சிறந்த சிவபக்தன்; அருமை மனைவியையும் இனிய மைந்தனையும் பெற்றுப் பொலிந்தவன். செங்கோன்மைக்குச் சிறப்புத் தேடித்தந்த செம்மல்; பிறருக்கு நேர்ந்த பழியைத் தனக்குற்றதாகக் கருதி நாணிய மேலோன்; தன்னிரக்கம் அறியாத் தீரன்; தன்னலம் கடந்த மேலோன்; வையகத்தின் பெருவாழ்வுக்காகத் தன் வாழ்வை அர்ப்பணித்த இராமனது இணையடி போற்றிய தன்னடக்க சீலன். எவ்வளவோ இனிய நீர்மைகளை மருவியிருந்த சான்றோன் இறந்துவிட்டான்! மண்ணிலே விண்ணகம் அமைத்து மன்பதை உய்யப் பகலும், இரவும் பாடுபடும் அறத்தின் மூர்த்தியே, அவனை அம்பு விட்டுக் கொன்று விட்டான்! பரிவு மிகுதியால் நாம் மெய்நடுங்க, உயிர் குலைய, உள்ளம் உருக, கண்கள் பனிக்கக் கதறுகிறோம்!

வாலிவதை, உயர்நிலையிலுள்ள ஒரு மேன்மகன், விதிக்கு விலக்கான விபத்துக்குள்ளாகி மாய்வதை விண்டுரைக்கும் சோகக் கதையாகும். இடியென்றும், மின்னல் என்றும், நோய் என்றும், பேய் என்றும், எரி என்றும், சூறை என்றும் தற்செயலாக மனிதனைத் தாக்கி வீழ்த்தும் விபத்துக்களை யல்லாமல், மனிதரது செயல்களால் விளையும் அழிவையே வாலிவதை பொருளாகக் கொண்டிருக்கிறதென்பது வெள்ளிடைமலை. மாந்தரில் சிலர் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒன்றுசேர்ந்து உடன்பட்டும் மாறுபட்டும் செயல்புரிகின்றனர். காரணகாரியத் தொடர்ச்சியாக அமையும் இந்த வினைகளின் இறுதி விளைவாகத் தலைவனது சாவு நிகழ்கிறது. இந்தச் செய்கைகள் கனவிலோ, துயிலிலோ, குடிவெறியிலோ நிகழ்கின்றவை அல்ல. அவை செய்வோரின் இயல்புகளுக்கு ஏற்ற வெளியீடுகளாக உள்ளன. எனவே, பாத்திரங்களது இயல்புகளால் செயல்கள் உருப்பெறுகின்றனவென்றும், செயல்கள்வழியே பாத்திர இயல்புகள் துலாம்பரமாகின்றனவென்றும் நாம் கருதலாம். இவ்வகையிலேயே வாலிவதை என்ற புதிருக்கு விளக்கம் காண நாம் முயன்றிருக்கிறோம். அவ்வாறன்றி 'விதி வலிது' என்ற கூற்றைக் கொண்டு வாலிவதைக்கு அமைதி காணமுடியாது. கொடுமை கருதி இடும்பையே செய்வதென்று கருதினாலும் சரி, நன்மைதீமை பாராமல் கண்மூடித்தனமாகக் கருமம் புரிவதென்று கருதினாலும் சரி, மாந்தரைத் தானடித்த மூப்பாக ஆட்டிப்படைக்கும் விதி ஒன்றைக் காட்டி, வாலிவதையைப் புரியமுடியாது.

அல்லற்படுத்தும் விதியே நம்மை ஆட்சி செய்கிறதென்றால், நமக்கு அருவருப்பும், ஆத்திரமும்தான் ஏற்படும். கண்ணும் கருத்தும் இல்லாமல் விதி நம்மை இயக்குகிறது என்றாலும், வாழ்விலே வெறுப்பும், விரக்தியும்தான் உண்டாகும். எனவே, செம்மையான வாழ்வுக்குச் சீரான வழிகாட்டும் கம்பன், இவ்வாறெல்லாம் விதியின் வலுவை உயர்த்திக்காட்டும் நெறியைத் தன் காவியத்தின் அடிச்சரடாகக் கொள்ளவில்லை.

தான் காடு செல்ல நேர்ந்தது 'விதியின் பிழை' என்று இராமன் இலக்குவனிடம் கூறுவதும், இதுகுறித்து "ஊழ் வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ?" என்று வசிட்ட மாமுனிவன் இயம்புவதும் மெய்தான். சீதை எரியில் விழுந்து உயிர் நீப்பதைத் தவிர்ப்பதற்காக, இராமனைத் தேடிச் செல்லும் இலக்குவன், "வெஞ்சின விதியை வெல்ல வல்லமோ?" என்று உரைப்பதும், அண்ணனிடம் பிரியா விடைபெறும் கும்பகர்ணன், "விதியொன்று பிடர்பிடித்து உந்துகின்றது" என்று மனம் வெதும்பிப் பேசுவதும் உண்மையே. கணவனது பிணத்தின் மீது விழுந்த தாரை, "செயிர் தீரா விதியான தெய்வமே" என்றுதான் புலம்புகிருள். ஆனால் விதி பற்றிய இந்தக் குறிப்புகளெல்லாம், அந்தந்தப் பாத்திரங்களின் அப் போதைய மனோநிலைகளைப் புலப்படுத்துவனவே யன்றிக் காவியத்தின் உட்பொருளாக ஆகமாட்டா. மற்றவை கிடக்க, வாலிவதையை விதியின் கூத்தாக விரிவுரை செய்வது, வலிந்து பொருள்கொள்ளும் வழுவில் வீழ்வ தாகும்.

நானிலத்தில், பொல்லாதவர்களே அல்லற்படுவார்க ளென்றும் நல்லவர்கள் இன்பம் துய்த்து வாழ்வார்களென் றும் ஒரு கருத்து உலவி வருகிறது. இது மனிதனது விருப்பத்தைக் குறிப்பதேயல்லாமல், உண்மையை உணர்த்துவதாகாது. உலக நன்மைக்காகப் பாடுபடும் தூயோர், துன்புற்றுத் திமிதித்துத் தியாகம் பல புரிந்து தான் தமது குறிக்கோளை அடைகின்றனர். இராமன் கோசல வாழ்வைத் துறந்து காட்டில் இன்னலுற்றுன்; இன்னுயிர்க் காதலியையும் இழந்து தவித்தான். கற்பின் திண்மைக்குக் கலங்கரை விளக்கமெனத் திகழும் சீதை செய்த தவம், அடைந்த துன்பம், அனுபவித்த துயர், பொறுத்த அவச்சொற்கள் கொஞ்சநஞ்சமா? ஊண் உறக்கம் துறந்து, வெயிலிடைப் பட்ட விளக்கு என ஒளி இழந்து, கண்கள் சுரக்கும் நீரில் நனைந்தும், உடலின் வெப்பததால் உலர்ந்தும், நெஞ்சு நைந்து நெக்குருகிப் பொறுமையின் கோட்டைத் தொட்ட புனித வனிதையல் லவா சீதை? இலங்கையைத் தன் கற்புக் கனலால் எரித்த

மைதிலிக்கு, இராமனது ஐயத்தைச் சுட்டெரிக்கத் தீக் குளிக்கும் சோதனையும் நேர்ந்ததல்லவா? ஆனால் கொள் கைப் பிடிப்பும் லட்சிய தாகமும் கொண்ட நல்லோர்கள் துன்புற்றுத் தியாகம் புரிவதைப்போல, வாலியும் இன்ன லுற்று மாய்ந்தான் என்று கொள்வது பிழையாகும். தீமையை எதிர்த்துப் போராடும் தூயோர், தீமையின் கொடுமையால் அல்லற்படுகிறார்களென்பது ஒன்று. அடுசர வடிவு தாங்கிய அறம் வாலிக்குக் கூற்றாக வாய்த் தது என்பது வேறொன்று. பின்னர், வாலிவதைக்கு அமைதி காண்பது எங்ஙனம்?

அடலாண்மையுடன் மதிநுண்மையும் மனத்திண்மை யும் உள்ளத்தின் உயர்வும் உரிமையாகப் பெற்றவன் வாலி. எனினும், அவன் சிற்றினம் சேர்தலென்ற குற்றத் தைப் புரிந்தான்.

இளம்பருவச் சமுதாயத்துக்கு இயல்பாக உள்ள அனுபவமின்மையால், அவனது நுண்மதியின் வினை யாற்றலுக்கு இடுக்கண் நேர்ந்தது. அவன் ஆய்ந் தோய்ந்து பாராமல், சூரிய குமாரனை அயிர்த்துச் சினம் கொண்டு சீறியதற்கும், தோழமை வரம் வேண்டித் தொழுத இராவணனை நண்பனாகக் கொண்டதற்கும் அனுபவமின்மையே காரணம். கண்ணால் காண்பதே மெய் என்ற கருத்தில் நிலைத்துநின்றதே காரணம். "எண் ணித் துணிக கருமம்" என்ற ஆணைவழி நடக்கும் ஆற்றல் கிஷ்கிந்தைச் சமுதாயத்துக்கும் கிடையாது; அதன் தலைவனுக்கும் கிடையாது. எனவே, பரிதி மைந்தன் குற்றமற்றவன் என்பதை வாலியால் உணரமுடியவில்லை. அதனாலேயேதான், இராவணன் இரந்துநின்றாலும் அவ னிடம் கரந்துநிற்கும் கொடுமையைக் கருதிப் 'பண்பிலார் கேண்மை' கூடாது என்று முடிவுசெய்ய வாலியால் இயலவில்லை.

மன நலம் நன்கு உடையர் ஆயினும் சான்றோர்க்கு
இன நலம் ஏமாப்பு உடைத்து

---

ஏமாப்பு-பாதுகாப்பு.

என்றார் வள்ளுவர். தூயஇனம் சேர்தலே சான்றோர்க்குப் பாதுகாப்பு ஆகும். சிற்றினம் சேர்தல், சான்றோருக்குப் பேராபத்தாக முடியும். எனவேதான்,

ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை
தான்சாந் துயரம் தரும் [முறை

என்று பேராசான் வள்ளுவர் அறிவுறுத்தினர். ஒருவன் நன்காராய்ந்து நல்லவர் நட்பைக் கொள்ளாமல், அவசரப் பட்டுத் தீயநட்புக் கொண்டால், அவன் சாதற்கு ஏதுவாய துன்பத்தினை இந்த வினையாலேயே அடைவான் என்பதை உணராத வாலி, இராவணன் இரந்துநிற்பதைக் கண்டு இரங்கி அவனைச் சுற்றமாகக் கொண்டான். "வன்துணையாய வாலி, வலியன்கொல?" என்று அனும னிடம் இராவணன் வினவியதிலிருந்தும்,

உந்தை என் துணைவன் அன்றே
ஓங்கு அறம் சான்றும் உண்டால்

என்று அங்கதனிடம் அவன் உரைத்ததிலிருந்தும், வாலி-இராவண நட்பின் திட்பத்தைத் தேர்ந்து தெளியலாம்.

வாலி சிற்றினம் சேர்ந்ததால்தான், அவன் இராம னுக்குத் துணைவனாக முடியாதென்பதையும், வாலிவதை இராவண வதத்துக்கு முன்னேற்பாடாக முற்றுப்பெற வேண்டுமென்பதையும், சுக்கிரீவனது துணையே கொள் ளத்தக்கது என்பதையும் தனு என்ற கந்தருவனும், சவரி என்ற வேடர்குல மாதும் ஓர்ந்து தெளிந்தனர். எனவே, இராமனை ருசியமுக பர்வதம் சென்று பகலவன் மைந்த னுடன் நட்புக்கொள்ளும்படி அறிவுறுத்தினர்.

---

கேண்மை-நட்பு. ஆய்ந்து-ஆராய்ந்து. கடைமுறை தான் சாந்துயரம் தரும்-முடிவில் தான் சாவதற்கு ஏது வாகிய துன்பத்தினை, தன் மாற்றார் விளைவிக்க வேண்டா மல் தானே விளைவிக்கும்.

மகோன்னதமாக விளங்கும் வாலியின் இயல்பில் அளவுகடந்த எளிமை என்ற குறை பின்னிக் கிடந்தது. அதனல் அவன் சிற்றின சகவாசம் என்ற குற்றத்தைப் புரிந்தான். குற்றமற்ற தம்பியை வெகுண்டு கொல்லக் கருதினுன். முன்னது அவனது கொலைக்குக் காரணமாக வும், பின்னது அந்த இறப்புக்கு வாய்ப்பாகவும் அமைந் தன. இவ்வாருகத்தான் வாலிவதைக்குக் கம்பன் அமைதி காட்டுகின்ருன்.

தீயவன் நட்புக்கு இணங்கிய குற்றத்தால் மாய்ந் தான் என்ருல், குற்றத்திற்கு ஏற்ற தண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது என்று பொருள்கொண்டு கவிதா நீதி எனப்படும் கோட்பாட்டுக்கு இதைச் சான்ருகக் கருத முடியாது. கவிதா நீதி வேறு, சமுதாய நீதி வேறு. பாத்திரத்தின் குணம் குறைக்கு ஏற்றபடி நன்மை, தீமை விளைகிறது என்ற கொள்கையைத்தான் கவிதா நீதி என்பர். எத்தனையோ அரியபெரிய குணங்களை உடைய வாலி, சிற்றினம் சேர்தலென்ற குற்றத்தைத் தெரியாமல் இழைத்துவிட்டான் என்பதற்காக அவன் கொலை செய் யப்பட்டான் என்ருல், அது கவிதாநீதி யாகாது. குணம், குற்றம இரண்டையும் ஒருங்குநோக்கி நன்மைதீமைகளை நிச்சயிக்கும் கவிதா நீதிக் கொள்கையின் கோணத்தில் நோக்கினுல், வாலிவதை அநீதியாகும். ஆனுல் கவிதா நீதி என்பது வாழ்விலோ, வாழ்வின் சாரத்தை உட்பொரு ளாகக் கொண்ட இலக்கியத்திலோ இடம்பெறுவது அரிது.

சமுதாய வாழ்வில் செயல்படும் நீதி அல்லது அறம் என்பது குறைகளுக்கு விரோதமானது. எனவே மனித ரின் குறைகளை அகற்ற அது முயல்கிறது. அந்தக் குறைகள் வாழ்வின் நோக்குக்கும் போக்குக்கும் பேரிடர் விளைவிக்காத நிலையில், அந்தக் குறைகள் உள்ளவர்களை அறம் திருத்த முற்படுகிறது. அனுபவத்தில் பாடம் கற்று மனிதன் மாறுவதையும் செம்மையடைவதையும் நாம் காண்கிருேமல்லவா? ஆனுல், வாழ்வின் கதிக்கு அணை யிடவும், முன்னேக்கிச் செல்லும் ஓட்டத்தைப் பின்னேக்

கிப் போகும்படி தூண்டவும் அந்தக் குறைகள் முயன்ருல், அவற்றைத் தாக்கும் அறம், அவற்றுக்கு உரியவர் களையும் அழித்துவிடுகிறது. இரக்கமில்லாமல் இந்தக் காரியத்தைச் செய்துவிடுகிறது. வாலிவதை இவ்வாறு தான் நிகழ்கிறது.

வாலியின் மனம் தூயது. ஆனல் அவனது குறை, திருத்தத்துக்கு உரியது அல்ல. சமுதாயத்துக்குச் சாத்தானுக வாய்த்திருக்கும் இராவண ஆட்சியை அழிக்க, வாழ்வின் பிரவாகம் திரண்டு செல்லுங்கால், இராவண சகவாசம் என்ற குற்றம் புரிந்து, தடைமதிலென இடை வந்து நிற்கிருன் வாலி. தடைமதிலைத் தயவுதாட்சண்ய மின்றித் தகர்த்தெறிவதைத் தவிர அறத்துக்கு வேறு வழி யில்லை. எனவே, வாலிவதை நிகழ்கிறது.

தீமை அழிவதில் சோகம் இல்லை. தீமையின் அழி வுக்காக ஏற்படும் நன்மை நாசம்தான் சோகத்துக்குத் தோற்றுவாய். இராவண வதத்தின் பொருட்டு, எத் தகைய வாலி வீழ்ச்சி அடைகின்ருன் என்பதைக் காணும் பொழுது, நாம இரங்கிநிற்கிருேம். அவனிடம் உள்ள குறை, நம்மில் எவரிடமும் இருக்கமுடியும் என்பதால், அவனை உடன்பிறந்தவனுகவே கருதி, ஒரு பாசமும் நேச மும் கொள்கின்ருேம். அவனது துன்பத்தைக் கண்டு மனம் வருந்துவதுடன் அத்தகைய குறைக்கு இடம் கொடாமல் வாழ முற்பட்டுத் தூய்மை அடைகிருேம்.

குற்றம் என்று உணர்ந்து உள்நோக்கத்துடன் செய் வது ஒன்று. குற்றம் என்ற தெளிவு இல்லாமல் செய்வது இன்னென்று. வாலி, புரியாமல் செய்த குற்றத்துக்காக மாய்கிருன் என்பதைக் கண்டு நாம் கண்ணழியக் கலுழ் கிருேம். கொல்லம்பு மருமத்தில் பாய்ந்த பின்பும், தன்னை மறந்து, இராமன் பழிசூடியதை எண்ணி நாணு வதையும், தன் குற்றத்தை உணர்ந்தபின் இராமனைத் தொழுது மன்னிப்பு வேண்டுவதையும், தன்னைக் கொல் வித்த தம்பியின் நன்மையை நாடி வரம் வேண்டுதலையும், இளையவனுக்கும், மைந்தனுக்கும் தகவுரை புகன்று அவர்களைத் தலைவனிடம் ஒப்படைப்பதையும், மாயவரக்

கனை வாலிற் பற்றிக் கர்வபங்கம் செய்ய இயலாது நேரிட்ட நிலைக்கு வருந்துவதையும், அரக்கரை அழிப் பதற்கு அனும-சுக்கிரீவரும் அங்கதனும் உற்ற துணைவ ராவரென்று கூறிப் பூரிப்பதையும் கண்டு, மனத்தூய்மை யின் மேன்மைக்கு முன்மாதிரியாகத் திகழும் இச் சான்றோனுக்குக் கரங் கூப்புகிறோம். கடல் கடைந்த தோளனோடு உடல்கலந்த தாரை பதறும்பொழுது, நாமும் கையறுநிலையில் கதறுகிறோம். சிறியன சிந்தியாதானை இந்திரன் செம்மலின் சீர்த்திகேர்த்திகளை உணர்ந்து கடைப்பிடித்துத் தூயோராக உயரத் துடிக்கிறோம். துன்பியல் நாடகக் கலையில் வல்லவனாக விளங்கும் கம்பனது மாட்சிக்கே வாலிவதை சாட்சியாகக் காட்சி தருகிறது.





